# ாங்கையர் மலர்

MANGAYAR MALAR

ஜூலை '81 ரூ.1-50





நான் ஸ்கூலுக்குப் போகணுமே!

மங்கையர் மலர்

ஜூலை 1981









சந்தா விவரம்

தனிப்பிரதி ரூ. 1-50
ஆண்டுச் சந்தா ரூ. 18/-
ஆறு மாத சந்தா ரூ. 9/-

Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032 (Phone: 431543) Editor: K. Kasturi Rangan

# ஆயிரத்தில் ஒருத்தியம்மா நீ..

## நட்சத்திர வாழ்க்கை

உருண்டை முகம்; பேசும் கண்கள்! கண்கள் மட்டுமா? முகமே பேசும்! அந்தக் கண்களும், மூக்கும், வாயும், நெற்றியும் எத்தனை எத்தனை கதைகளைச் சொல்லும்! சொல்லத் தெரியாத சோகக் கவிதையாக மாறிவிட்டது அந்த மாபெரும் நட்சத்திரத்தின் வாழ்க்கை.

சாவித்திரி!

மறக்க முடியுமா அந்தப் பெயரை? மகராசியாக வாழ்ந்து, காரும், பங்களாவும், கண் நிறைந்த கணவருமாக இருந்த அந்தப் பெண்மணியின் நிலை என்ன?

சின்னஞ் சிறிய வீடு. அதற்குள் ஓர் அறையில் உயிர்ப் பறவை இருக்கிறது என்று அடையாளம் சொல்ல ஏறி இறங்கும் நெஞ்சக் கூட்டைத் தவிர வேறு சலனமும் இல்லை. ஒரு நாள் இரண்டு நாளாக இல்லை, வருடம் ஒன்று ஓடிவிட்டது! எந்த மாற்றமும் இல்லை

மருத்துவர்கள், ''அவர் 'கோமா' ஸ்டேஜில் இருக்கிறார்'' என்று சொல்லி விட்டார்கள்.



அவரைப் பற்றிப் பேசும்போதே விழியோரம் துளிர்த்த நீரைச் சுண்டி யெறிந்து விட்டத்தைப் பார்க்கிறார் ஜெமினி கணேஷ்.

''அவளைப் போன்ற சிறந்த நடிகையை உலகம் முழுவதும் தேடினாலும் கிடைக்காது. என் மனைவிதான். அது இரண்டாம் பட்சம் தான். நான் அவளுடைய ரசிகை. அது தான் முதல் பட்சமான விஷயம். ஆனால் அவளுடைய வாழ்வையும், வீழ்ச்சியையும் முழுவதுமாகப் பார்த்து விட்டேன். அதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன'' என்கிறார்.

சாவித்திரியின் வாழ்வை எழுத வேண்டும் என்பதுதான் நோக்கம். ஆனால் சாவித்திரியையும், ஜெமினியையும் பிரிக்கவே முடியாதபடிதான் அவர்களின் வாழ்க்கை இருந்திருக்கிறது.

'ஜெமினி — சாவித்திரி:'

இப்படித்தான் அவர்களை ரசிக உலகம் அறியும். எனவே அவர்களின் வாழ்வே மற்றவர்களுக்கு வழிகாட்டியாக, உதாரணமாக இருக்கும் என்றுதான் தோன்றுகிறது.

''அந்தச் சின்னப் பெண்ணை நான் சந்தித்தது ஜெமினி ஸ்டுடியோவில் வைத்துத்தான். அப்போது நான் ஜெமினி ஸ்டுடியோவில் வரும் நடிக, நடிகையர்களைத் தேர்ந்தெடுப்பவனாக இருந்தேன். அப்போதுதான் சாவித்ரி தன் தந்தையோடு வந்தாள்.

ஏதோ ஒரு பாட்டுப் பாடி நடனமும் ஆடினாள். அவளுடைய கண்கள் சுழலும் வேகமும், பேசும் முகமும் இவளுக்குச் சிறந்த எதிர்காலம் ஒன்று இருக்கிறது என்று கூறியது. அப்படித்தான் என்னுடைய குறிப்பேட்டில் எழுதினேன். ஆனால் அப்போது நல்ல வேடங்கள் ஒன்றும் இல்லாததால் அவளை அனுப்பி விட்டேன்.

நானும் நடிகனானேன். மூன்று பிள்ளைகள் படத்தில் நானும் ஒரு பிள்ளையானேன். தாயுள்ளம் படத்தில் ஒரு வேடிக்கை. மனோகர் கதாநாயகனாகவும் நான் வில்லனாகவும் நடித்தேன். அப்போது பத்திரிகைகளில் எல்லாம் கூட 'யாரிந்த அழகான வில்லன்?' என்று கேட்டிருந்தார்கள்.

சாவித்திரியும் முதலில் 'கல்யாணம் பண்ணிப் பாரில்' நடித்தாள். அவளுடைய இரண்டாவது படம்தான் தேவதாஸ். தெலுங்கிலும் தமிழிலும் தேவதாஸை ஒன்றாகத் தயாரிக்க முற்பட்ட போது யாரைக் கதாநாயகியாக்குவது என்று யோசித்தார்கள். கல்யாணம் பண்ணிப் பாரில் அவள் நடித்திருப்பதைப் பார்த்தவுடன் அவளை 'புக்' செய்து விட்டார்கள்.

அப்பப்பா! படமா அது? சாவித்ரியா அவள்? யார் அவளைச் சாவித்திரியாகப் பார்த்தது? இந்தப் பெண் நடித்தாள் என்று சொன்னார்கள். பார்வதி வாழ்ந்து இறந்த கதையல்லவா?

சொல்லும்போதே அவருக்குக் குரல் தழுதழுக்கிறது. இவர் உண்மையிலேயே சாவித்திரியின் ரசிகர்தான். மனைவியைப் பற்றிப் பேசும்போதே குரல் தழுதழுக்கிறது.



ஜெமினி — சாவித்திரி இணைந்து ஏராள மாகப் படங்களில் நடிக்க ஆரம்பித்தார்கள். ஆரம்பம் மிஸ்ஸியம்மா! படம் முடியும் தறுவாயில் இருவருக்குமிடையே ஏதோ நிகழ்ந்திருப்பதை இருவருமே புரிந்து கொண்டார்கள். அதற்குப் பெயர்தான்— காதல்!

காதலா?

''என்னால் காதலைப் புரிந்து கொள்ள முடியவில்லையம்மா. உண்மையில், நாம் சொல்லிக் கொண்டிருப்பதெல்லாம் காதலா என்று பார்த்தால் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். அவை யெல்லாம் வெறும் காமம்தான்.

காமம் என்று உடல் ரீதியாக ஆரம்பித்து, உள்ளத்தில் போய் இறுகப் பற்றிக் கொள் கிறதுதான் காதல். இதோ இப்பொழுது அவள் கிடக்கும் நிலையை நினைத்து நெஞ்சக் கண்ணீர் சிந்துகிறதே! அதுதான் காதல் என்று நினைக்கிறேன்!

என் வாழ்க்கையில் எத்தனையோ துன் பங்கள் வந்தபோதும் அத்தனையிலும் துணை யாக நின்று ஆறுதல் படுத்துகிறாளே என் முதல் மனைவி பாப்ஜி! அவளையே தெய்வ மாக நான் நினைக்கிறேனே, அதுதான் காதல்.

மற்றவையெல்லாம்வெறும் காமம்தான்!''

அது காமமோ, காதலோ இவர்கள் இணைந்து வாழ ஆரம்பித்தார்கள்.

சாவித்ரி 'நடிகையர் திலக'மானார்.

எத்தனை படங்கள்!

எத்தனை பாவங்கள்!

எத்தனை பாத்திரங்கள்!

பாச மலர்த் தங்கையாகிப் பாசத்தைக் கொட்டினார்!

'பார்த்தால் பசி தீரும்' என்று ஏங்கி நின்ற காதல் மனைவி!

'மாயா பஜார்' சுந்தரி!

'கை கொடுத்த தெய்வத்தில்' அரைப் பைத்தியம்!

எல்லாமே சாத்திரியின் கைவண்ணங்கள். கே. எஸ். ஜி. கை கொடுத்த தெய்வத்தின் 'ரஷ்'ஷைப் பார்த்துவிட்டுக் கண்கலங்கி அழுதுவிட்டார்.

''அம்மா, நான் அந்தப் பெண்ணை என் கற்பனையில் ஓர் உருவமாகத்தான் படைத் தேன். நீ அவளுக்கு உயிர் கொடுத்து, ஆடி ஓடவிட்டு, சிரஞ்சீவியாக வாழ வைத்து விட்டாயே!''

அந்தப் படத்தைப் பார்த்தவர்கள் அந்தப் பரிதாபத்துக்குரிய பெண்ணை, ஜன்மத்துக்கு மறப்பார்களா?

நடிப்பின் சிகரம் ரங்கா ராவ்! நான்கு மணி நேரம் உயிரைக் கொடுத்து வசனம் பேசி நடிப்பவர்களை யெல்லாம் ஒரு சின்னத் தலையசைப்பால், 'ம்ஹூம்!' என்ற ஒற்றை வசனத்தால் விழுங்கி ஏப்பம் விட்டு விடுவார்! அப்படிப்பட்டவரும் முகவாயில் கைவைத்த நேரம் உண்டு:

மாயா பஜாரில்; ரங்காராவின் ஆவி சாவித்ரியின்உடம்பில் புகுந்து கொள்வதாகக் கதை. எனவே சாவித்ரி ரங்காராவைப் போல நடந்து போய் நாற்காலியில் உட்கார



வேண்டும். நாற்காலி தூள் தூளாகிவிடும்.

படப் பிடிப்பு முடிந்தவுடன் அந்தக் காட்சியைப் போட்டுப் பார்த்தார் ரங்காராவ்.

''அம்மா, நான் நடிப்பது போலவே தத்ரூபமாக நடித்து விட்டாய், உண்மை தான். ஆனால் அந்தக் காட்சியில் உன்னைப்போல் என்னால்கூட நடிக்க முடியாது!''

அந்த நடிப்பிலே இமய மலை இந்தப் பெண்ணுக்குச் சொன்ன பாராட்டு இது.

அப்படி உயர்ந்து உயர்ந்து போய்க்கொண்டிருந்த சாவித்திரி, குணத்திலே குழந்தையைப் போன்றவர். தன் கணவரைத் தவிர வேறொன்றும் அறியாதவர்.

முத்து முத்தாக இரண்டு குழந்தைகள். ஒரு ஆண், ஒரு பெண்.

அந்திராவிலே இந்தத் தம்பதியருக்குப் பெரும் மதிப்பு. தமிழ் நாட்டிலே இவர்களை ஆதர்ச தம்பதிகளாகவே கொண்டாட ஆரம்பித்தார்கள்.



''அதோ போறாங்களே அழகா ஒரு தம்பதி. ஜோடிப் பொருத்தம் பிரமாதமா இல்லே? ஜெமினி—சாவித்திரி மாதிரி இருக்காங்க இல்லே?''

''டேய்,.அவங்களுக்கு என்ன திமிர்பாரேன், பெரிய ஜெமினி—சாவித்ரின்னு நினைப்பு போலிருக்கு!''

சினிமா பீல்டில் புதிதாகத் திருமணம் செய்துகொள்ளும் எவரும் இந்த நட்சத்திரத் தம்பதிகளிடம் வந்து ஆசிர்வாதம் பெற்றுச் சென்றனர்.

அந்தச் சின்னக் குடும்பம் மகிழ்ச்சிகரமாக வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தது. இருவருமே கடுமையாக உழைத்தார்கள். இரவும் பகலும் ஓயாத படப் பிடிப்பு. ஏராளமான படங்கள், வெள்ளி விழாக் கொண்டாடிய படங்கள் பல.

''நாங்கள் வீட்டிலிருந்து தேவையான எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு போய் விடுவோம். தண்ணீர் கூடத் தயாரிப்பாளரைக் கேட்க மாட்டோம். நாங்கள் எது கேட்டாலும் அவர்கள் கொடுக்கத் தயாராக இருந்தார்கள். பரஸ்பரம் மரியாதையைக் காப்பாற்றிக் கொள்வோம்.

நடிப்பிலே புலிகள் உலாவிக் கொண்டிருந்தார்கள். டைரக்டரின் கீழ் பய பக்தியுடன் பணியாற்றினார்கள். சினிமா உலகம் மரியாதையான பெயருடன் நடந்து கொண்டிருந்தது.

யார் கண் பட்டது?

சாவித்திரி வீடு வாங்கினார். தோட்டம் போட்டார். தனக்கென்று ஒரு நீச்சல் குளம். அதற்குள்ளேயே கட்ட வேண்டும் என்ற ஆசை. கணவருக்கு அது பிடிக்கவில்லை.

''அம்மா, தெற்குப் பக்கம் பார்த்துத் தோண்டக் கூடாது. வீட்டுக்கு ஆகாதம்மா'' என்று மறுத்தார்.

குழந்தைப் பிடிவாதம் கொண்ட சாவித்திரிக்குக் கோபம் வந்து விட்டது. நீச்சல் குளம் கட்டினால்தான் வருவேன் என்று கூறி விட்டு ஹைதராபாத் போய்விட்டார்.

''நீச்சல் குளம் மட்டுமா வெட்டினேன்? அவளுடைய சிறப்பான வாழ்வுக்கும் சேர்த்தல்லவா குழி வெட்ட வேண்டியதாயிற்று!''

அன்றையிலிருந்து ஏதோ ஒரு தகராறு கிளம்பிக்கொண்டே இருந்திருக்கிறது. சாவித்திரிக்கு நிறையக் கோபம் வர ஆரம்பித்தது. சண்டைகள் குடும்பத்தில் எழ ஆரம்பித்தன.

''ஆமாம். நிறைய என்னுடன் சண்டை போட்டாள் சாவித்திரி. நான் என்னுடைய பலவீனங்களை ஒத்துக் கொள்கிறேன். நான் ராமன் இல்லைதான். ஆனால் இராவணனாக இல்லையே! என் வாழ்க்கையை கிருஷ்ணனாகக் கழித்து விட்டேன். என்ன செய்யட்டும்? தெரிந்த விஷயத்துக்கு மீண்டும் மீண்டும் சண்டை போட்டால் என்ன அர்த்தம்?''

கணவன் மனைவியிடையே விரிசல் பட ஆரம்பித்தது.



இரண்டு குழந்தைகள்; பல்வேறு மனக்குழப்பம்; மனச் சிக்கல்! இவற்றால் உடம்பைக் கவனிக்க முடியவில்லை. சதை போட ஆரம்பித்தது. மெல்ல மெல்ல படங்களும் தேய ஆரம்பித்தன.

ஆனால் நடிகையர் திலகத்தினை சினிமா உலகம் விட்டுவிட முடியுமா? டைரக்ஷன் செய்ய வேண்டும் என்று சொன்னார்கள். அந்தக் 'குழந்தை மனம்' முதலில் பயப்பட்டது. பிறகு எல்லோருடைய உற்சாகத்தாலும் ஏற்றுக் கொண்டது.

'சின்னரி பாப்பலு' வெற்றிகரமாக ஓடியது.

அடுத்தடுத்து படங்கள் டைரக்டர் சாவித்திரிக்கு வர ஆரம்பித்தது. இதுவரை கணவர், குழந்தைகள், படப் பிடிப்பு என்று இருந்த உலகம் விரிவடைய ஆரம்பித்தது.

ஸ்டுடியோவில் அனைவருடனும் பழகவேண்டிய சூழ்நிலை. பல் வேறுபட்ட தயாரிப் பாளர்களுடன் கலந்தாலோசிக்க வேண்டும். சின்னஞ் சிறு உலகம் பெரிதானது.

உலகத்திலே நல்லவர்களும் உண்டு, கெட்டவர்களும் உண்டு.



சினிமா உலகையோ அதன் ரசிகர்களையோ இப்படித்தான் என்று யாரால் கணிக்க முடியும்? குப்பைத் தொட்டிப் படம் திடீரென்று வெள்ளி விழாக் கொண்டாடும். உயிரைக் கொடுத்த எடுத்த படம் இரண்டே நாட்கள் ஓடி, தயாரிப்பாளரின் நெஞ்சை அடைக்கச் செய்யும். இந்த உலகத்திலேயே இருந்த சாவித்திரிக்கு இது தெரியாதா? தெரியும். ஆனால் அவருடைய 'பிராப்தம்' அவ்வளவுதான்.

தன் நடிப்புத் திறனை மட்டுமல்ல, பணத்தையும் கொட்டிச் சொந்தப் படத்தை எடுத்தார். ஆயிரம் இடைஞ்சல்கள், ஆயிரம் இடையூறுகள்.

இந்த வீம்பெல்லாம் எதற்காக? கணவரின் மேல் இருக்கும் கோபத்தை மறக்கவா? கணவருக்குத் தான் எல்லாவிதத்திலும் உயர்வானவர் என்று காட்டவா? பெண்ணுணை தன்னால் சகலத்தையும் செய்ய முடியும் என்ற துணிவா?

எதுவோ? ஆனால் ஜெமினி வேண்டாம் என்று சொல்லியும் கேட்காமல் மிருந்த பொருட் சேதத்தில் 'பிராப்தம்' படத்தை எடுத்து முடித்தார்.



''நான் முதலிலிருந்தே செய்த தப்பு அவளை அதிகம் கண்டிக்காதது தான். குழந்தையைப் போல இருந்த அவளை எனக்குத் திட்ட மனம் வராது. அதனால் அவளிடம் நல்லதனமாகவே சொல்லிப் பார்த்தேன். கேட்கவில்லை. சரி, இனி அவளிஷ்டம், எப்படிப் போகிறுளோ போகட்டும் என்று விட்டு விட்டேன்.''

பல நண்பர்கள் அப்போது ஏற்பட்டார்கள்.

''நாங்கள் எதற்காக இருக்கிறோம். உங்களின் கவலையை விடுங்கள்.''

இது எத்தனை மொழிகளில்?
தெலுங்கில்,
தமிழில்,
மலையாளத்தில்!

பணம் இருக்கும்வரை எல்லோரும் நண்பர்கள்தான்! பார்த்துக் கொள்வார்கள்தான்; ஆனால் எல்லாவற்றையும் விற்க வேண்டிய அளவுக்கு நஷ்டம் வந்து ஒன்றுமில்லாமல் நின்றபோது—

யாருமில்லை!

கவலைகள், கவலைகள், கவலைகள்!

அழகுப் பதுமையாய் ரசிகர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டவரின் உள்ளமெல்லாம் ரணங்கள்!

குடும்பக் கவலை, பணக் கவலை, தொழில் கவலை, வருமானவரிக் கவலை!

இளைத்துத் துரும்பானுர். பேசும்கண்கள் பஞ்சடைந்த

கண்களாயின. கன்னங்கள் ஒட்டிப்போய், கால்கள் குச்சியாகி... கவலைகளை மறக்கப் பல வழிகளை நாடியதன் பலன்-

எல்லாவற்றையும் இழந்தார் சாவித்ரி!

ஜெமினி மனம் உடைந்து சொன்னார், "அம்மா, நீங்களெல்லாம் யாரிடம் வேண்டுமானாலும் உங்கள் பிடிவாதத்தைக் காட்டலாம்.

நீங்கள் செய்யும் தொழிலில் காட்டுங்கள், உயர்வடைவீர்கள். மாமியாரிடம் நாத்தனாரிடம், அம்மாவிடம், அப்பாவிடம் உலகத்திடம் காட்டுங்கள். ஆனால் கணவனிடம் மட்டும் பிடிவாதத்தைக் காட்டாதீர்கள். அவன் மனம் உடைந்து போவான்.

அதே போலத்தான் கணவன் மனைவிக்குள் தகராறு என்றால் அதை நாலு அறைக்குள் தீர்த்துக்கொள்ள முயற்சி செய்யுங்கள். அது அடிதடியாக இருந்தால் கூடப் பரவாயில்லை. வெளியே மட்டும் சொல்லிவிடாதீர்கள். மூன்றாமவனுக்கு உங்களுடைய பலவீனம் தெரிந்து விட்டால் பரம சந்தோஷம்.

ஏனென்றால் மனிதனுடைய இயல்பே மற்றவனுடைய கஷ்டத்தைப் பார்த்துச் சந்தோஷப்படுவதுதான்."

எல்லாமே அனுபவித்த பிறகுதான் பாடமாக நிற்கிறது. ஆனால் துன்பங்களை, வேதனைகளை அனுபவிக்கும்போது அரற்றத்தான் தோன்றுகிறது. தலைக்கு மேலே கவலைகள் போய்விட்டால்...? நான் முழுக்க ஆயிரம் கவலைக் குளவிகள் தலையைக் குட்டிக் கொண்டிருந்தால்....?பேதைப் பெண் என்ன செய்ய முடியும்?

"இறைவா, எனக்கு இந்தத் துன்பங்களிலிருந்து விடுதலை கிடைக்காதா?"

என்று கதறத்தான் தோன்றும்.

இறைவனுக்கும் கருணை பிறந்தது.

"எந்தக் கவலையும் இல்லாமல் தூங்கு தாயே! உலகில் பெண்ணாகப் பிறந்து, எவ்வளவு கஷ்டங்களை அனுபவிக்க வேண்டுமோ, அவ்வளவையும் அனுபவித்து விட்டாய். நிம்மதியாகத் தூங்கு!" என்று வரம் கொடுத்து விட்டார்.

உயிர்ப் பறவை மட்டும் இறகுகளை அடித்துக்கொண்டிருக்கிறது. மற்றபடி நினைவும் இல்லை, அசைவும் இல்லை. 'கோமா' நிலையில் சாவித்திரி வாழ ஆரம்பித்து ஒரு வருடமாகி விட்டது.

திரையுலகில் ஒப்பாரும் இல்லை; மிக்காரும் இல்லை என்று மகாராணியாக வாழ்ந்த திருமதி சாவித்திரி இப்போது சிறிய வீட்டில் நினைவில்லாமல் கிடக்கிறார். இந்த வாழ்க்கைக்கு இறைவன் சொல்லப் போகும் தீர்ப்பு என்னவென்று தெரியவில்லை.

—மஞ்சுளா ரமேஷ்



## பலாக்கொட்டை போண்டா

**தேவையான பொருட்கள்:**

பலாக்கொட்டை 20
பச்சைமிளகாய் 2
காரபொடி 1 ஸ்பூன்
தேங்காய் 1 மூடி
கடலை மாவு முக்கால் டம்ளர்
அரிசி மாவு அரை டம்ளர்
கடலை எண்ணெய் (அ) டால்டா 2 டம்ளர்
இஞ்சி சிறிய துண்டு 1
உப்பு தேவையான அளவு
வெங்காயம் 150 கிராம்

**செய்முறை:**

பலாக் கொட்டையை நன்றாகக் கழுவி ஆவியில் வேக வைத்துத் தோலை உரித்து வைக்கவும். பச்சை மிளகாயை நறுக்கிக் கொள்ளவும். தேங்காயைத் துருவிக் கொள்ளவும். கடலை மாவு அரிசி மாவு இரண்டையும் போட்டு, காரப்பொடி, உப்பு போட்டுத் தண்ணீர் விட்டுக் கெட்டியாகக் கரைத்துக் கொள்ளவும். வெங்காயத்தைத் தோலுரித்து நறுக்கிக் கொள்ளவும்.

வாணலியில் கொஞ்சம் எண்ணெய் விட்டு பச்சை மிளகாய், வெங்காயம் ஆகியவற்றைப் போட்டு நன்றாக வதக்கிக்கொள்ளவும். வதங்கியவுடன் பலாக்கொட்டை, தேங்காய் இஞ்சி போட்டு இரண்டு நிமிடம் கிளறி, இறக்கவும். ஆறியவுடன் சிறிய உருண்டையாக்கி, எண்ணை நன்றாகக் காய்ந்தவுடன் கடலை மாவுகரைத்து வைத்ததில் பலாக் கொட்டை உருண்டையைப் போட்டு எண்ணெயில் போடவும். பொன்னிறமாக வந்ததும் எடுக்கவும். இது டிபனுக்குச் சாப்பிட நன்றாக இருக்கும்.

-சாவித்திரி நடராஜன்

# குழந்தையின் அறிவு வளர்ச்சி

— சென்ற மாதத் தொடர்ச்சி

சென்ற இதழில் ஒரு வயது வரையிலான குழந்தைகளின் அறிவுத் திறனை எப்படியெல்லாம் வளர்க்கலாம் என்றுபார்த்தோம்.

இதற்கடுத்த ஓராண்டு குழந்தையின் அறிவு வளர்ச்சியில்மிகவும் முக்கியமான ஆண்டுகள். பொருள்களைத் தெரிந்துகொண்டு சமூகத்துக்குஅறிமுகமாகும்பருவம் இது தான். மற்றகுழந்தைகளுடன் விளையாடச் செல்வதன் மூலம் அதனுடைய மனமும் விசாலமடைகிறது. எனவே இப்பருவத்தின் வளர்ச்சியும் தாய்மார்களின் கையில்தான் இருக்கிறது.



### பதின்மூன்றும் மாதம்

தாய் ஓரளவு உயரமான சேரிலோ, திண்ணையிலோ உட்கார்ந்து கொண்டு குழந்தையைப் பாதங்களில் உட்கார்த்தி வைத்துக் கொண்டு, அதனுடைய கைகளைப்பிடித்துக்கொண்டு ஊஞ்சல் போல ஆடலாம். இது நாம் செய்து வரும் ஒன்றுதான்.

இதன் மூலம் தாயின் உதவியோடு குழந்தை எதிர்க் காற்றைச் சந்திக்கிறது. விலகி விலகி ஆடுவதன் மூலம் அதன் பயம் தெளியும். பிறக்கும்போது கைகளை இறுக மூடிக் கொண்டு, கால்களைக் குறுக்கிக்கொண்டு வெளியுலகச் சத்தத்தால் பயந்து அழும் குழந்தை, இங்கே அம்மாவின் துணையால் தைரியம் பெறுகிறது.

### பதினான்காம் மாதம்

உங்கள்பின்னாலேயே குழந்தை சுற்றிக் கொண்டிருக்கும். நீங்கள் கறிகாய் வாங்கினால் கூடையைப் பிடுங்கிக் கொண்டு போய் விடும்.

துணியை மடித்து வைத்தீர்களானால் இழுத்துக் கொண்டு ஓடும்.

அதிகம் கடிந்து கொள்ளாதீர்கள். எதையேனும் புதிது புதிதாய்ச் செய்ய வேண்டும் என்று ஆர்வம் கொள்ளும் அக்குழந்தையின் செயலைக் கொஞ்ச நேரம் அப்படியே விட்டு விடுங்கள். பிறகு நல்லவிதமாகச் சொல்லி வாங்கி வைக்கலாம்.

எதையும் செய்யாதே என்று சொன்னால் அதையேதான் செய்யும் குணம் கொண்ட பருவம். எனவே நீங்கள் மறுக்க மறுக்க அதன் பிடிவாதம்தான் அதிகமாகும். கண்ணாடிப் பாத்திரத்தைக் கையாளுவது போல ஜாக்கிரதையாகக் கையாள வேண்டிய பருவம் இது.

## பதினைந்தாம் மாதம்

சமதரையில் நன்றாக நடக்கும் குழந்தை, அடுத்த படியாகப் படிகளில் ஏற ஆரம்பித்து விடும். அது உடலுக்கும் நல்ல பயிற்சிதான். ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டியதுதான் அன்னையின் பொறுப்பு.

நீங்களே கையைப் பிடித்துக் கொண்டு ஏறச் செய்யலாம்.

'இப்போது மேலே போறோமா?'

'உயர வந்துட்டோம், பார்!'

'இமே போகலாமா?'

இப்படி நிறையப் பேசலாம். குழந்தை இதன் மூலம் புதிய புதிய வார்த்தைகளைக் கற்றுக் கொள்கிறது.



## பதினாறும் மாதம்

பல பெட்டிகளை இணைத்த ரயில் வண்டியை அமைத்துக் கொடுக்கலாம்.

அதை இழுத்துச் செல்லும் போதும், விளையாடும் போதும் எல்லா வண்டிகளும் ஒழுங்காக வருகின்றனவா, ஏதாவது விட்டுப் போயிற்று என்றெல்லாம் குழந்தை கவனித்துக்கொள்ளும். இது ஒரு நல்ல பயிற்சி. இதன் மூலம் குழந்தையின் கவனம் வளர்க்கப்படுகிறது.

## பதினேழாம் மாதம்

தண்ணீர் என்றால் படு குஷிதான். எந்தக் குழந்தைக்குத்தான் இல்லை? கொதிக்க வைத்து ஆறவைத்த தண்ணீரை ஒரு பெரிய பிளாஸ்டிக் தொட்டியில் கொட்டி அதனிடம் கொடுத்து விடுங்கள்.

பொம்மைகளை ஜோராகக் குளிப்பாட்டும். தண்ணீரைத் தொட்டு உணரும் ஆசை தீரும். நீங்கள் தண்ணீரில் விளையாடாதே என்று கடிந்துகொள்வதை விடக்கொஞ்ச நேரம் இப்படிக் கொடுப்பதன் மூலம் முரட்டுப் பிடிவாதம் தவிர்க்கப்படுகிறது.

## பத்தொன்பதாம் மாதம்

கைகள் துருதுருவென்று அலையும். கையில் சின்ன சாக்பீஸ்

கிடைத்தாலும் வீடெல்லாம் கிறுக்கிவிடும். பழைய செய்தித் தாள்களையும் பென்சிலையும் கொடுத்து விடுங்கள். மிகவும் சுவாரசியமாகக் கிறுக்கிக்கொண்டு இருக்கும்.

## இருபதாம் மாதம்

சிறிய ஊஞ்சல் ஒன்றைக்கட்டி அதில் உட்கார்த்தி வைத்து மெல்லஆட்டுங்கள். பதின்மூன்றும் மாதத்தில் தாயின் உதவியுடன் ஆடிய குழந்தை தானாக இப்போது ஆடும்போது தன்னம்பிக்கையும், தைரியமும் வளருகிறது.



## இருபத்து மூன்றும் மாதம்

ரேடியோ, டேப் – ரிக்கார்டரை வைத்துப் பாடல்களைக் கேட்கச்செய்யுங்கள். குழந்தையுடன் சேர்ந்து நீங்களும் பாடுங்கள். நல்ல இசை ஞானமும், மென்மையான குணங்களும் இதன் மூலம் வளரும்.

## இரண்டு வருடங்கள்

குழந்தைக்குத் தானாகவே சிறு சிறு சாதனைகளைச் செய்ய வேண்டும் என்ற ஆர்வம் இருக்கும். அந்த ஆர்வத்தை நன்றாக வளர விட வேண்டும்.

ஆணியை முடுக்குதல், சிறு மேடை கிடைத்தாலும் அதன் மேல் ஏறுவது, சறுக்குப் பலகையில் சறுக்குவது என்று எதையேனும் ஒன்றைச் செய்து கொண்டே இருக்கும். குழந்தை விளையாடும் சாமான்களைத் தீங்கில்லாததாகப் பார்த்துக்கொண்டு அதைமுழுமையாக விளையாட விடுங்கள்.

இப்போது குழந்தை மற்ற குழந்தைகளுடன் விளையாடுவதன் மூலம் சமூகத்தில் நுழைகிறது. எனவே இந்தச் சமயத்தில் நல்லவிதமாக வளர்த்து, நல்ல அறிவுத்திறனை வளர்க்க வேண்டியது அவசியம்.

குழந்தைக்குப் பாடல்களைக் கற்றுத் தருவது, அதனுடைய விளையாட்டையெல்லாம் உற்சாகப்படுத்துவது எனக் குழந்தை வளரும் இந்தப் பருவத்தில் அறிவை, தன்னம்பிக்கையை வளர்த்தால்தான் எதிர்காலத்தில் அறிவுள்ள மனிதர்களாக்க முடியும்.

பின்னால் என் குழந்தைக்குப் படிப்பு வரவில்லை, முரடனாக இருக்கிறான் என்றெல்லாம் அழுது பிரயோஜனமில்லை.

குழந்தைகளை நல்லவர்களாக, அறிவாளிகளாக வளர்க்க வேண்டியது தாய்மார்களின் கடமை.

# நாளை துயரின் பிருந்தாவனம்

சாந்தா தத்

பெங்களூர்... மீண்டும் பெங்களூர் வாசம்.

நினைவே இப்படி இனிக்கும்போது நிஜம் எப்படி இனிக்கும்! நெஞ்சம் எனும் ஊஞ்சல் நினைவுப் பந்தல்களினூடே ஆடி அசைகிறது.

நெடிதுயர்ந்த மரங்கள் நிறைந்த கப்பன் பார்க்... எண்ணற்ற வண்ணப் பூக்கள் வாரி இறைத்தாற்போல் நிறைந்திருக்கும் லால் பாக்... கலையும் கல்லும் மணக்கும் கண்ணாடி மாளிகை...

அன்று காலை மானேஜர் ரமணியைக் கூப்பிட்டு அவன் நீண்ட நாட்களாக எதிர்பார்த்துக்கொண்டிருந்த பிரமோஷன் கிடைத்த விஷயத்தைச் சொன்னபோது நன்றி சொல்லக்கூட நாவெழும்பாமல் பரவச நிலையில் லயித்து நின்றவன் மீது இன்னுமொரு கூடை பூக்குவியலைச் சொரிந்தார் அவர்.

''யூ ஆர். டிரான்ஸ்பர்டு டு பெங்களூர் ஆன் பிரமோஷன். கன்கிராட்ஸ் மை பாய்!''

''தேங்க்யூ வெரிமச் சார். தேங்க்யூ...!'' ரமணி திக்குமுக்காடிப் போனான். அந்த மாபெரும் மகிழ்ச்சியை அவனால் ஜீரணிக்க இயலவில்லை.

மனம் நிறைந்த கற்பனைகளும், கரம் நிறைந்த இனிப்புப் பொட்டலங்களுமாய் வீட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தவனுக்குச் சட்டென ஒரு நெருடல்... இப்போது கிடைத்திருக்கும் இந்த டிரான்ஸ்ஃபர் ஒரு ஆறு மாதத்துக்கு முன் கிடைத்திருக்கக் கூடாதா? புது வீட்டில் குடி புகுந்து முப்பது நாட்கள் கூட முடியவில்லையே... புத்தம் புது சூழலில் புது மணம் வீசும் வீட்டை விட்டுப் போக வேண்டுமா... முன்னமே தெரிந்திருந்தால் வீடு கட்ட ஆரம்பிக்காமல் எப்போதோ மலிவு விலைக்கு வாங்கிப் போட்ட மனையை விற்றுவிட்டுப் போயிருக்கலாமே...

''அம்மா... அப்பா வந்துட்டார்...''



மழலை விளையாய் மிழற்ற ஓடிவந்து அவன் கால்களைக் கட்டிக் கொண்டாள் ஷர்மிளா. தொட்டிலில அமர்ந்து படுத்த வாறு கைகளையும் கால்களையும் ஆட்டி விளையாடிக் கொண்டிருந்த ஷியாம் அப்பா வைப் பார்த்ததும் பொக்கை வாய் மலரச் சிரித்தான். சரக்கையைத் தலைப்பில்துடைத்த படி வந்த ராதாவிடம் ஸ்வீட் பாக்கெட்டு களைக் கொடுத்தான் ரமணி.

''ராதா! நீ கொஞ்சம் கூட எதிர்பார்த் திராத ஹாப்பி நியூஸ்... சொல்லட்டுமா?''

என்னென்று அறியும் எதிர்பார்ப்பில் ஆவல் மிதக்கும் குண்டுமணிக் கண்களை அகல விரித்து அவனைப் பார்த்தாள். ''மை டியர் ராதா... எனக்குப் பிரமோஷன் கிடைச் சிருக்கு... அதுமட்டுமில்லே. எனக்கு பெங்களூருக்கு டிரான்ஸ்ஃபர் ஆகி யிருக்கு.''

''இவ்வளவுதானா? நீங்கள் இரண் டாவதாகச் சொன்ன விஷயத்தை விட பத்து மடங்கு சந்தோஷம் தரக் கூடிய நியூஸ் நான் சொல் லட்டுமா? நம் தோட்டத்து ரோஜாச் செடியில் முதல் மொட்டு விட்டிருக்கு..



திங்க ஆபீஸ் போனப்புறம்தான் பார்த்தேன்...'' — செடியில் விட்ட மொட்டு அவன் முகத்தில் மலர்ந்தே விட்டதா...! இது என்ன பூரிப்பு... இத்தனை சின்ன விஷயத்தில்....

புரிந்தும் புரியாத ஏதோ ஓர் அதிர்ச்சியுடன் ஒருகணத்தில் சில்லிட உறைந்து நின்றான் ரமணி. இவள் தன் வீட்டை... தன் சொந்தவீட்டை விட்டு வரமாட்டாள். இனி இந்த ராதையின் பிருந்தாவனம் இந்த வீடுதான். ஒரு காலத்தில் சொர்க்க பூமியாகத் தோன்றிய பெங்களூர் தன்னுடைய பிருந்தாவனத்தின் முன் இவளுக்குக் கால் தூசு.

''ராதா... நீ... உனக்கு... பெங்களூர்...'

''உங்களுக்கென்ன பைத்தியமா? ஆயிரம் ஆசைகளுடன் பார்த்துப் பார்த்துக் கட்டிய புத்தம் புது வீட்டை விட்டுப் போக யாருக்காவது மனசு வருமா?''

''இந்த டிரான்ஸ்ஃபரை மறுத்தால் பிரமோஷனும் இல்லே ராதா...''

''ஒரு கோணத்திலிருந்தே பேசுகிறீர்களே. எவ்வளவோ சிரமப்பட்டு பணத்தை நீராக வாரி இறைத்துக் கட்டிய இந்த வீட்டை என்ன செய்வதாம்?''

''வாடகைக்கு விட்டால் போச்சு. இந்த லொகாலிட்டியில் , வீட்டுக்கு எவ்வளவு டிமாண்ட் தெரியுமா? நம்வீட்டுக்குக் கண்ணை மூடிக்கொண்டு நானூறு வரை கொடுப்பார்கள். இது ஒரு பெரிய ப்ராப்ளமா?'' நிராசை நிறைந்த குரல்... மேலே பேச முடியவில்லை.

அவளை ஆத்திரம் மேலிட விழித்துப் பார்த்தாள் அவள்.

''வாடகைக்கா? எவ்வளவு சுலபமாகச் சொல்லிவிட்டீர்கள்? இந்தவீட்டை வெறும் செங்கலினாலும் சிமெண்டினாலும் மட்டுமா கட்டினோம்? நினைத்துப்பாருங்கள். ஒவ்வொரு கல்லுடனும் நம்முடைய ஒவ்வொரு ஆசைகளையும் கனவுகளையும் இணைத்துக்கட்டினோம். வாடகைக்கு விட்டால் வருபவர்கள் நம்மைப் போல அவ்வளவு கருத்தாகப் பார்த்துக் கொள்வார்களா? வீடு பாழடைந்த குட்டிச்சுவர் தான்...''

எரிச்சலுடன் பற்களைக் கடித்துக்கொண்டான் ரமணி. இவளுக்கு மட்டும்தான் தெரியுமா வீட்டின் அருமை... பெரிதாகக் கட்டிவிட்டாளாம் வீடு. ஒரு மாதத்திற்கு முன் இவளும் வாடகை வீட்டில் இருந்தவள் தானே... இத்தனையும் நினைத்துக்கொண்டானே தவிர வெளியில் சொல்லவில்லை.

வெறுப்புடன் இடத்தை விட்டுச் செல்ல முயன்றபோது ராதா மெல்லப் பேசினாள்.

''டிரான்ஸ்ஃபரை மறுத்தால் பிரமோஷனும் கிடைக்காது என்றால்... சொல்கிறேனென்று தப்பாக நினைக்காதீர்கள். நீங்கள் மட்டும்....'' தன் குற்றத்தைத் தானே உணர்ந்தவள் போல் இக்கித் திணற...

தன் செவிகளை நம்ப இயலாதவனாக அவளை வெறித்து நோக்கினான் ரமணி. இவள் ராதா தானா?

மப்பாய் மீது கேட்பாரற்றுக் கிடந்த அவன் வாங்கி வந்த ஸ்வீட் பாக்கெட்டைப் பிரித்து ஒரு விள்ளல் எடுத்து ஷம்மிக்கு ஊட்டிவிட்டு மற்றொரு துண்டைத் தன் வாய்க்குள் போட்டுக் கொண்டான். அப்படிச் செய்ததன் மூலம் ... அந்த அசம்பாவிதமான சந்தர்ப்பத்தில் ஸ்வீட் சாப்பிடுவதன் மூலம்... ராதாவை அவள் உணர்ச்சிகளை அவள் தீர்மானத்தைத் தானும் உதாசீனம் செய்தது போன்ற ஒரு திருப்தியை அனுபவித்தான்.

ரமணிக்கு ஜுரம்... மனைவியைப் பிரிந்தஜுரம்... மழலைக் குரல்களைக் கேட்காத ஜுரம். சொர்க்கமென்று நினைத்து ஓடோடி வந்த பெங்களூர் அவனுக்கு எந்த விதமான சுகானுபவத்தையும் அளிக்கவில்லை.

மனைவியின் பிடிவாதத்தில் ஏற்பட்ட கோபமும் வெறுப்புணர்ச்சியும் இருந்த இடம் தெரியாமல் கருக... அவள் பிரிவால், குழந்தைகள் அருகின்மையால் தவித்துப்போனவன் ஒரு வாரத்தை ஒரு யுகமாகக் கழித்து விட்டு சனிக்கிழமையன்று ஓடோடி வந்தான் ராதையின் பிருந்தாவனத்துக்கு.

குழந்தைகளைத் தூக்கி மூச்சு முட்டுவது போல் அவர்கள் கன்னங்களில் முத்தங்களைப்

---

தற்போது எண்ணெய் வகைகள் விற்கப்படும் விலை கண்டு சகோதரிகள் அப்பளம், வடாம், வத்தல் ஆகியவை பொரிப்பதற்குத் தயங்குவர். வேறு வழி இல்லையே என்று செலவையும் பாராது பொரிப்பர். இதோ அவர்களுக்கு ஓர் அருமையான வழி. வாணலியில் எண்ணெயை ஊற்றுவதற்கு பதிலாக நைஸ்மணலைக் கொட்டி சூடாக வறுத்துக் கொள்ளவும் - அதாவது மணல் கறுப்பாகும் அளவிற்கு இப்போது அப்பளம், வத்தல் இவற்றைப் போட்டுப் பொரித்துப் பாருங்கள். ஜம்மென்று பொரியும். எண்ணெயில் பொரித்தது போலவே சுவையாக இருக்கும்.

குறிப்பு : பொரித்த பின்னர் அப்பளம், வடாம் இவற்றை ஒரு சல்லடையில் சலிக்கவும். மணல் கீழிறங்கிவிடும்.



பொழிந்தான். மின்னும் கனிவு பொங்க ராதா அவனைப் பார்த்தபோது... பேசிய போது... உபசரித்தபோது... நினைவில் மத்தாப்புப் பொறியாய் ஒரு நம்பிக்கை... இந்த முறை நிச்சயம் தான் தனியாகப் போக மாட்டோம்....

நீல நிற விடி விளக்கின் மங்கிய ஒளியில் தந்தப் பொம்மையாய்ப் புரண்டவளைப் பாசத்துடன் ஏந்திக் கொண்டான் ரமணி.

''ராதா... இந்த வாரமெல்லாம் இந்த வீடும் தோட்டமும் உன் ரோஜா மொட்டும் உன்னுடன் ஆயிரம் கதைகள் பேசியிருக்குமே... ரமணி என்கிறவனை எப்போதாவது நினைக்க நேரமிருந்ததா?'' அவன் அவளைச் சீண்ட....

''இல்லே... ஒரு கணம் கூட நினைக்கவில்லே. என்னைப் புரிந்து கொள்ளாத.... புரிந்துகொள்ள மறுக்கும் உங்களை நான் ஏன் நினைக்கணுமாம்....?''

''சரி... நான்தான் உன்னைப் புரிந்து கொள்ளவில்லே. நீ என்ன... என் ஆசைகளை, உன்னையும் குழந்தைகளையும் பிரிந்து வாழ முடியாமல் தவிக்கும் என்னை... என் பாசத் துடிப்பை நன்றாக அறிந்தவள் அல்லவா? என்னுடன் புறப்படுகிறாய் அல்லவா?''

''உங்களை விட்டு என்னால் இருக்க முடியவில்லேதான். அப்பா... அப்பா என்று அரற்றும் உங்க பெண்ணையும் சமாளிக்க முடியவில்லே. ஆனால் இந்த வீடு... இதை விட்டு வர என் மனம் துணியவில்லேயே... வாடகைக்கு விட்டால் குட்டிச்சுவராகி விடுமே! தோட்டத்தை யார் பார்த்துக் கொள்வார்கள்? வாடகை கொடுப்பவர்களுக்கு என்ன தெரியும் வீட்டின் அருமை... என்னை ஏன் புரிந்து கொள்ள மறுக்கிறீர்கள்... போகட்டும், உங்களுக்கு ஏன் வீட்டைக் குறித்து ஸ்மரணையே இல்லே....?''

அவள் இடை மீது விளையாடிக் கொண்டிருந்த கரத்தைச் சட்டென விலக்கிக் கொண்டான் ரமணி. மீண்டும் பழைய கதை... அதே கதை.... வீடு.. தோட்டம். இவள் மனம் கொஞ்சம் கூட மாறவில்லே. பிரிவு இவளைப் பாதித்திருக்கும் என நினைத்தது வீண்.

''கோபமா....? நான் சொல்வதைக் கொஞ்சம் கேளுங்களேன்... நம்ம வீடு...''

''வீடு....வீடு....வீடு...'' சன்னென்று எரிந்து விழுந்தான் ரமணி. ''உன் வீடு ஒன்றும் மண்ணினால் கட்டப்பட்டதில்லே. கல்லும், சிமெண்டும், செங்கல்லும் சேர்த்துக்கட்டப்பட்ட கெட்டியானவீடு. யாரும் கரைத்து விட மாட்டார்கள் உன் வீட்டை. வாடகைக்கு விட இஷ்டமில்லேயென்றால் பேசாமல் விற்றுத் தொலைத்து விடலாம்....''

அவன் சொல்லி முடிப்பதற்குள் அகங்காரமாய்க் கூறினாள் ராதா. ''விற்பதா...? தெரிந்துதான்பேசுகிறீர்களா? இதற்குத்தான் இவ்வளவு கஷ்டப்பட்டு ஆசை ஆசையாகக் கட்டினோமா? விற்பதற்கு நான் சம்மதிக்க மாட்டேன்...''

''வாடகைக்கும் விடமாட்டே. விற்கவும் மாட்டே. பேசாமல் இழுத்துப் பூட்டிக் கொண்டு என்னுடன் வா...''

''ஐயோ... வீட்டை யாராவது பூட்டி வைப்பார்களா? காற்று வெளிச்சம் இல்லாமல்... தினமும் கூட்டிப் பெருக்காமல் தூசுமாய் வௌவால் நாற்றம் அடித்துக்கொண்டு பாழடைந்த மண்டபம் போல் ஆகி விடுமே....''

எரிச்சல் எல்லே மீற பட்டென்று நெற்றியில் அடித்துக் கொண்டான் அவன். அதென்ன அவ்வளவு பிடிவாதம், 'என்னுடன் வந்துதான் ஆகவேண்டும்' என்று ஆத்திரத்துடன் கத்த நினைத்தவன் வாயை மூடிக் கொண்டான். இவளே இஷ்டப்பட்டு வரட்டும். வலுக்கட்டாயமாக அழைத்துச் சென்றால் மனமெல்லாம் இந்த வீட்டைச் சுற்றிச் சுழல அங்கு எவ்விதப் பற்றும் இல்லாமல் அது இன்னும் கோரம்.

மறுபுறம் திரும்பிப் படுத்துக் கொண்டான். கடந்த ஏழு இரவுகளைப் போல் அவன் எதிர்பார்த்துக் காத்திருந்த அந்த இரவும் வெறுமையான இரவாகவே கழிய... மறுநாளே அவன் பெங்களூருக்குப் புறப்பட்டு விட்டான், தனிப் பறவையாக.

நாட்கள் பறந்தன. மாதங்கள் நகர்ந்தன இந்த பெங்களூரில் ராதாவும் உடனிருந்தால்



### ஆண்களுக்குப் பெண் வேஷமா?

தங்கள் ஜூன் 81 மங்கையர் மலரில் களந்தை நடேஷ்கன்னு, ரெட்டியார் திருமணச்சடங்கின் போது மாப்பிள்ளைக்குப் பெண் வேஷம் போட்டு மணப்பெண்ணின் அருகில் நிறுத்துகின்றனர் என்று எழுதியுள்ளார். நானும் ரெட்டியார் வகுப்பைச் சேர்ந்தவள்தான். எங் கல்யாணத்திலோ எங்கள் ஊரான கேரளா, தமிழ் நாட்டில் நடக்கும் ரெட்டியார் திருமணங்களிலோ இந்த மாதிரி நடப்பதில்லே. கேள்விப் பட்டதுமில்லே. களந்தை நடேஷ்கன்னு எந்த ஊர் ரெட்டியார்களைப்பற்றி கூறியுள்ளார் எனத் தெரிந்து கொள்ள ஆவலாக உள்ளேன்.

கணத்துக்குக் கணம் வினைக் கரையும் இந்தத் தனிமை வட்டத்துக்குள் அவளும் வந்து சேர்ந்திருந்தால்....

இதே ஏக்கத்தில்... பிரமையில் உழன்று கொண்டிருந்தவனுக்கு ஒரு நாள் அருமையான செய்தியைத் தாங்கிய அஞ்சல் கிடைத்தது. தானும் குழந்தைகளும் தலைவனிடம் சேருவதாகவும் உடனே வந்து அழைத்துச் செல்லுமாறும்,பெங்களூரில் அவர்கள் இருக்க வீடு கூட அவள் ஏற்பாடு செய்திருப்பதாகவும் எல்லாம் விளக்கமாக நேரில் விவரிப்பதாகவும் ராதா எழுதியிருந்தாள்.

இது எப்படிச் சாத்தியமாயிற்று? அவள் எப்படி இந்த முடிவுக்கு வந்தாள்? வீட்டை விற்றுவிடத் தீர்மானித்து விட்டாளா? அல்லது பாழடைந்த மண்டபமானாலும் பரவாயில்லை என வீட்டைப் பூட்டி வைக்கத் தீர்மானித்திருக்கிறாளா? எதுவோ ஒன்று.. அதைப் பற்றி இப்போது என்ன... ராதா வருகிறாள். வறண்டு கிடந்த அவன் இல்லறச் சோலையில் மீண்டும் மொட்டுக்கள் விழும்.. பூக்கள் மலரும்... சிவப்பு வெள்ளை மஞ்சள் வண்ணங்களில்...

அவன் கேள்விக்கு விடை கிடைத்தது. அவன் ஹைதராபாத் வந்து சேர்ந்ததும். புருஷோத்தமன் என்று பாங்க் அதிகாரியாம். அவருக்குப் பெங்களூரிலிருந்து ஹைதராபாத் மாற்றலாகி யிருக்கிறதாம். வீடு கிடைக்கும் வரை ரமணியின் வீட்டுக்கு நாலு வீடுகள் தள்ளியிருக்கும் உறவினர்கள் வீட்டில் குடும்பத்துடன் தங்கி யிருக்கிறார்களாம். அவருக்குப் பெங்களூரில் பசவங்குடியில் சொந்த வீடு இருக்கிறதாம். அந்த புருஷோத்தமனுக்கு தன் 'பிருந்தாவனத்தை' வாடகைக்கு விட்டு விட்டு ரமணியுடன் பெங்களூர் வருகிறாளாம் ராதா.

''வாடகைக்கு விட்டால் வீடு குட்டிச் சுவராகிவிடும் ராதா...'' மனத்தில் விரித்துக் கொண்டிருந்த சந்தேகம் குபுக்கென்று வெளியே விழ...

''கேலி செய்கிறீர்களா... இது கூடவா புரியலே? வெரி சிம்பிள்... கஷ்டப்பட்டுக் கட்டியவர்களுக்குத்தானே வீட்டின் அருமை பெருமை தெரியும்? அவர்களும் ஒரு வீட்டின் சொந்தக்காரர்கள் ஆதலால் நம் வீட்டைக் கருத்துடன் பாதுகாப்பார்கள். இன்னொரு விஷயமும் கூட. பெங்களூரில் உள்ள அவர்களின் வீட்டை நமக்கு வாடகைக்கு விட வேண்டும் என்று கண்டிஷன் போட்டேன். ஒப்புக்கொண்டார்கள். அவர்கள் வீட்டை நாம் அக்கறையுடன் பராமரிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் நம் வீட்டை அவர்கள் நன்றாகப் பார்த்துக் கொள்வார்கள்...''

''ஓ...மியூச்சுவலா....?''

''இந்த ஏற்பாடு உங்களுக்குச் சம்மதம் தானே?''

''என் சம்மதப்படியே எல்லாம் நடக்கிறதென்றால் நீ எப்போதோ என்னுடன் வந்திருக்க வேண்டுமே...''

''போதும் கிண்டல்... உம்... நீங்க சொன்னீங்களே மியூச்சுவல் என்று...அதைப் போல இன்னொரு முக்கியமான காரணம் என்ன தெரியுமா? அவர்களுக்கு இரண்டே பெண்கள்தானும். இருவருக்கும் கல்யாணமாகி ஒருத்தி டெல்லியிலும் மற்றொருத்தி மெட்ராசிலும் இருக்கிறார்களாம். நம்ம வீட்டில் இருக்கப்போவது கணவன் மனைவியாக இருவர்தான். குழந்தை குட்டித் தொல்லை இல்லை. கரிக் கட்டி, பென்சில்களாம் சுவர்களில் கிறுக்குவது. பம்பரம் ஆடித் தரையைப் பெயர்ப்பது... கிரிக்கெட் விளையாடி ஜன்னலின் கண்ணாடிகளை உடைப்பது போன்ற கைங்கரியங்கள் இல்லாமல் வீடு துப்புரவாக டேமேஜ் இல்லாமல் இருக்கும்.''

ஒரு நல்ல நாளில் ரமணியின் குடும்பத் தேர் நிலையை விட்டுப் புறப்பட்டது. வீட்டைப் புருஷோத்தமன் தம்பதியிடம் ஒப்படைத்தபோது ராதா பட்ட பாடு...! மணமாகிப் புருஷன் வீட்டுக்குப் புறப்படும் புது மணப்பெண் பிறந்த வீட்டைவிட்டுப் பிரியும் போது துடித்துக் கலங்குவது போல் பரிதவித்தாள். வீட்டை இப்படிப் பார்த்துக் கொள்ளுங்கள்... இப்படி வைத்துக் கொள்ளுங்கள் என ஆயிரம் புத்திமதிகள், அறிவுரைகள்!

ரமணி தனக்குள் சிரித்துக் கொண்டான். பாவம் ராதா! கள்ளம் நிறைந்த உள்ளத்துடன் அனுதாபம் பொங்க அவளைப் பார்க்கிறான். பலத்த யோசனையுடன் அவள் வெளியே பார்த்துக் கொண்டிருந்தாள். வீட்டின் நினைவு ஆட்டிப் படைக்கிறதா? அவன் மட்டுமே அறிந்த... அவளிடம் மறைத்த ஒரு ரகசியம் நெஞ்சில் கிசுகிசுத்தது.

அந்தப் புருஷோத்தமனின் நண்பரான பரசுராமுடன் ரமணிக்கு பெங்களூர் சென்டிரல் கிளப்பில் பரிச்சயம் உண்டு. புருஷோத்தமனிடம் பேசியதில்லையே தவிர ஓரிரு முறை தூரத்திலிருந்து பார்த்திருக்கிறான். புருஷோத்தமனின் டில்லியிலிருக்கும் பெண்ணின் கணவர் ஏதோ பயிற்சிக்காக அடுத்த மாதம் ஜெர்மனி செல்வதாகவும் இரண்டு வருடங்கள் அங்கே தங்க வேண்டியிருப்பதால் அந்த இரண்டு வருட காலமும் அவர் மகள் தன் வீட்டில் இருக்கப் போவதாகப் பேச்சு வாக்கில் பரசுராமன் ரமணியிடம் கூறியிருந்தார். அந்த மகளுக்கு ஒன்றரையிலிருந்து ஆறு வயது வரை நான்கு குழந்தைகள்!

நான்கு இரட்டை வால்கள் பிளஸ் எழுநூற்று முப்பது நாட்கள்! ராதா நினைத்தபடி பயந்தபடி வீடு குட்டிச்சுவர்தானே? போகட்டும். கல்லும் மண்ணும்தானே... உயிருடன் உயிர் கலந்த இந்தப் பிணைப்பில் இணைந்த அன்பும் பாசமும் குழைந்து உருவாக்கப்பட்ட இல்லறக் கோட்டையின் முன் வீடாவது வாசலாவது....!

வீட்டில் விரிசல் கண்டால் சரி செய்து விடலாம். உள்ளத்தில்... இல்லத்தில் பிளவு உருவானால் ரிப்பேர் என்பது ஏது?

''நாங்கதான் படிக்கலே... அதனாலே கஷ்டப்படுகிறோம்... எங்க புள்ளைங்களாவது படிக்க நல்லா இருக்கட்டும். அதுக்காக எவ்வளவு கஷ்டம்னாலும் படத் தயாரா இருக்கோம்'

'நம்ப பணத்துக்கும் அந்தஸ்துக்கும் நம்ப பையனைப் பெரிய ஸ்கூல்லதான் சேர்க்கணும்....'

கீழ்மட்டத்திலிருந்து மேல் மட்டம் வரை பல்வேறு காரணங்களால் உயர்ந்த படிப்பு சொல்லிக் கொடுக்கப்படுகிறது. உயர்ந்த படிப்பு என்றால் என்ன?

ஒரு சீட் பிடிக்கவே அலையாக அலைய வேண்டும்... ஏராளமான டொனேஷன் கொடுக்கத் தயாராக இருக்க வேண்டும்... மாதாமாதம் பீஸ் என்ற பெயரில் ஒரு தொகையைக் கட்ட வேண்டும்.

இவை தவிர, யூனிபார்ம், அந்தச் செலவு இந்தச் செலவு என்று ஏராளமாகப் பணம் கொடுக்க வேண்டும்...

இப்படித்தான் எல்லோருடைய நினைப்பாகவும் இருக்கிறது. நிறையப் பணம் செலவு செய்தால் அங்கு கிடைக்கும் படிப்பு மிகவும் உயர்தரமானதாக இருக்கும் என்ற எண்ணம்.

ஆனால் உண்மையான நிலை என்ன? கல்வியில் பல்வேறு நிலைகளைப் பற்றிச் சொல்கிறார்கள். கிண்டர்கார்டன், மாண்ட்டிசரி, சென்ட்ரல் ஸ்கூல், மத்திய அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்டது என்று எத்தனை வகைகள் இருக்கின்றன?

இவற்றில் எது சிறந்தது, எப்படிச் சிறந்தது என்றெல்லாம் எத்தனை பேருக்குத் தெரியும்? இதையெல்லாம் யோசித்துச் செய்கிறார்களா?

ஏனென்றால் 'விளையும் பயிர் முளையிலே' என்று ஆரம்பத்திலேயே நல்ல படிப்பைக் கொடுத்தால்தானே குழந்தைகளின் எதிர்காலம் சிறப்பாக இருக்கும்?

முப்பத்தைந்து ஆண்டுகளாக தலைமை ஆசிரியைப் பதவியில் இருந்து ஓய்வு பெற்றிருக்கும் திருமதி சரசுவதி சீனிவாசன் அவர்களை இதைப் பற்றிக் கேட்டபோது—

# உங்கள் குழந்தையைப் பள்ளியில் சேர்க்கிறீர்களா?



நாமே தேர்ந்தெடுத்து, நம்முடைய குழந்தைக்கு இந்தக் கல்விதான் சிறந்தது என்று முடிவு செய்வதற்கு எங்கே முடிகிறது?

உதாரணமாக, என் பிள்ளை டாக்டராக வேண்டும் என்று அவனுக்கு ஆசை. நாங்களும் விரும்பினோம். ஆனால் சீட் கிடைக்கவில்லை. பி.எஸ்.ஸி. பாட்டனி, எம்.எஸ்.ஸி பாட்டனி முடித்துவிட்டு விவேகானந்தா கல்லூரியில் லெக்சரராக ஆனான்.

அதற்குப் பிறகு ஆசிரியர் தொழில் பிடிக்காமல் இப்போது பாங்கில் வேலை செய்கிறான். டாக்டராக நினைத்தவன் பாங்க் ஆபீசராக மாறினான். இப்படி எத்தனையோ பேருக்கு, ஏன் ஒவ்வொருவருக்குமே கூட நினைத்தது நடப்பதில்லை. மேல் படிப்பு மட்டுமில்லை. முதன் முதலில் குழந்தையைப் பள்ளியில் சேர்க்க வேண்டுமென்றால்கூட ஆயிரம் பிரச்னைகள்.

வீட்டுக்கு அருகில் நல்ல பள்ளிக்கூடம் இல்லையென்றாலும், சுமாரான பள்ளிக்கூடம் இருந்தாலும் பரவாயில்லை யென்று சேர்த்துவிடுகிறார்கள். எங்கேயோ நல்ல பள்ளிக்கூடம் இருக்கிறது என்று ஐந்து வயதுக் குழந்தையை அனுப்ப முடியுமா என்ன? அதற்குப் பஸ் ஏறி இறங்கத் தெரியுமா?



திருமதி சரஸ்வதி சீனிவாசன்




ஒவ்வொரு பள்ளியிலும் நல்ல சுத்தமான குடிநீர்வசதி, தொத்து நோய் பரவ முடியாதபடி பாத்ரூம் வசதிகள் இருக்கவேண்டும். இவை குழந்தைகளுக்கு அதி அவசியமானவை.

ஆனால் பள்ளி இடைவேளையில் வாசலில் வந்து சிறுநீர் கழிக்கும் குழந்தைகளைத்தான் பார்க்கிறோம். வீடுவீடாக் தண்ணீருக்கு அலைகிறார்கள்.

பள்ளிகளை வைத்து நடத்துபவர்கள் இந்த விஷயத்தில் கண்டிப்பாக சீர்திருத்த வேண்டும்.



சரி, நல்ல பள்ளிக்கூடத்தில்தான் சேர்க்க வேண்டும் என்று முடிவெடுக்கும் பெற்றோர்களைப் பார்ப்போம். மிகத் தரமான பள்ளிகள் என்று சொல்லப்படும் பள்ளிக்கூடங்களில் மார்ச், ஏப்ரல் மாதங்களிலேயே குழந்தைகளுக்கு மட்டுமில்லாமல் பெற்றோர்களுக்கும் சேர்த்து 'இன்டர்வியூ' செய்து தேர்ந்தெடுக்கிறார்கள்.

இந்தச் சங்கதி தெரியாமல் ஜூன் மாதம் போய் இவர்கள் நின்றால் எங்கே கிடைக்கும்? சரி என்று அதற்கடுத்த தரம் அதற்கடுத்த தரம் என்று இறங்கிக் கொண்டே வந்து கடைசியில் நாட்கள் ஆகிவிட ஏதாவது ஒரு பள்ளியில் இடம் கிடைத்தால் போதுமென்ற நிலைக்கு வந்து விடுகிறார்கள்.

இப்படி ஒரு நிலை இருக்கிறது.

பள்ளிகளின் பக்கம் பார்த்தால் 'கமர்ஷியலாக' நிறைய இருக்கின்றன. 'கான்வென்ட்' என்ற பெயரில் வீதிக்கு வீதி பள்ளி திறக்கிறார்கள். இந்தப் பள்ளிகளில் ஏராளமான வருமானம் உண்டு என்று தெரிந்து வைத்திருக்கிறார்கள். இவைகளில் பெரும்பாலானவை அரசு அங்கீகாரம் பெற்றவையல்ல. ஆசிரியர்களும் பயிற்சி பெற்றவர்களல்ல. இவர்கள் எந்த வரைமுறைக்கும் கட்டுப்படாதவர்களாக இருக்கிறார்கள்.

ஆனால் பெற்றோர்கள் இவை எவற்றையும் பார்ப்பதில்லை. கான்வென்டில் படித்தால் நம்முடைய குழந்தையும் இங்கிலீஷ் பேசும் என்று நினைத்துச் சேர்த்து விடுகிறார்கள்.

பயிற்சி பெறாத ஆசிரியர்களின் நிலையும் பரிதாபமாகவே இருக்கிறது. பட்டப் படிப்பு படித்தவர்கள் ஐம்பது ரூபாய்க்கும் அறுபது ரூபாய்க்கும் வேலைக்கு வருகிறார்கள். நல்ல வேலை கிடைக்கும் வரை இந்த வேலையில் இருக்கும் நினைப்பு. அவர்களுக்குச் சின்னஞ் சிறு குழந்தைகளின் மனோநிலை எப்படிப் புரியும்?

அந்தச் சிறு வயதில் விதைக்கும் கல்விதான் சிறப்பான கல்வியாக இருக்க முடியும். இவையெல்லாவற்றையும் பள்ளியில் குழந்தைகளைச் சேர்க்கும் பெற்றோர்கள் சிந்திக்க வேண்டும்.

**நல்ல பள்ளியில் சேர்க்க வேண்டும் என்கிறீர்கள். பல்வேறு பள்ளிகளைச் சொல்லுகிறார்கள். 'கிண்டர் கார்டன்', 'மாண்டிசரி' என்றெல்லாம்... இவற்றில் எது நல்லது?**

குழந்தைகளின் மனோ தத்துவத்தை ஆராய்ச்சி செய்து சிறு குழந்தைகளுக்கான கல்வி முறைகளை அமைத்தார்கள்.



# ஸ்கூலுக்குப் போற டிரஸ்ஸுக்கு செலவாகுமாமே?

கிண்டர் கார்டன் என்பது எழுதவும் படிக்கவும் சொல்லித் தரும் பள்ளி. படங்களைப் பார்த்துப் படிப்பது. அப்படியே எழுத்துக்களைச் சொல்லித் தருவது.

மாண்டிசரி என்பதில் முதலில் எழுதக் கற்றுக் கொடுப்பதில்லை. குழந்தைகளின் விளையாட்டுக்களின் மூலம் அறிவை வளர்க்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். ஏராளமான படங்கள் நிறைந்த புத்தகங்களை வாங்குகிறார்கள். கலர் கலரான படங்களைப் பார்த்து கற்றுக்கொடுக்கிறார்கள்.

சிறு குழந்தைகளால் கையை வளைத்து எழுத முடியாது என்பது அவர்கள் எண்ணம்.

மத்திய அரசாங்கப் பள்ளிகள் பல இருக்கின்றன. இங்கு தரமான கல்வி கற்பிக்கப்படுகிறது. ஆனால் இது மத்திய அரசாங்கத்தில் வேலை செய்கிறவர்களுக்கு மட்டும்தான்.

இதனுடைய தரத்தைக் கண்டு பலர் இக்கல்வி நிறுவனத்தில் மோதுகிறார்கள் என்பதற்காக மத்திய அரசாங்க சிலபஸில் நாங்கள் பாடம் நடத்துகிறோம் என்று சொல்லிக் கொண்டு பல பள்ளிகளை வைத்துள்ளனர். ஆனால் இவை எவ்வளவு தூரம் தரமாக இருக்கின்றன என்பது கேள்விக் குறிதான்.

அதே போல மத்திய அரசாங்கம் நிறுவிய 'போர்டு' ஒன்றின் மூலம் நடத்தப்படும் பள்ளிகள் இருக்கின்றன. இவைகளின் 'கண்ட்ரோல்' அந்தப் போர்டிடம் இருக்கிறது. அவர்கள் அடிக்கடி மேற்பார்வையிட வராததால் அவ்வளவு சிறப்பாக கல்வியின் தரம் இல்லை என்று சொல்லிக் கொள்கிறார்கள்.

இவை தவிர மாநில அரசுப் பள்ளிகள் இருக்கின்றன. இவைகளில் பெரும்பாலும் தமிழ் மீடியம்தான்.

தமிழ் தமிழ் என்று எவ்வளவு முழங்கினாலும் ஆங்கிலப் படிப்பைத்தான் எல்லோரும் விரும்புகிறார்கள். எனவே வேறு வழியே இல்லை என்றிருப்பவர்களும், கான்வென்ட் பள்ளிகளில் இடம் கிடைக்காதவர்களுமே இந்தப் பள்ளிகளுக்கு வருகிறார்கள்.

இப்படிக் கல்வி பல்வேறு பிரிவுகளாகப் பிரிந்து நிற்கிறது. தங்கள் குழந்தைகளைப் பள்ளியில் சேர்க்க விரும்பும் பெற்றோர்கள் ஓரளவு இவற்றையெல்லாம் ஆராய்ச்சி செய்ய வேண்டும். ஆனால் அதற்கும் முன்பாகத் தாய்மார்களின் பெரும் கடமை இருக்கிறது.



## தாய்மார்களே, ஒரு நிமிஷம்...



ஆமாம், ஒரு நிமிஷம் நினைத்துப்பாருங்கள்: குழந்தையைப் பள்ளியில் சேர்ப்பதற்கு முன்பே அறிவு வளர்ச்சி ஒரு நிலைக்கு வந்திருக்க வேண்டும்.

காலையில் எழுந்திருத்தல், காலைக் கடன்களை அதற்கென்று இருக்கும் இடத்தில் கழித்தல், தானே தன்னுடைய ஷூவை, சட்டையைப் போட்டுக் கொள்ளுதல் இவற்றையெல்லாம் கற்றுக் கொடுத்திருக்க வேண்டும். இவை தாயின் பொறுப்புதான்.

ஆனால் தாய்மார்கள் எத்தனை பேர் இவைகளை அக்கறையுடன் கவனிக்கிறார்கள் என்று யோசிக்க வேண்டும்.

குழந்தைகளுக்குப் புத்தகங்களைப் பார்க்கும் பழக்கம், மற்றவர்களுடன் பகிர்ந்து வாழும் பழக்கம் இவற்றையெல்லாம் வளர்க்க வேண்டும்.

இவையெல்லாம் தாய்மார்களின் கடமை. குழந்தையைப் பத்து மாதம் சுமந்து பெறுவதோடு அவள் பொறுப்பு முடிவதில்லை. இரவு பகலாகக் கண்விழித்து குழந்தையை வளர்த்துவிடும் தாய்மார்கள், அதனுடைய மனவளர்ச்சியையும் கவனிக்க வேண்டும். பெற்றோர் நல்ல பள்ளியாகப் பார்த்துச் சேர்க்க வேண்டும்.

பேட்டி: வி. மஞ்சுளா ரமேஷ்

எத்தனை கோயில்களுக்குப்போயிருக்கிறாள் அந்த வயதான ஜெயகௌரி பாய்!

எத்தனை மகான்களைத் தரிசித்திருக்கிறாள்!

இருந்தும் அவளது ஆசை மட்டும் இது வரை நிறைவேறவில்லை.

கடைசியில் ஹாடகேசுவர் கோவிலுக்குச் சென்று அந்த மகான் காலடியில் தனது பேரன் நர்ஸி மேத்தாவை நிறுத்தி,

''முனிபுங்கவரே! எனது பேரன் பிறவியிலிருந்து ஊமையாக இருக்கிறானே! அவனுக்கு வாக்கு அருளக் கூடாதா?'' என்று மனம் உருகப் பிரார்த்தனை செய்தாள்.

மகான் சாதாரண மகான் அல்ல! புன்னகை புரிந்து, சிறுவனைப் பார்த்தார். ''ஏன் இந்த மௌனம்! ராதே ஸ்யாம் சொல்லு!'' என்று கூறினார் அன்பு ததும்ப.

சிறுவனின் வாய் மலர்ந்தது. ''ராதே ஸ்யாம்!'' என்ற வார்த்தை அவன் வாயிலிருந்து கணீரென்று வந்தது.

ஜெய் கௌரிக்கு ஆனந்தம். அளவிடவில்லை. போன உயிர் வந்தது போல் துள்ளினாள். மகானின் காலடியில் மீண்டும் மீண்டும் நமஸ்கரித்தாள். அவளுக்கு நன்றி செலுத்த வார்த்தை இல்லாமல் தவித்தாள்.

# பக்த நர்ஸி

## ஸ்ரீவேணுகோபாலன்

மகான் மேலும் அருளினார் ''இந்தப் பாலகன் மகா பக்தனுவான்.''

கௌரிக்கு இதயம் தாளவில்லை. சிறுவனை அணைத்துக்கொண்டு புறப்பட்டாள்.

சிறுவன் நர்ஸி தனது தாய் தந்தையரை இழந்தவன். பாட்டியான ஜெயகௌரியும் அண்ணன் 'வச்சிதரும்'தான் அவனைப் பராமரித்தார்கள்.

பாட்டியும் சிறிது காலத்தில் மேல் உலகம் செல்ல, நர்ஸியின் முழுப் பராமரிப்பும் அவனது அண்ணன் கையில் வந்தது.

அண்ணன் அவனைப் படிக்க வைத்துப் பார்த்தான். படிப்பு ஏறவில்லை. விளையாட்டுப் புத்திதான் அதிகமாக இருந்தது.

'இவன் ஒரு உதவாக்கரை' என்று எண்ணிய அண்ணி துரிதகௌரி நர்ஸியைத் தன் வீட்டு மாடுகளையும் குதிரைகளையும் மேய்த்து வரும்படி உத்தரவு இட்டாள்.

அண்ணன் வம்சிதர், ஹுமாயூன் அரசாங்கத்தில் ஒரு குட்டி அதிகாரி! ஆகையால் அவனிடம் குதிரைகள் இருந்தன.

மாடு குதிரைகளை மேய்க்கலானான் நர்ஸி.

அவனுக்குள் ஒரு பொறியாக இருந்த கடவுள் பக்தி இப்போது வளர ஆரம்பித்தது.

இதற்கிடையில் தனது தம்பிக்குத் திருமணம் செய்து வைத்தால் ஒழுங்காக இருப்பான் என்று நினைத்து மனேக் பாய் என்பவளை நர்ஸிக்குத் திருமணம் செய்து வைத்தார் அண்ணன்.

காலப் போக்கில் நர்ஸிக்கு ஒரு ஆணும் ஒரு பெண்ணும் பிறந்தார்கள்.

குடும்பம் பெருகியும் நர்ஸி தனது மேய்க்கும் தொழிலிலேயே ஈடுபட்டு அடிக்கடி தியானத்தில் ஆழ்ந்து கொண்டிருந்தான்.



அண்ணிக்கு அவனைக் கண்டாலே பிடிக்காது. குடும்பம் வேறு பெருத்து விட்டதா? பொறுமையை இழந்தாள்.



கால் போன வழிகளில் போக ஆரம்பித்தான்.

அவனது அளவிறந்த பக்தி காரணமாக அவனுக்கு இப்போது தெய்வ அனுபவம் ஏற்பட்டது.

அவனது 'ராதாகிருஷ்ணன்' அவனுக்கு தமது ராசலீலைக் காட்சிகளைக் காட்டி அனுக்கிரகித்தார்.

நர்ஸி அந்தக் காட்சியைக் கண்டு

நர்ஸியை மட்டுமல்லாமல் அவன் மனைவி குழந்தைகளையும் மட்டமாக நடத்தி நிறையவேலை ஏவ ஆரம்பித்தாள். ஒரு தப்பு செய்தாலும் மனம் நோகத் திட்டினாள்.

ஒருநாள் நர்ஸி மேய்ச்சலிலிருந்து வரும்போது மிகவும் களைத்துப் போய் வந்தான். பசி வயிற்றைக் கிள்ளியது. ''அண்ணி! சாப்பிடுவதற்கு ஏதாவது தாருங்கள்!'' என்று முறையிட்டான்.

அண்ணி எரிச்சலுடன் ஒரு காய்ந்துபோன சப்பாத்தியைக் கொணர்ந்து அவன் மேல் எறிந்தாள்.

நர்ஸி சப்பாத்தியைப் பார்த்தான். அது மட்டமாக இருந்தது. பெருமூச்சு விட்டு ''அண்ணி! தயவு செய்து ஒரு துண்டு ஊறுகாய் கொடுங்கள்'' என்று முறையிட்டான்.

''பஜன் மேம் ஸாது
போஜன் மேம் பீம்''

என்று கோபமாகச் சொன்னாள் அண்ணி. (பஜனை செய்வதில் சாது. சாப்பாட்டிலோ பீமன்) ''உனக்கு ஒன்றும் கிடையாது. இங்கே நிற்காதே போ!'' என்று கத்தினாள்.

நர்ஸியின் முகம் கருங்கி விட்டது. அங்கிருந்து அகன்று காட்டுக்குச் சென்றான். கடவுள் பெயரையே உச்சரித்து

பேரானந்தம் அடைந்து தனக்குக் கடவுள் அருள் கிடைத்துவிட்டது என்று கூவி, கடவுள் பெயரை நாமாவளியாகப் பாடிக் கொண்டு ஊருக்குத் திரும்பினான்.

அரையில் மஞ்சள் ஆடையும் தலையில் மயில் கண்ணும் வைத்து கண்ணன் போல் வரும் அவனைப்பார்த்து அண்ணிக்குக்கோபம் வந்தது.

''இங்கே வந்து பாருங்கள்'' என்று அண்ணனை அழைத்துக் காட்டினாள்.

அண்ணனுக்கு மகா கோபம் வந்தது. ''டேய்! பொறுப்பில்லாத ஜடமே! இதென்ன வேஷம்? இதென்ன நாமாவளி! இந்த வேட்டி உனக்கு ஏது? எங்கிருந்தாவது திருடினாயா?'' என்று கூப்பாடு போட்டான்.

''அண்ணா! என்னை அநுவசியமாகத் திட்டாதீர்களே! அந்த வஸ்திரம் ஆண்டவன் கொடுத்தது. நான் கண்ண பரமாத்மாவை நேரில் கண்டேன்.'' என்றான் நர்ஸி.

## மீசை முளைத்தால்...

சில பெண்டிர்களுக்கு மீசை அரும்பி முகத்தின் அழகை கெடுக்கும். அந்த ரோமங்களை அகற்றி முகம் அழகுபெற ஒரு எளிய வழி!

பேரியம் சல்பேட் 100 கிராம்
மரிக்கன் மாவு 35 கிராம்

இவை இரண்டையும் கலந்துவைத்துக் கொண்டு, வேண்டிய போது மேற்படி தூளில் சிறிது நீர்விட்டு குழைத்து ரோமங்கள் அரும்பிய இடத்தில் தடவி ஐந்து நிமிடம் ஊறவிடுங்கள். பின்னர் துணியினால் துடைத்து எடுக்க ரோமங்கள் வந்துவிடும். —ஏ. டாப்பாலஷ்மண்



அதற்கு மேல் அண்ணனும் அண்ணியும் பொறுக்கவில்லை. நர்ஸியையும் அவன் குடும்பத்தையும் உடனே வெளியேற்றினார்கள்.

நர்ஸி போவதற்கு இடமில்லை. ஊருக்கு வெளியே காட்டின் ஓரமாக ஒரு குடிசை போட்டுக் கொண்டான்.

எளிய வாழ்க்கை வாழ்ந்து கிடைத்ததை மனைவி மக்களோடுஅருந்தினான். எப்போதும் கடவுள் நினைவில் மூழ்கினான்.

இந்த பக்தியின் விளைவாக, படிப்பு அறிவு இல்லாத அவனுக்குப் பாடல் இயற்றும் திறன் தானாகக் கைவந்தது.

எளிய இனிய சொற்களில் மிக மதுரமான பாடல்களை இயற்ற, அந்தப் பாடல் ஊரில் மெள்ள மெள்ளப் பரவலாயிற்று.

சீக்கிரத்தில் அந்த எளிய பாடல்கள் மக்கள் எல்லோர் நாவிலும் தவழ ஆரம்பித்தது.

நர்ஸி மேத்தாவை பக்த நர்ஸி என்று போற்ற ஆரம்பித்தார்கள்.

நர்ஸியின் பெண் குவர் பாய்! அவள் பிறந்தவுடனேயே அவளுக்கு வசந்த்ராய் என்பவருக்கு மணம் முடிப்பதாகப் பேசியிருந்தார்கள். இப்போது குவரி பாய்க்கு வயது வந்ததும் அவளைக் கணவன் வீடு அனுப்ப வேண்டி வந்தது.

அதற்கான நகைகளுக்கும் ஆடைகளுக்கும் எங்கே போவார்?

நர்ஸிக்குச் சோதனையாக இருந்தது.

கடவுளை நோக்கித் தியானிப்பது அன்றி வேறு வழியில்லை.

கண்ணனையே நினைத்து உருக, அவர் வீட்டில் ஒரு மாயம் நிகழ்ந்தது.

குவரி பாய்க்கு வேண்டிய நகைகளும் ஆடைகளும் திடீரென்று உற்பத்தியாகி இருந்தன.

அளவற்ற மகிழ்ச்சியோடு மகளைக் கணவன் வீட்டுக்கு அனுப்பி வைத்தார் நர்ஸி.

அடுத்தது மகன் ச்யாமளா.

நர்ஸி மேத்தாவுக்குப் புகழ் ஏற்பட்டால் எதிரிகளும் தோன்றாமல் இருப்பார்களா?

ஒரு விஷமக்காரன் பணக்காரரான மதன் மேத்தா என்பவரை அணுகி, ''நர்ஸி தான் பெரும் பொருள் படைத்தவன், அவன் மகன் ச்யாமளா தாஸுக்கு உங்கள் பெண்ணை மணம் செய்து வையுங்கள்'' என்று கூற, அவரும் உடனே பெண்ணைக் கொடுக்க நிச்சயதார்த்தம் செய்துவிட்டார்.

திருமண நாள் நெருங்கியது.

அப்போதுதான் மதன் மேத்தாவுக்கு நர்ஸியின் தரித்திர நிலை தெரிய வந்தது.

உடனே கோபத்தில் நர்ஸிக்கு ஒரு கடிதம் எழுதினார். ''ஒரு பணக்காரக் குடும்பத்துக்குத் தகுதியாக உம்மால் திருமணம் செய்து கொடுக்க முடியாது என்றால் நிச்சயதார்த்தத்தை முறித்துக் கொள்வோம்'' என்று அதில் குறிப்பிட்டிருந்தார்.

என் குழந்தை 3 வயது இருக்கும். பிடிவாதம் பிடித்துக் கொண்டு அழுது கொண்டிருந்தது. கோபம் கொண்ட நான் குழந்தையிடம் "இனிமேல் என்னோடு பேசாதே! போ! என்னை அம்மான்னு கூப்பிடாதே" எனக் கூறினேன்.

"அப்போ உன்னை பாட்டின்னு கூப்பிடட்டுமா?"

அதைக் கேட்டவுடன் என் முகத்தில் கோபம் மாறி சிரிப்பு வந்தது. -தீபா



நர்ஸிக்குக் கண்ணீர் வந்தது.

திருமணத்தை நிறுத்தி விடுவதென்றால் அவமானம்.

கடவுள் ஒருவர்தான் அவருக்கு ஒரே சரண்! கண்ணனை நினைத்துக் குடும்பத்தோடு மனம் உருகப் பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தார்.

கடவுள் மீதே பாரத்தைப் போட்டு கையில் தம்பூரும் சிப்ளாக் கட்டையும் ஏந்தி குடும்பத்தோடு திருமணத்துக்குப் போகத் தொடங்கினார்.

கண்ணனின் நாமாவளியையும் அவனது புகழையும் பாடிக் கொண்டு அவர் போகப் போக,

ஆச்சரியம்! அவரைத் தொடர்ந்து ஒரு மக்கள் கூட்டமே பின்னால் சென்றது. எங்கிருந்துதான் இவ்வளவு பேர்கள் வந்தார்கள் தெரியவில்லை. ஒவ்வொருவர் கையிலும் திருமணத்துக்கான வரிசைகள் இருந்தன.

திருமணக் கூடத்தை நெருங்கும்போது மதன் மேத்தா வாயிலில் நின்று வரும் கூட்டத்தைப் பார்த்தார். எண்ணற்ற தலைகள்! எண்ணற்ற வரிசைகள்! இதுவரை எந்தத் திருமணத்துக்கும் அத்தனை ஆட்களோ, பொருள்களோ வந்ததில்லை.

நர்ஸி ஒரு பெரிய மகான் என்று மதனுக்குத் தோன்றியது.

நர்ஸியின் காலில் விழுந்து தன் செய்கைக்கு மன்னிப்புக் கேட்டார்.

திருமணம் இனிது நடந்தது. நர்ஸிக்கோ எல்லாம் தெய்வத்தின் செயல் என்று தெரியும். தனக்காகக் கடவுள் எத்தனை உதவிகள் செய்கிறார் என்பதை அறிந்து, மேலும் பகவான் மீது பிரேமையை வளர்த்துக்கொண்டார் அவர்.

நர்ஸியின் பிற்கால வாழ்க்கையில் பல சோதனைகள் ஏற்பட்டன.

அவரது குமாரன் ஷ்யாமள தாஸ் திடீரென்று இறந்தான். அதைத் தொடர்ந்து அவர் மனைவி மனேக் பாயும் பரலோகம் சென்றாள்.

ஆனால் நர்ஸி தனக்கு நேர்ந்த எல்லாச் சோதனைகளையும் கடவுளின் அனுக்கிரகமாக எடுத்துக்கொண்டார்.

"பலுன் த்யோன் பகி ஜஞ்ஜால்!
ஸுகே பஜ்ஸுன் ஸ்ரீ கோபால்"

"என் பந்தங்கள் எல்லாம் மறைந்துவிட்டன. இனி கோபாலனைத் தடையில்லாமல் சுகமாகப் பூஜிப்பேன்" என்று பாடினார்.

நர்ஸி 1414ல் பிறந்தவர். படிப்பில்லாதவர். கடவுள் கிருபையால் அருமையான கவியாக மாறினார். அவர் புனைந்த பக்திப் பாடல்கள் இன்னும் எல்லோரையும் வசீகரப்படுத்தக்கூடியவை. இன்னும் அவைகளைப் பாடி வருகிறார்கள்.

பிரசித்தி பெற்ற "வைஷ்ணவ ஜனதோ" என்ற பாடலும் அவர் இயற்றியதுதான்.

வைஷ்ணவ ஜன் தோ தேனே கஹியே!
ஜே பீட் பராயீ ஜானே ரே!
பர துக்கே உப்கார் கரே தோயே
மன் அபிமான் ந ஆனே ரே!

"வைஷ்ணவன் என்பவர் யார்?
மற்றவரின் துக்கம் கண்டு பரிதவிப்பவன்.
மற்றவர்க்குத் தான் செய்யும் உபகாரங்களை உடனே மறப்பவன்.

அதில் எந்தவிதப் பெருமையும் கொள்ளாதவன்.

யாருடைய புகழையும் நிந்தனையையும் பற்றிக் கவலைப்படாதவன்."

மகாத்மா காந்திஜிக்குப் பிடித்தமான பாட்டு. "கீதையை மறந்தாலும் மறப்பேன்; இந்தப் பாட்டை மறக்க மாட்டேன்" என்று கூறினார் மகாத்மா.

இன்னொரு விஷயம்.

நர்ஸி மேத்தா ஹரிஜனங்களோடு உறவாடி அவர்கள் சுகதுக்கங்களிலும் பங்கு கொண்டவர். அவர்களுக்கு அடியாராகத் தம்மை நினைத்துக்கொண்டவர்.

நர்ஸி மேத்தா 1480ல் சுவர்க்கம் எய்தினார்

# எம்பிராய்டரி

கோட்ஸ் ஆங்கர் முறுக்கப்பட்ட பருத்தி நூல் Coats Anchoor Standard Cotton (மதுரை கோட்ஸ் தயாரிப்பு)
Lawrel - 0208. (3 Keins)
Amber Gold - 0307 (3 சிட்டம்)
எம்பிராய்டரி ஊசி எண் No 7 (Corewel Needle No 7)

1 வெள்ளை துணி - தலையணை உறைக்கும் ஒரு படுக்கை விரிப்பிற்கும், இரண்டு படுக்கை விரிப்பு தயாரிப்பதற்கு அதிகமான டிசைன் செய்யவும்.

எம்பிராய்டரி செய்யும் துணியை நீள பாசத்தில் இரண்டாக நன்றாகக் கோடு தெரியும்படி மடிக்கவும். எம்பிராய்டரியின் வரைபடம் முழுவதும் கொடுக்கப்பட்டிருக்கிறது. நடுவிலுள்ள மடிப்பிலிருந்து 10 செ. மீ. தள்ளி ஓரத்தில் பூக்கள் மேல் பாகம் ஓரத்தைப் பார்த்திருக்குமாறு டிரேஸ் செய்யவும். ஒவ்வொரு பக்கத்திலும் 3 வரைபடம் இருக்க வேண்டும். ஒவ்வொரு டிசைனுக்கும் இடைவெளி 6.3 செ மீ. இருக்க வேண்டும். கீழே கொடுத்திருக்கும் வரைபடத்திலிருக்கும் நம்பர்களுக்குக் கொடுத்த மாதிரி பின்பற்றவும். ஒரே கலரில் அதில் கொடுத்திருக்கும் முறையில் செய்யவும். செய்து முடித்ததும் பின்பக்கம் திருப்பி இஸ்திரி செய்யவும்.








நிர்மலா தேசிகன்

# மரணம்.. விஷ்.. மரணம்...

**லக்ஷ்மி**

வெள்ளிக்கிழமை விரதம்' படம் பார்த்துக் கொண்டிருந்தபோது என்னையுமறியாது கால்களைத் தூக்கி ஆசனத்தில் மடக்கி வைத்துக் கொண்டுவிட்டேன். காலடியில் இருட்டில் பாம்புஊர்வது போன்று ஒரு நடுக்கம். அதே போன்று—தென் ஆப்பிரிக்காவுக்கு நான் போன புதிதில் ஃபிட்ஸ் சைமன் என்பவர் எழுதிய தென் ஆப்பிரிக்காவின் பாம்புகள் என்ற புத்தகத்தைப் படித்தவுடன் தெருக்களிலும் மாடிப் படிகளிலும் கதவு மூலையிலும் காப்பி மேஜைக்கடியிலும் தோட்டத்திலும் எங்கும் பாம்புகள் ஊர்வன போன்றதொரு பிரமை ஏற்பட்டு நடுங்கிப் போனேன்.

பாம்பென்றால் படையும் நடுங்கும் என்பது மிகவும் உண்மை. தென் ஆப்பிரிக்காவில் பிரசித்திபெற்ற மாம்பா, ஸ்பிட்டிங்கோப்ரா என்ற இரு வகைக் கொடிய பாம்புகளின பெயர்களைக் கேட்டாலே போதும், யாரும் நடுங்கிப் போய்விடுவார்கள்.

உலகத்திலேயே மிகக் கொடுமையான பாம்பு மாம்பா என்பது. தோட்டங்களில் பச்சை வண்ணத்திலும், கல் இடுக்குகளில் கரும் வண்ணத்திலும் சைக்கிள் டயர் பருமனில் சுமார் பனிரெண்டடியுள்ள இந்தக் கொடுமையான பாம்பு கடித்தால் ஆள் பத்து நிமிஷத்தில் மரணமடைந்து விடுவான். வழியோடு போகிறவனை வம்புக்கு இழுத்துத் துரத்திக் கொண்டு வந்து கடிக்கும் துஷ்டகுணம் வேறு இதற்கு உண்டு. காரைக்கூடத் துரத்திக்கொண்டு வரக் கூடிய வேகம்! தலையை மூன்று அடிக்கு மேல் தூக்கி எம்பி கார் கண்ணாடி வழியே எட்டிப் பார்த்து டிரைவரை நடுங்க வைத்துவிடும் பயங்கரமான பாம்பு. அதனால்தான் இந்நாட்டு ஆப்பிரிக்கர்கள் இந்தப் பாம்பை ''முரிட்டிவா லாக'' மரணத்தின் நிழல் என்று அழைக்கிறார்கள்.

இந்நாட்டில் உள்ள பலவித பாம்புகளில் மிகவும் கொடுமையானது ஸ்பிட்டிங் கோப்ரா. விஷம் துப்பும் நாகம்.

நான்கடி தூரத்திலிருந்தபடி ஒரு கல் இடுக்கில் ஒளிந்துகொண்டு விரோதியின் கண்களைப் பார்த்துக் குறிவைத்து ஸ்ஸ்ஸ் என்று தோட்டத்து ஹோஸ் பைப் தண்ணீர் அடிப்பது போல விஷத்தை வாரிக் கண்களில் அடிக்கும் தனித் திறமையுடையது. கண்களில் விஷம் பட்டதும் உடனடியாக எரிச்சல் ஏற்பட்டு கண்களும் முகமும் சில நிமிஷங்களில் வீங்கிப் போகும். கண் வழியே விஷம் உள்ளே இறங்கினால் கொஞ்ச நேரத்தில் மரணமும் ஏற்படலாம். உள்ளே விஷம் இறங்கக் கொஞ்ச நேரம் செல்லுமாதலால் அதற்குள் விபத்துக்குள்ளானவர் ஆஸ்பத்திரியை அடைந்து தக்க சிகிச்சை செய்து கொண்டு குணமடைந்துவிடலாம். அந்த வழியில் இந்தப் பாம்பு ஒரு நல்ல பாம்பு என்றே சொல்லலாம். சிகிச்சை —செய்யத் தாமதமானால் விஷம் பட்ட கண்கள் பார்வையை இழந்துவிடக்கூடும். அதனால் இந்தப் பாம்பின் பெயரைக் கேட்டாலும் மக்களுக்கு மிக்க அச்சம்.

பாம்புகளைப் பற்றிப் பேச ஆரம்பித்துவிட்டால் , பல பயங்கரக் கதைகளைக் கேள்விப்படுவோம். உண்மையா என்றுகூடத் திகைப்பைக் கொடுக்கும். அத்தனை விதமான நடுக்கக் கதைகள்.

புத்தகத்தைப் படித்துவிட்டு நண்பர்கள் சொன்ன பயங்கரக் கதைகளைக் கேட்டுவிட்டு டர்பன் நகரத்துப் பாம்புப் பண்ணையில், கண்ணாடிப் பெட்டிக்குப் பின்னால் சைக்கிள் டயர் போல் உருண்ட மாம்பாக்களைப் பார்த்தபோது மெய் சிலிர்த்துப் போனேன். கண்ணாடிப் பெட்டிக்குள் சாதுக்களாக இருக்கும் இவைகளை வெளியே விட்டால்?...

ஒருசமயம் விம்சின்டோ என்னும் பக்கத்திலிருந்த ஊரில் எனக்கு மாதர் சங்கக் கூட்டத்தில் பேச அழைப்பு வந்தது. டர்பனிலிருந்து நூறு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள இந்தச் செழுமையான கிராமம் ஓய்வாக இருக்க மிகவும் அமைதியானதொரு இடம். தங்கள் வீட்டில் ஒரு சில நாட்கள் நான் விருந்தாளியாகத் தங்கியிருக்க வேண்டும் என்று சங்கத் தலைவி மிகவும் வற்புறுத்தியதால் வேலையினின்று விடுப்பு எடுத்துக் கொண்டு கிளம்பினேன்.

கூட்டம் முடிந்தது. பலமான விருந்துக்குப் பின் பயணக் களைப்பில் தூக்கம் வரவே பேசிக் கொண்டிருந்தவர்களிடம் விடை பெற்றுக் கொண்டேன். எனக்களிக்கப்பட்டிருந்த அறையை வீட்டின் எஜமானி காட்ட கூடவே வந்தாள்.

கட்டில், மெத்தை என்று அறை அலங்காரமாக இருந்தது. ஜன்னல்களை மறைத்திருந்த திரைகளை ஒதுக்கினேன். கண்ணாடிக் கதவுகள் எல்லாம் இறுக்கமாகச் சாத்தியிருந்தன. ஜன்னல்களைத் திறந்து வைத்துக் கொண்டு காற்றோட்டத்தில் தூங்கும் பழக்கம் எனக்கு. அவசரமாக ஜன்னல் கதவுகளை நான் திறப்பதைக் கண்டு அந்தம்மாள் ஓடிவந்து தடுத்தாள். மூடி வைத்திருப்பதுதான் நல்லது என்றாள்.

''இருட்டுப் பயமா? கம்பித் தடுப்புகள் இருக்கே?'' — கேட்டேன்.

''இல்லை. கம்பி இடுக்குகள் வழியே மாம்பாக்கள் வந்துவிடுகின்றன. இங்கே சுற்றிலும் கரும்புப் பயிர் போட்டிருப்பதால் மாம்பாக்களின் சஞ்சாரம் அதிகம். போன வாரம் கட்டில் அடியில் ஒன்று சுருண்டு கிடந்தது. அடித்துக் கொன்றோம்.'' என் ;ன்.

''குட் நைட்'' என்று கூறிவிட்டு அவள் போய்விட்டாள். அந்த இரவு எனக்குப் பயங்கர இரவாகத்தான் இருந்தது. கட்டிலின் மீது ஏறி விடியும் வரை தூங்காது விளக்கைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். மறுநாள் காலை வீட்டு எஜமானி என்ன கெஞ்சியும் ஒரே பிடிவாதமாக நான் ஊருக்குக் கிளம்பிவிட்டேன்.

எங்களது வெள்ளைக்கார நண்பர், ஓவியர் ஒருவர், எங்களைத் தாங்கள் வாங்கியிருந்த வீட்டுக்கு விருந்துக்கு அழைத்திருந்தார். நானூறு கிலோ மீட்டர் தொலைவிலிருந்த ஜோஹன்னஸ்பர்க் அருகே அவர் ஒரு பெரிய விவசாயப் பண்ணையும் அதைச் சேர்ந்த வீட்டையும் வாங்கி அந்தத் தனிமையில் மரத்தடியில் அமர்ந்து சித்திரங்கள் தீட்டத் திட்டமிட்டிருந்தார்.

நீங்களும் உங்கள் கணவரும் வந்து எங்களுடன் ஓய்வாக ஒருசில நாட்கள் தங்குங்கள்... இயற்கையின் சூழ்நிலையில் உங்களுக்கு அற்புதமான கற்பனைகள் தோன்றும் — அழகானதொரு கதை எழுதுவீர்கள்'' என்று வேப்பிலை அடித்தார்.



காரில் நானும் என் கணவரும் குழந்தையும் புறப்பட்டோம். வீட்டைத் தேடிக் கண்டு பிடிப்பதற்குள் இருட்டி விட்டது. அழைப்பு மணியை அடித்தபோது ஓவியர் கறுப்புக் கண்ணாடி அணிந்தவராக வந்து கதவைத் திறந்தார். வைத்தியராதலால் கண்களுக்கு என்ன? — ஆவலுடன் கேட்டு விட்டேன்.

''தோட்டத்தைச் சரிபார்க்க நானும் என் மனைவியும் ஆட்களுடன் சுற்றி வந்துகொண்டிருந்தபோது திடீரென்று என் முகத்தில் யாரோ எச்சில் துப்பியது போலப் பட்டது. கண்களில் ஒரே எரிச்சல். ஒரு ஸ்பிட்டிங் கோப்ரா என்னைத் தாக்கிவிட்டிருக்கிறது என்று பின்னர்தான் தெரிந்தது. ஆட்கள் அந்தப் பாம்பைக் கொன்றுவிட்டார்கள். ஆனால் அதன் ஜோடியைத்தான் பிடிக்க முடியவில்லை. ஆஸ்பத்திரிக்கு உடனடியாக என் மனைவி என்னை அழைத்துப் போனதில் கண்கள்பிழைத்தன. நானும் பிழைத்தேன்.'' --சிரித்தார் நண்பர்.

விருந்துக்குப் பின்னர் ஒரு விநாடிகூடத் தங்க மனமில்லை. ஜோஹனஸ்பர்க்கில் ஒரு முக்கிய வேலை... பிறகு பார்க்கிறோம் என்று கிளம்பி விட்டேன்.

''அவர்கள் என்ன நினைத்துக் கொள்வார்கள்'' — காரை ஓட்டிக் கொண்டு சென்ற என் கணவர் ஆதங்கத்துடன் கேட்டார்.

''என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். அந்த ஸ்பிட்டிங் கோப்ரா ஜோடியைச் சந்திக்க எனக்குத் துணிவில்லை.. ஓவியருக்குக் கண்கள் எப்படி முக்கியமோ அதுபோல எழுத்தாள டாக்டருக்கும் முக்கியம். அதனால் கம்பி நீட்டிவிட்டேன்'' என்றேன்.

டர்பன் நகரில் ரிஸர்வாயர் ஹில்ஸ் எனும் பகுதியிலிருந்த காடுகளை அழித்து இந்தியர்கள் அழகான பங்களாக்கள் கட்டத் தொடங்கினார்கள். மேல் மட்டத்து வாசிகளின் இருப்பிடமாக உருமாறிக் கொண்டு வந்த அந்தப் பகுதியில் எங்கள் நண்பர் ஒருவர் மிக அதிகச் செலவில் ஒரு அழகான பங்களா... நீச்சல் குளத்துடன் கட்டி முடித்தார். இரகப்



பிரவேசம் தடைபடலாயிற்று. வந்த விருந்தாளிகள் போன பின்பு வீட்டு யஜமானி சமையலறையை மேற்பார்வை யிட உள்ளே சென்று விளக்கைப் போட்ட போது நடுங்கிப் போனாள். ஜன்னல் கம்பி இடுக்கு வழியே உள்ளே புகுந்துவிட்ட மாம்பா ஒன்று தலையைத் தூக்கிக்கொண்டு சமையலறை மேடை மீது ஊர்ந்து கொண்டிருந்தது. ஆண்கள் எல்லோரும் ஆர்ப்பாட்டமாக அடிக்க வருவதற்குள் அது மாயமாகி விட்டது.

சில நாட்களுக்குப் பின்னர் விடியற்காலை வாயிற் பக்கம் வந்த அந்தம்மாள் வராந்தாவில் தன் குட்டியுடன் படுத்துக் கிடந்த ஒரு மாம்பாவைப் பார்த்துவிட்டு ஊரே கிடுகிடுக்கும்படி அலறிவிட்டாள். இன்னொரு நாள் குளியலறை ஷவர் மீது தலை கீழாக ஒன்று தொங்கிக் கொண்டிருந்ததைக் கண்டு அவள் வீட்டை விட்டே ஓடி வாசலில் வந்து நின்றுவிட்டாள்.

அதற்குப் பிறகு வெறும் கயிற்றைப் பார்த்தாலும் பாம்பு என்று கதறும்படிஅவள் நரம்புகள் பொடிப் பொடியாகி விடவே.. அந்த வீட்டில் தொடர்ந்து தன் குழந்தைகளுடன் வசிக்க மறுத்து பிறந்தகம் புறப்பட்டு விட்டாள்.

பாவம்! எங்கள் நண்பர் பணத்தைக் கொட்டி அழகு பார்த்துக் கட்டிய வீட்டை பாம்புக்குப் பயந்துகொண்டு வந்த விலைக்கு விற்றுவிட்டு நகரத்திலிருந்த ஒரு பிளாட்டுக்குக் குடியேறினர்.

ஆமை புகுந்த வீடும் அமீனா புகுந்த வீடும் உருப்படாது என்பார்கள். மாம்பா புகுந்த வீடும் என்று சேர்த்துக் கொண்டால் பொருந்தும்.

## உப்பின் மகிமை

● சாதம் கவையாய், மல்லிகைப் பூவாய் சத்துள்ளதாய் இருக்க, அரிசியைச் சமைப்பதற்கு 20 நிமிடங்கள் முன்னதாக ஊறப் போட்டு, பின் உலை நீரில் போட வேண்டும். கொதித்து வரும் சமயம் ஒரு சிட்டிகை உப்பைப் போட்டால் சாதம் சுவையாய், மிருதுவாய் இருக்கும்.



● கை, கால்களில் சுளுக்கு அல்லது வாயுப் பிடிப்பு ஏற்பட்டால், அந்த இடத்தில் உப்புத் தூள் பற்றுப் போட்டால் ஐந்து நிமிடங்களில் வலி சரியாகி விடும்.

● ரவா கேசரி கிளறும்போது ஒரு சிட்டிகை டேபிள் சால்ட் போட்டுக் கிளறினால் கேசரி கெட்டாமலும், மென்மையாகவும் இருக்கும்.

● உடைத்த தேங்காய் கெடாமல் இருக்க தேங்காய் மூடியின் உட்புறம் சிறிது உப்பைத் தடவி வைத்தால் பல நாட்கள் வரையில் கெடாது. தேங்காயும் சிவந்து அழுகல் வாசனை அடிக்காது.

● தினசரி படுக்கைக்குச் செல்லு முன் ஒரு டம்ளர் வெந்நீரில் சிறிதளவு உப்பைப் போட்டுக் கலக்கி, வாய் கொப்பளித்துவிட்டுப் படுத்தால்,எந்த விதமான பல் வியாதியும் வராது. வாயில் துர்நாற்றமும் அடிக்காது.

● கால்நடைகளின் உணவான வைக்கோல் கெடாமல் இருக்க உப்புக் கலந்த நீரை ஒவ்வொரு கட்டுக்கும் தெளித்து அடுக்கினால் பூச்சிகள் அரிக்காது. வருடக் கணக்கானாலும் கெடாது.

● வாந்தி வந்தும் வராமலிருப்பது போன்ற சங்கடமான சமயத்தில் நீரில் உப்பைப் போட்டுக் கலக்கிக் குடிக்க வேண்டும். உடனே சங்கடம் நீங்கி,வயிறும் தெளிவாய் இருக்கும்.

தொகுப்பு: நூருன்னிஸா




# எப்போதும் பெண்

**4**

புதியவள் பிறந்த அலுப்பில் தூங்கிக் கொண்டிருக்க, அப்பாவுக்கு உண்மை உறைத்து அழவேண்டும் என்கிற அவசியம் புலனாகித் துண்டால் வாயைப் பொத்திக் கொண்டு அழத் துவங்குவதற்குச் சற்று நேரமாயிற்று.

பாட்டி சைக்கிள்ரிக்ஷாக்காரன் கொடுத்த அழுக்கு ஒரு ரூபாய் நோட்டைச் சந்தேகத்துடன் சோதித்துப் பார்த்துவிட்டு, மூன்று பிள்ளைகளையும் அழைத்துக் கொண்டு வார்டு விசாரித்து அங்கே செல்வதற்குள் அம்மாவின் படுக்கையைச் சுற்றிலும் திரை போட்டு விட்டார்கள். அப்பா அவள் பேர் சொல்லி அனாவசியமாகக்கூப்பிட்டுக்கொண்டிருந்தார்.

''என்னடா புள்ளையா பொண்ணு?''

''பாட்டி, இங்க வந்து பாருங்கோ, இங்க வந்து பாருங்கோ.''

பாட்டி கண் சரியாகத் தெரியாமல் கிட்ட வந்து பார்த்து ''தூங்கறாளா?'' என்றாள். மது ''அம்மா, அம்மா'' என்று படுத்திருந்தவளைக் கலைத்து ஆட்டினான்.

''பாவம், மூணும் ஆம்பிள்ளைங்க மகா லெச்சுமி மாதிரி இருந்தாங்க.''

''அப்பா, அம்மா ஏன் பேச மாட்டேங்கறா?''

''அடிப் பாவி! என்னடி இப்படிப் பண்ணிட்டுப் போயிட்டே! நான் கிழம் கெடந்து குண்டுக் கல்லாட்டம் இருக்கேன். இந்த அநியாயத்தைக் கேக்கறவா இல்லையா''

பாட்டி பொல பொலவென்று கண்ணீர் சிந்தி அழ ஆரம்பித்தது இன்னும் குழந்தைகளுக்குப் புரியவில்லை. சின்னவன் காலையிலிருந்து பார்க்காத அம்மாவின் புடவைத் தலைப்பைப் 'பிடித்துக் கொண்டு விரல் போட்டுக் கொள்ள, அடுத்தவன் அந்த இடத்துக்குப் போட்டி போட...

''ம்ம்ம்ம்... எங்கம்மா'' என்றான் இடம் கிடைக்காதவன்.

''பொட்டோட மையோட
பொறந்த கொடியோட
போடுசரப் பட்டோட
பிள்ளை பறக்க வாழ்வரசி ஆனாயோ...
பாலுக்கு மகளைப் பறக்க வெச்சுப் போறாயோ?
தொட்டில்ல மகளைத் துடிக்க வெச்சுப் போறாயோ?''

என்று பாட்டி பாடியதை வேடிக்கை பார்த்துச் சிரித்தான்.

மதுவுக்கு ஒரு மாதிரியாகப் புரிந்துபோய் விசிட்டு அழ ஆரம்பித்தான்.

இந்த சப்தம் எல்லாம் புதியவளுக்கு ஆகாமல் சின்னக் கண்களைத் திறந்து விழித்துக் கொண்டு கொஞ்சம் அழுதது. சின்னதாக ஒரு கொட்டாவி விட்டது.

அஸ்க் என்று தும்மியது.

''பாப்பா...பாப்பா''என்றான் சின்னவன். பாட்டி முதல் முறையாகக் குழந்தையைப் பார்க்க, முகத்தைச் சுருக்கிக் கொண்டு சே என்றது.

பாட்டி, ''சண்டாளி! பொறக்கறதுக்கு முன்னாடியே தாய்க்காரியை முழுங்கினயா மூதேவி'' என்றாள்.

''அதை ஏம்மா திட்டறீங்க... இப்பத்தான் பொறந்து வச்சிருக்குது.''

''இதை எடுத்துண்டு போயிடுங்கோ. எங்களுக்கு வேண்டாம்'' என்றார் அப்பா.

சின்னவன், ''ம்!... எனக்கு வேணும்'', என்று அழ ஆரம்பித்தான். ''அப்பா, அம்மாவை எழுப்புப்பா.''

''அம்மா எழுந்திருக்க மாட்டாடா! அம்மா எழுந்திருக்க மாட்டா!''

அப்பா கீழே உட்கார்ந்து கொண்டு குலுங்கி அழுதார்.

''தபாருங்க மிஸ்டர்! நீங்க இப்ப தைரியமா இருக்கணும். குளந்தைகளைப் பார்த்துக்க வேணுமா? பாட்டியம்மா! நீங்க எத்தனையோ அனுபவம் உள்ளவங்க. எத்தனையோ பார்த்தவங்க... நீங்கதானே இப்ப அவங்களுக்கு ஆறுதல் சொல்லணும்.''

''அய்யோ, என்ன சொல்றீங்க நரசம்மா? இப்ப இந்தச் சனியனை நானா வளர்க்கணும்? எனக்கு இருக்கிற மூச்சுப் பிடிப்பிலயும் தள்ளாத வயசிலயும்... போனவே பிராமணா என்னையும் கூட்டிண்டு போயிருக்கக் கூடாதா... இப்படிச் சின்னவாள்ளாம் போயிடறாளே... கிழம் நாங்க இருந்துண்டு கொட்டம் அடிக்கறமே. அய்யோ பத்துத் தலைமுறைக்குப் பதுமையுள்ள வாழ்வரசி அருமை முத்துக் கையாலே அனல் வாங்கிப் போவாயோ...''

''எடுத்துட்டுப் போம்மா இதை. இதும் பேச்சே வேண்டாம்.''

''ஸிஸ்டர், இந்த பேபியைக் கொண்டு போய்ட்டு ஸி ரூம்ல வெச்சிருங்க. இவங்க துக்கத்தில் எதாவது எக்கச்சக்கமா செய்துருவாங்க...''

''நீ வாடி செல்லம்.'' என்று புதியவளைத் திறமையாக மூடிக்கொண்டு ''உங்களுக்கு வேணும்னுச் சொல்லுங்க. நான் வளர்க்கறேன்'' என்று கோபத்துடன் சொல்லிக் கொண்டே சென்றாள் நர்ஸ்.

''பாட்டி! நான் இப்ப என்ன பண்ணுவேன்?''

''சொல்லத்தெரியலையேடாப்பா. அய்யோ நேத்திக்கு வடாத்துக்கு நனைக்க வெச்ச வெய்யல் வீணாப் போறதேன்னு கூழ் பண்ணி பாய் நிறையக் காயப்போட்டு... என்னடா ஆச்சு? ஆயுதம் கியுதம் போட்டு எங்கேடா போயிடுத்தா?''

''ஒண்ணுமே தெரியலையே பாட்டி! வந்து பாக்கறேன், போய்ட்டான்னு சொல்றாளே!''

''அந்தம்மாளுக்கு ப்ளீடிங் நிறைய ஆயிடுச்சுங்க....''

''இப்ப என்ன பண்றது? பொணத்தை எப்பக் கொடுப்பா?''

''அம்மா எப்ப எந்திருப்பா?''

''எந்திருக்க மாட்டா'' என்றான் மது.

சின்னவன் நர்சின் பின்னால் பாப்பாவுடன் சென்றவன், கண்ணாடி வழியாக நூறு தொட்டில்களில் ஒன்றில் அவள் இடப்படுவதைப் பார்த்துக் கொண்டிருந்தான். மேர்ட்ரன் அவனைப் பார்த்து. ''இங்கெல்லாம் நிக்கக் கூடாது தம்பி. போய்டு'' என்று சொல்ல,

''அந்தப் பாப்பா என்னது.'' என்றான்.

''எந்தப் பாப்பாம்மா?''

''அதோ பாருங்க. ஒண்ணு ரெண்டு நாலு தொட்டில்ல இருக்கே... என்னது!''

''அப்படியா?''

''எப்ப ஆத்துக்கு எடுத்துண்டு போலாம்?''

''நாளை நாளன்னிக்குக் கொடுத்திடுவாங்க.''

''அது என்ன சாப்பிடும்?''

''சக்கரைத் தண்ணி. அம்மாகிட்ட பால். அம்மா எங்கே?''

---

பாலில் இரண்டு தேங்காய்த் துண்டுகளைப் போட்டு வையுங்கள். மூன்று நாள் வரை விரும்கூடப் பால் கெடாமல் இருக்கும்.

ஆர்.பி. எஸ்.



## பசலைக் கீரை

கீரைகளிலேயே மிக அதிகமான புரதச் சத்துக் கொண்டது பசலைக் கீரையே! வைட்டமின் ஏ, பி, சி மூன்றும் ஒருசேர அதிகமாயுள்ளது இந்தக் கீரையில்! இதனைக் கொதிக்க வைத்து அந்த நீரில் தேனையோ சர்க்கரையையோ கலந்து கொடுக்க மலச்சிக்கல் தீரும். இதன் தளிரைக் கிள்ளி சாறு பிழிந்து வெந்நீரில் கலந்து சாப்பிட்டால் தொண்டை கமறல் உடனே நிற்கும்.

வேலை செய்வதினால் நம் உடலில் தேய்வடையும். டிஷ்யூக்களைத் திரும்பவும் தருகிற சக்தி பசலைக் கீரைக்கு உண்டு.

இதனைச்சமைக்கும்போது இதன் கொதித்த நீரைக் கீழே கொட்டிவிடாமல் அதையும் உணவுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் முழுப் பலன் கிடைக்கும்.

— ஆர்.சி. எஸ்.



''அங்க இருக்கா. அம்மா ஏன் தூங்கறா?''

''களைப்பா இருக்கும்.''

வெளியில் வந்த ஸிஸ்டர், ''வா, தம்பி!'' என்று அவனைப் பரிவுடன் கூப்பிட,

''அது பேசுமா?'' என்றான்.

''அதுக்குள்ள பேசாதுப்பா. பாவம், ஸ்டாஃப்! தாய் டெத் ஆயிட்டாங்க!''

''அடப் பாவமே!'' என்றாள் மேட்ரன். ''என்ன ஆச்சு?''

''எம்ரேஜிங்.'' சற்றுக் குரலைத் தாழ்த்தி ''இன்டர்ன் வந்து பார்த்துட்டு, 'ஒண்ணும் இல்லைன்னு சொல்லியாச்சு! அம்மாவாளு ப்ளீட் பண்ணிட்டே இருக்காங்க... நார்மலாம்! இவங்கள்ளாம் டாக்டராகி என்னத்தைக் கிளிக்கப் போறாங்களோ!''

''எரைஞ்சு பேசாதே.''

''இந்த ஆஸ்பத்திரிலே நடக்கிறது ஒண்ணும் நல்லால்லே ஸ்டாஃப்.''

''குழந்தை நல்லா இருக்குது!''

''பொண்ணு! தகப்பனும் ஒரு பாட்டியும் வந்திருக்காங்க... இதைக் கொண்டு போய் குப்பைல போடுங்கறாங்க. இது என்ன செய்யும் பாவம்!''

''சிரிக்குமா அது?''

''தூங்கி எழுந்ததும் சிரிக்கும்.''

''எப்ப எழுந்திருக்கும்?''

''நீ தூங்கி எழுந்திருச்சப்புறம் அது நானும் எழுந்திருக்கிறேன்னு.''

''சாரதா கொஞ்சம் தனியா வரியா?''

சின்னவன் ஜன்னல் வழியாக ஆர்வத்துடன் எட்டிப் பார்த்துக் கொண்டிருக்க மேட்ரன் சாரதாவைத் தனியாக அழைத்துச் சென்று, ''இப்பக் கேக்காதே. குழந்தையை இப்பக் குடுக்க மாட்டாங்க. தாய்ப் பால் இல்லே. கொஞ்ச நாள் அப்ஸர்வேஷன்ல வெச்சுட்டுத்தான் கொடுப்பாங்க. அதுக்குள்ள நீ அவங்களைக் கேட்டுப் பாத்துரு.''

''என்ன கேக்கணும்?''

''குழந்தையைக் கொடுக்கிறாங்களான்னு. நமக்குத் தெரிஞ்ச ஒரு பார்ட்டி காத்துக்கிட்டிருக்கு. குளந்தை எப்படி இருக்கு?''

''நல்லா சிவப்பா இருக்குதுங்க. நல்ல நிறத்துக்கு வந்துரும்.''

''கொடுப்பாங்களா கேட்டுப் பாரு. விசாரிச்சு வை. என்ன?''

''விலைக்கா?''

''ஆமாம்மா. பாரின் கப்பிள் எடுத்து வளக்கத் துடிக்கிறாங்க. எக்கச்சக்கமா காசு. நீ இதை யார் கிட்டயும் சொல்லிடாதே. எனக்கு ஒண்ணும் இல்லே. ஏதோ கேட்டுக்கிட்டே இருக்காங்க. இவங்களும் வளக்க முடியாம சிரமப்படுவாங்கல்ல....''

''சரி! சமயம் வர்றப்ப கேட்டுப் பாக்கறேன். வாடா—தம்பி அப்புறம் பார்க்கலாம். பாப்பாவை. இப்பத் தூங்கட்டும்.''

''பல்லு வெச்சுண்டிருக்கோ?''

''சேச்சே. பல் எல்லாம் இப்ப வராதுப்பா.''

ஒரு தடவை முழிச்சுப் பார்த்தது. இக்கூண்டு இருக்கு. இப்பத் தூங்கறதா? எப்ப சாதம் சாப்பிடும்?... என்று சின்னச் சின்னச் சந்தேகங்களுக்கு விடையளித்துக் கொண்டே நர்ஸ் மறுபடி வார்டுக்கு வந்தாள். அப்பா இப்போது சற்றே அழுகை குறைஞ்சு பழுப்புக் காகிதங்களில் கையெழுத்துப் போட்டுக் கொண்டிருந்தார். ''அதிர்ஷ்டமில்லிங்க. இல்லாங்காட்டி அரை மணிக்கு ஒரு தபா இங்க குளந்தை பொறக்குதுங்க. எல்லாரும் பெத்துப் போனைக்கத் தானே செய்யறாங்க. பாட்டியம்மா! வீட்

டில ஒத்தாசைக்கு யாராவது இருக்காங்களா?''

''இல்லம்மா. யாரும் இல்லே.''

''அப்ப குழந்தையை வளக்கப் போறது யாருங்க?''

''அய்யோ, கேக்காதே. நான்தான் வளத்தாகணும். வைத்தியநாத சுவாமி! என் மேலே இந்த வயசில இந்தப் பாரத்தைப் போட்டுட்டார். நான் கடைசியா புள்ளே பெத்தது அம்பது வருஷத்துக்கு முந்திம்மா. என் புள்ளேயும் ஒரே புள்ளே] பாகிஸ்தான்லே போயிட்டான் சண்டைல. இவாத்தில ஒண்டிண்டிருக்கேன். எனக்கு வந்த பொறுப்பைப் பாத்தியா?''

''ரொம்பக் கஷ்டங்க. அதும் சின்னக் குழந்தையைச் சமாளிக்கிறதுன்னு என்ன கஷ்டம், தெரியுங்களா?''

''அய்யோ, சொல்லாதே.''

''ஸார்! ரொம்ப ஸாரி ஸார். நாங்க எங்களால முடிஞ்சதெல்லாம் பாத்துட்டோம்.''

''குழந்தை எங்க?'' அப்பா பிரமிப்புடன் மெஷின் பேசுவது போலக் கேட்டார்.

''அது நல்லாத்தான் இருக்குதுங்க. கவலைப்படாதீங்க.''

''அதுக்கு ஆகாரம்?''

''எல்லாம் நாங்க பார்த்துக்குவோம். கவலைப்படாதீங்க.''

இப்போது அம்மாவை முழுவதும் மூடியிருந்தார்கள். இரண்டு மகன்களும் அவ்வப்போது வேடிக்கை பார்த்துக் கொண்டே உம்...உம்... என்று அழுது கொண்டிருக்க, ''சின்னப் பிள்ளேக்கு இன்னும் தெரியாதுங்க. சொன்னாப் புரியக் கூடப் புரியாதுங்க. ஏதாவது சமாதானம் சொல்லி தூங்கப் பண்ணிர்றேன். ராத்திரி ரொம்ப நேரமாகுதுங்க. ஏதாவது வாங்கிட்டு வரச் சொல்லட்டுமா?.... ஆயா?''

''வேண்டாங்க.''

''அப்ப பையன்களே அழைச்சுக்கிட்டுப் போயி ரெஸ்ட் ரூம்ல வச்சிருக்கேன். ஏதாவது திங்கறதுக்கு கொடுக்கறேன். பெரியம்மா நீங்க வரீங்களா கொஞ்ச நேரமாகும். இந்தத் தள்ளாத வயசில உங்களுக்கு ஏதுனாச்சும் ஆயிருச்சுன்னு அப்புறம் கஷ்டம் பாருங்க!''

''எனக்குப் படபடன்னு வரது.''

''பாட்டி, நீங்க போயிட்டு வாங்கோ. நான் பார்த்துண்டு உங்களைக் கூப்பிடறேன். ஏம்மா, ஒரு போன் பண்ணணும்.''

''நம்பர் சொல்லுங்க. நான் சொல்லிடறேன்.''

''எல்லாரும் நல்லவாளா இருக்கா. இந்தப் பாவிப் பொண்ணு உயிரோட இருக்கக் கூடாதா?''

அப்பா அம்மாவுடன் தனியாக விடப்பட்டார். சற்று நேரம் கைத்துண்டை இறுக்கக் கடித்துக் கொண்டு மவுனமாக அழுதார். அம்மாவை முதலில் பெண்பார்த்த போது கேலரியில் திரடின முந்திரிப் பருப்பு கூட ஞாபகம் வந்தது. அப்போது அம்மா சின்னதாக இருந்தது ஞாபகத்துக்கு வந்தது. தான் வேஷ்டிக்கு மேல் பெல்ட் 'போட்டுக் கொண்டு அன்னைக்குத்தான் புதுசாகச் செருப்பு வாங்கினது ஞாபகம் வந்தது. முதலில் அந்த வீட்டில் இருந்த பெண் பிள்ளைகளில் பார்க்க வந்த பெண் யார் என்பதிலேயே இருந்த குழப்பம் ஞாபகத்துக்கு வந்தது. அம்மா அணிந்திருந்த நீலப் பட்டுப் புடவை ஓரத்தில் குங்குமம் சிதறியிருந்தது. சுவரில் தெரிந்த பெரிய போட்டோவில் ராவ் பகதூர் யாரோ என்று எழுதியிருந்தது. பாய் விரித்தது. ஆர்மோனியத்தைக் கொண்டு வந்து வைத்து அதன் பின்னால் அம்மா வந்தது. தலையைக் கவிழ்த்துக் கொண்டதை ஒரு இம்மியும் நிமிர்த்தாமல் மார்பை இழுத்துப் போர்த்துக் கொண்டு அழுத்தி வாரிக்கொண்டு... மெல்ல போர்வையை விலக்க அந்த முகத்தைப்பார்த்தார். நெற்றியில் பொட்டு லேசாகக் கலைந்திருந்தது. இரண்டு மூக்கிலும் மூக்குத்தி. வாய் லேசாகத் திறந்திருந்தது.' தாலி பக்கவாட்டமாகச் சரிந்திருந்தது. முகம் அமைதியாக இருந்தது. மார்பில் பால் சுரந்து புடவையை நனைத்திருந்தது. பக்கத்தில் கையாலாகாத ஆக்ஸிஜன் ஸிலிண்டர் மௌனமாக நின்று கொண்டிருந்தது.

''நான் போயிட்டேன்னு வேற கல்யாணம் பண்ணிப்பேளா?''

புதியவள் கத்த ஆரம்பித்தாள். . பிறந்தவுடன் அவள் எழுப்பிய முதல் அழு குரலை யாரும் கவனிக்க முடியாதபடி அசம்பாவிதம் நிகழ்ந்து விட்டாலும் அவள் உயிர் வாழ்வதற்கு அந்தக் கத்தல் தேவையாக இருந்தது. மார்புக் கூட்டின் டயாஃபர்ம் துருத்தி போல் இயங்கி மூக்கு வாய் வழியாக உள்ளே சேர்ந்துபோன திரவங்களை வெளியேற்ற அவசரக் கூக்குரல் அந்த முதல் அழுகை. அதற்குப் பின் அவள் இப்போது பற்பல காரணங்களுக்காக அழத் தயாராளுள். பசி,மூத்திரம் ஈரம்... கொஞ்ச நேரத்திலேயே அழுகை பலனளிக்கும் என்று கற்றுக்கொள்ள வேண்டும் அவள். அவள் அம்மாவுக்கு மட்டும் புரியக்கூடிய ஒருசில சப்தங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும்... அம்மாதான் இல்லை.

அப்போது நமசிவாயத்தின் வீட்டில் டெலிபோன் அடித்தது. (தொடரும்)

பால் பிறைகுற்றுவதற்கு மோர் இல்லையா? நான்கு பச்சை மிளகாய்க் காம்புகளைப் பாலில் போட்டு வைத்து விடுங்கள். மறுநாள் நல்ல தயிர் கிடைத்துவிடும். —ஆர்.சி.எஸ்.



# பரிசு பெற்ற சமையல் குறிப்புகள்

முதல் பரிசு

## உருளைக்கிழங்கு பேரிச்சம்பழ ஜாமூன்

**தேவையான பொருட்கள் :**

பெரிய உருளைக்கிழங்கு 4
சர்க்கரை 2½ கப்;
பேரிச்சம்பழம் (கொட்டை நீக்கியது) முக்கால் கப்;
பால் 2 கப்;
மைதா 2 மேஜைக் கரண்டி;
அமூல் பால் பவுடர் 1 மேஜைக்கரண்டி;
முழு முந்திரி 4 மேஜைக்கரண்டி;
ரோஸ் எஸென்ஸ் சில துளிகள்;
குங்குமப் பூ கால் டீஸ்பூன்;
டால்டா (அ) நெய் தேவையான அளவு

**செய்முறை :**

உருளைக் கிழங்கைக் கழுவி, தோல் நீக்கி, சிறு துண்டுகளாக்கி பாலில் வேக வைக்கவும். நன்றாக வெந்ததும் கீழே இறக்கி வைத்து, ஆறியதும் நன்றாக மசித்துக் கொள்ளவும். பேரிச்சம்பழத்தை நீளவாக்கில் இரண்டு துண்டுகளாக்கிக் கொள்ளவும். இரண்டு மேஜைக் கரண்டி முந்திரியை வெந்நீரில் சிறிது நேரம் ஊறவைத்து நைசாக அரைத்துக்கொள்ளவும். இத்துடன் மைதா, பால் பவுடர், மசித்த உருளைக் கிழங்கு, இவற்றைச் சேர்த்து நன்றாகப் பிசையவும். தேவையானால் சிறிது நீர் சேர்த்துக் கொள்ளவும்.

சர்க்கரையுடன் அதே அளவு நீர் சேர்த்து அடுப்பில் வைத்துக் காய்ச்சி, பாகு கையில் பிசுக்கென்று ஒட்டும் பதத்துக்கு வந்ததும், இறக்கி வைத்து எஸ்ஸென்ஸை ஊற்றி ஆற வைக்கவும்.

உருளைக் கிழங்குக் கலவையைச் சிறிய எலுமிச்சம் பழ அளவில் உருட்டிக்கொண்டு நடுவில் அதைப் பள்ளமாக்கி ஒரு முழு முந்திரியையும் இரண்டு பேரிச்சம் பழத் துண்டுகளையும் வைத்து மறுபடி உருட்டி வைக்கவும்.

ஒரு வாணலியில் டால்டா அல்லது நெய் ஊற்றி அது காய்ந்ததும், உருளைக் கிழங்கு ஜாமூன்களை ஒரு தடவைக்கு 4 அல்லது 5 ஆகப் போட்டுச் சிவந்ததும் டால்டாவை வடியவைத்து எடுத்து, தயாராக இருக்கும் பாகில் போட்டு ஊற வைக்கவும். இதே போல் மீதமுள்ள மாவையும் செய்து கொள்ளவும். ஜாமூன்கள் குறைந்தது 4 அல்லது 5 மணி நேரம் பாகில் ஊறவேண்டும். அப்பொழுதுதான் சுவையாக இருக்கும். கடைசியாகக் குங்குமப் பூவைச் சேர்த்துப் பரிமாறவும்.

(பி.கு. ஜாமூன்களை டால்டாவில் பொரித்தெடுக்கும்போது தீ மிகவும் நிதானமாக எரிய வேண்டும். தீ அதிகமாக இருந்தால் ஜாமூன்கள் மேலே சிவந்து உள்ளே வெந்திருக்காது.)

- செல்வி உமா இராமச்சந்திரன்

இரண்டாவது பரிசு

## உருளைக்கிழங்கு கார அப்பம்

**தேவையான பொருட்கள் :**

உருளைக்கிழங்கு நான்கு
அரிசிமாவு அரைகப்
பொட்டுக்கடலைமாவு கால் கப்
தக்காளிப்பழம் ஒன்று
பச்சை மிளகாய் ஆறு
இஞ்சி சிறியதுண்டு
முந்திரிப்பருப்பு ஆறு
தேங்காய் துருவல் இரண்டு டீஸ்பூன்
பெருங்காயம் கொஞ்சம்
எண்ணெய் 175 கிராம்
தேவையான அளவு உப்பு

**செய்முறை:**

தக்காளிப் பழம், பச்சை மிளகாய், இஞ்சி, கொத்தமல்லி, உருளைக் கிழங்கு ஆகியவற்றை அலம்பவும்.

உருளைக் கிழங்குகளை நன்றாக வேகவைத்து தோலியை அகற்றி மசிக்கவும். முந்திரிப் பருப்பை மிகவும் சிறிய துண்டுகள் செய்யவும். பெருங்காயத்தைச் சிறிதளது ஜலத்தில் நனைக்கவும். தக்காளிப் பழத்தை சூடான தண்ணீரில் போட்டுத் தோலியை அகற்றவும். பச்சை மிளகாய், இஞ்சி, தேங்காய் மூன்றையும் மசிய அரைத்து எடுத்துக் கொண்டு பின்பு உருளைக் கிழங்கை நன்றாக அரைக்கவும். கொத்தமல்லியைப் பொடியாக நறுக்கவும்.

அரிசி மாவு, பொட்டுக் கடலை மாவு, தக்காளிப் பழம், உப்பு, அரைத்த உருளைக் கிழங்கு, இஞ்சி, பச்சை மிளகாய் விழுது, முந்திரிப் பருப்பு, கொத்தமல்லி, பெருங்காய ஜலம் முதலியவற்றை ஓர் சயமுள்ள பாத்திரத்தில் போட்டு செம்மையாய்க் கலந்து வைத்துக் கொள்ளவும். மாவுடன் தண்ணீர் கூட்ட வேண்டும். ஆமவடை போல் சற்று கனமாய்த் தட்டி, எண்ணெய் கொண்டவரை போட்டுச் சிவப்பாய் வேகவைக்கவும்.

-செல்வி பிரியவதனி

மூன்றாவது பரிசு

## ஆலூ மசாலா பௌடர்

**தேவையான பொருட்கள்:**

உருளைக்கிழங்கு கால் கிலோ
உளுத்தம்பருப்பு 100 கிராம்
கடலைப்பருப்பு 50 கிராம்
வரமிளகாய் 8
உப்பு, காயம் தேவைக்கு ஏற்றது
(பூண்டு பிடித்தவர்கள் ஒரு பூண்டு சேர்த்துக் கொள்ளலாம்)

**செய்முறை:**

உருளைக் கிழங்கை நன்றாகக் கழுவிய பின் உலர்ந்த துணியால் துடைத்துப் பொடிப் பொடியாக நறுக்கிக் கொள்ளவும். வெங்காயத்தையும் தோல் நீக்கிப் பொடிப் பொடியாக நறுக்கிக் கொள்ளவும். பிறகு உளுத்தம் பருப்பு, கடலைப் பருப்பு, மிளகாய், காயம் எல்லாவற்றையும் வாணலியில் போட்டுப் பொன்னிறமாக வறுத்து எடுத்து வைக்கவும். அதே வாணலியில் ஒரு ஸ்பூன் எண்ணெய் விட்டு, வெங்காயத்தையும் உருளைக் கிழங்கையும் வதக்கித் தனித் தனியாக எடுத்து வைக்கவும்.

வறுத்து எடுத்து வைத்த பருப்பு வகைகளை மிக்ஸியில் போட்டு உப்பையும் போட்டு கரகரப்பாக அரைக்கவும். அதன் பிறகு வதக்கி வைத்திருக்கும் உருளைக் கிழங்கு, வெங்காயத்தைப் போட்டு ஒன்றாக அரைத்து எடுத்து வைக்கவும். அதுவே 'ஆலூ மசாலா பவுடர்' ஆகும். (சாதத்தில் போட்டுப் பிசைந்து சாப்பிடலாம். சப்பாத்தி, தோசை ஆகியவற்றுக்குத் தொட்டுக் கொள்ளலாம். நான்கு நாட்கள் வரை கெடாமல் இருக்கும்.)

[பி. கு. மிக்ஸி இல்லாவிட்டால் உரலில் போட்டுப் பருப்பு வகைகளை இடித்துக்-கொண்டு மசித்த பின் உருளை, வெங்காயத்தைப் போட்டு இடித்து ஒன்றாகக் கலந்து எடுத்து வைத்துக் கொள்ளவும்.]

**- திருமதி ஜெயலக்ஷ்மி ராஜகோபால்**

ஆறுதல் பரிசு

## உருளைக்கிழங்கு மட்டன் போண்டா

**தேவையான பொருட்கள்:**

உருளைக்கிழங்கு பெரியது 3 (வேக வைத்த தோல் நீக்கி மாவாகப் பிசைந்தது)
கைமா 250 கிராம் (1 கரண்டி எண்ணெயில் வாணலியில் வதக்கியது இலேசாக)
பாலும் ஆயில் அரை கிலோ
பச்சை மிளகாய் 6
இஞ்சி 10 பைசா
பூண்டரசி 10
சோம்பு பட்டை இலவங்கம் அரை தேக்கரண்டி
கறிமசாலா 1 தேக்கரண்டி
மஞ்சள்தூள் அரை தேக்கரண்டி
தேங்காய் பூ 1 மூடி (திருவியது)
முட்டை 2 (உப்பும் மஞ்சளும் சேர்த்து அரைத்து வைக்கவும்)
உப்பு தேவையான அளவு

**செய்முறை:**

கைமா, பச்சை மிளகாய், இஞ்சி, பூண்டு, தேங்காய்ப் பூ, உப்பு இவற்றைச் சேர்த்து ஆட்டுக் கல்லில் வெண்ணெய் போல் விழுதாக அரைத்து எடுத்துக் கொள்ளவும். இதில் கரி மசாலை, சோம்பு, பட்டை இலவங்கம், மஞ்சள் தூள் சேர்த்துப் பிசைந்து சிறிய உருண்டைகளாக உருட்டி வைத்துக் கொள்ளவும்.

இனி பிசைந்த உருளைக் கிழங்கை பெரிய பெரிய உருண்டைகளாகச் செய்து அதில் நடுவில் பள்ளமாக்கி, சிறிய கைமா உருண்டையை அதற்குள் வைத்து உருளைக் கிழங்கால் மூடிவிடவும்.

இனி வாணலியில் எண்ணெயை ஊற்றி காய்ந்ததும் இரண்டாவது உருண்டையை முட்டைக் கலவையில் முக்கி எடுத்துப் போட்டு பொன்னிறமாகச் சிவந்ததும் எடுக்கவும்.

அதை மதியம் சாப்பாட்டுடனோ அல்லது மாலை டிபனாகவோ தக்காளி கெட்சப்புடன். சேர்த்துச் சாப்பிட்டால் சுவையாக இருக்கும்

**- இந்திரா செல்லையா**

ஆறுதல் பரிசு

## உருளைக்கிழங்கு டாஃபி

**தேவையான பொருட்கள்:**

உருளைக்கிழங்கு துருவல் 2 கப்
சர்க்கரை (அஸ்கா) ஒன்றரை கப்
நெய் ஒன்றரை கப்
ஏலக்காய் முந்திரிப்பருப்பு வேண்டிய அளவு

**செய்முறை:**

முதலில் உருளைக் கிழங்கை நன்கு அலம்பி சுத்தம் செய்து தோல் சீவி, கேரட் துருவியில் மெல்லியதாய் 2 கப் வரும்வரை துருவிக் கொள்ளவும். இந்தத் துருவலை வாணலியில் சிறிதளவு நெய் விட்டு வதக்கிக் கொள்ளவும். பிறகு சர்க்கரையைச் சிறிதளவு தண்ணீர் விட்டுப் பாகு செய்து கொள்ளவும். துருவலை பாகில் கொட்டிக் கிளறிக் கொண்டிருக்க வேண்டும். நன்கு கெட்டியாகும் தருவாயில் நெய்யில் / வறுத்த முந்திரிப் பருப்பை சேர்த்து நெய் விட்டுக் கிளறவும். ஏலப் பொடியைச் சேர்த்து நெய் தடவிய தட்டில் கொட்டவும். பிறகு கத்தியால் வில்லைகளாகப் போடவும். இது சாப்பிடுவதற்கு மிகவும் ருசியாக இருக்கும். குழந்தைகளுக்கு இது மிகவும் சத்துள்ள இனிப்புப் பண்டம்.

**- ராஜேஸ்வரி சுப்பிரமணியன்**

ஆறுதல் பரிசு

## உருளைக்கிழங்கு வடாம்

**தேவையான பொருட்கள்:**

பச்சரிசி 1 லிட்டர்
ஜவ்வரிசி 100 கிராம்
உருளைக்கிழங்கு 250 கிராம்
பச்சை மிளகாய் 6
தேவையான உப்பு, பெருங்காயம்

**செய்முறை:**

பச்சரிசியைக் கல் போகக் களைந்து உலர்த்தி ஜவ்வரிசியுடன் சேர்த்து மிஷினில் அரைத்துக் கொள்ளவும். உருளைக் கிழங்கை வேகவைத்து உரித்து மசித்துக் கொள்ளவும். பச்சை மிளகாய், உப்பு, பெருங்காயத்தைத் தனியாக அரைத்துக் கொள்ளவும்.

இரண்டு லிட்டர் தண்ணீரை அடுப்பி லிட்டுக் கொதித்த பின் அடுப்பைச் சற்று தணித்துக் கொண்டு அரிசி மாவையும் அரைத்த மிளகாய் விழுதையும் போட்டுக் கிளறவும். சற்றுக் கெட்டியானதும் இறக்கி மசித்த உருளைக் கிழங்கு விழுதையும் கொட்டி நன்கு கிளறவும். அரை மணி நேரம் மூடி வைத்திருந்து பின் எடுத்துக் கையால் நன்கு பிசைந்துவிட்டு ஓமப்பொடி அச்சிலிட்டு சிறு சிறு வட்டங்களாகத் துணியிலோ பாலதீன் ஷீட்டிலோ பிழியவும். இரண்டு நாட்களில் நன்கு உலர்ந்து விடும். பின் டப்பாவில் எடுத்து வைத்துக்கொண்டு தேவையானபோது எண்ணெயை நன்கு காய வைத்து ஒவ்வொன்றாகப்போட்டுப் பொரிக்கவும். இது மிகவும் கரகரப்பாகவும் சுவையாகவும் இருக்கும்.

- கே. ஜி. லக்ஷ்மி

---

# இம்மாத இல்லத்தரசிகள் போட்டி

பொருள் : பொட்டுக்கடலை
முடிவு தேதி : 15-7-81

**சமையல் கூப்பன்**

இத்துடன் .......... என்ற தலைப்பில் சமையல் குறிப்புக்களை அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# உங்களால் படிக்கமுடியுமா?

**அன்னம் நாராயணன்**

மனித குலத்துக்கு இறைவன் வழங்கியுள்ள தலையான பேறு, காணும் சக்தி ஆகும். இப்பாக்கியத்துக்காக நாம் அனைவரும் கடவுளுக்கு நன்றி பாராட்டுவதுடன், தமது தவறு எதுவுமின்றியே இப்பேற்றை இழந்து நிற்கும் நம் சகோதர சகோதரிகளைப் பற்றிச் சிறிது சிந்திப்போமாக.

ஐக்கிய நாடுகள் நிறுவனம் 1981ம் ஆண்டைச் சர்வதேச ஊனமுற்றோர் ஆண்டாக அறிவித்திருக்கிறது. ஆனால், இந்த அறிவிப்புக்கு வெகு நாட்கள் முன்பாகவே சென்னை நகரில் கடந்த மூன்றாண்டுகளாக Reader's Association for the Blind (பார்வை இழந்தோருக்குப் படிக்கும் சங்கம்) என்ற பெயரில் ஒரு சிறிய அமைப்பு பார்வை இழந்த கல்லூரி மாணவ மாணவிகளுக்குத் தன்னலமற்ற சேவை புரிந்து வருகிறது.

சேவை மனப்பான்மை கொண்ட குடும்பத் தலைவிகள், உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றவர்கள், வேலை பார்க்கும் ஆண் பெண்கள், மற்றும் கல்லூரி மாணவ மாணவிகளே இதன் உறுப்பினர்கள்.

நகரில் பல்வேறு கல்லூரிகளில் படிக்கும் பார்வை இழந்த மாணவ மாணவியர்க்கு அவர்களது அன்றாடப் படிப்பில் உதவுவதே இச்சங்கத்தின் முக்கிய நோக்கம். பாடப் புத்தகங்களைப் படிப்பதோடல்லாமல், அவர்களுக்குத் தரப்படும் பாடப் பயிற்சிகளைத் தயாரிப்பதிலும் உதவுகிறார்கள்.

இவை தவிர, குறித்த காலங்களில் நடைபெறும் வகுப்புப் பரீட்சையிலும், பல்கலைக் கழகத் தேர்வுகளிலும் அவர்களுக்கு Scribe ஆகப் பணி புரிந்தும், அவர்கள் பாடப் புத்தகங்கள் மற்றும் குறிப்புக்களை ப்ரெயில் முறையில் மாற்றி எழுதிக் கொடுத்தும் இவர்கள் கண்ணற்றோருக்குக் கண்களாய் விளங்குகிறார்கள்.

தற்சமயம் இச்சங்கத்தில் 100க்கும் மேற்பட்ட தொண்டர்கள் இருக்கிறார்கள். இவர்களில் 55 பேர் வழக்கமாக பாடப் புத்தகங்கள் படிப்பவர்களும், 30 பேர்கள் வழக்கமாக Scribe ஆகப் பணி புரிபவர்களும் 6 பேர்கள் பிரெய்ல் முறையில் transcribe செய்பவர்களுமாவார்.

80க்கும் மேற்பட்ட பார்வை இழந்த மாணவர்களுக்கு மேற்கூறிய வகையில் உதவி கிட்டியுள்ளது. கல்லூரிகளில் இவர்கள் எண்ணிக்கை அதிகரித்து வருவதால் அவர்கள் தேவைகளைப் பூர்த்தி செய்யத் தொண்டர்களும் அதிக அளவில் தேவைப்படுகின்றனர்.

இம்மாணவர்களை நாட்டின் பயனுள்ள பிரஜைகளாய் உருவாக்கும் உயரிய குறிக்கோளில் என்னோடும், என் சிறந்த நண்பர் குமாரோடும் இணைந்து செயலாற்றுமாறு சேவை உள்ளமும், ஆங்கிலம் மற்றும் தமிழில் சரளமாகப் பழக்கமும் உள்ள அனைத்துச் சகோதர சகோதரியருக்கும் நான் இதன் மூலம் வேண்டுகோள் விடுக்கிறேன்.



# சின்ன சின்ன கண்ணனுக்கு...

மாயா

**"வேண்டாம் போ....!"**

'பன்டி' (Bunty) சாப்பாட்டு மேஜையில் ரகளை பண்ணிக்கொண்டு இருந்தான். பன் ரொட்டி மாதிரி உருண்டு திரண்டு, ஆரோக்கியமான, சந்தோஷமான குழந்தையாயிருந்ததால், அவன் 'பன்ரொட்டி' என்று செல்லமாக அழைத்து அதுவே பன்டி என்று நிலைத்து விட்டிருந்தது.

இந்த மூன்றும் வயதில் அவனுடைய வளர்ச்சி ஓரளவு முழுமை பெற்ற மாதிரி ஆகியிருந்தது. இத்தனை நாள் வளர்ந்த அசுர வேகம் அவன் வளர்ந்தியில் இல்லை போல் தோன்றியது. முகம், தோள்களில் பால் சதையை மீறி எலும்புகளின் உறுதியான வளர்த்தி தெரிய ஆரம்பித்துவிட்டது. அவன் உயரமாக வளர்ந்து விட்டதால் சற்றே மெலிந்தது போல் தோன்றுகிறானே அல்லது கொழுப்புச் சத்து குறைந்து போனதால் உயரமானதுபோல் தோற்றமளிக்கிறானா என்கிற குழப்பம். நாம் கொடுத்ததை சோதித்துப் பார்க்காமல், சுவைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தவன், தட்டில் இருப்பதைப் பார்த்து, 'இது வேண்டாம்' என்று தள்ளத் தெரிந்து கொண்டிருக்கிறான்.

தயிர் சாதத்தைக் கண்டால் 'பன்டி'க்குக் கொஞ்ச நாளாகப் பிடிப்பதில்லையாம்.

தயிர் சேராவிட்டால் உடம்பு சூடு ஆகி விடுமாமே!

உடம்புக்குத் தேவையான சத்து கிடைக்காமல் போய்விடுமே!

அவன் அம்மாவுக்குக் கவலை.

எல்லாவற்றையும் விரும்பிச் சாப்பிட்டுக் கொண்டிருந்த குழந்தை திடீரென்று சாப்பாட்டு விஷயத்தில் 'மக்கர்' பண்ணுகிறதன் காரணம் என்ன?

இதை அறிய எனக்கு ஆவலாக இருந்தது.

"முதலில் போடும் பருப்புச் சாதமே வயிற்றை நிரப்பிவிட்டதால் அடுத்த உணவு வேண்டியிருக்கவில்லையோ! பருப்பு சாதத்தின் அளவைக் குறைத்துப் பார்க்கலாமா?"

"பருப்பு சாதத்தின் பசும் நிறமும் மணமும் அவனுக்குப் பிடித்தமாயும், தயிர் சாதத்தின் அடிக்கிற வெள்ளை நிறம் பிடிக்காமலும் போயிருக்கலாமோ?

"இவர்களை அறியாமல் ஒரு நாள் புளிப்புத் தயிரைக் கலந்து கொடுத்து விட்டு, அந்த அதீத ருசி அவனுக்குப் பிடிக்காமல் போய், அதிலிருந்து தயிர் சாதத்தை ஒதுக்குகிறானோ?"

ஒரு குழந்தை தனிப்பட்ட ருசி, அருசிகளை வளர்த்துக் கொள்கிற நேரத்தில் சத்துமிக்க உணவுகளை அவனுக்குப் பிடித்தமானதாக்க, நாம் சிறிது நேரத்தைச் செலவிட்டு, சிரமப்படத்தான் வேண்டியிருக்கும்.

தினம் ஒரேவிதமான உணவு, கட்டாயப் படுத்துதல், அதீத ருசிகள், குழந்தைக்கு



பிரமிப்பூட்டும் அளவு அதிக உணவை ஒரே சமயத்தில் தட்டில் அள்ளி வைத்துக் கொடுத்தல், மசாலா நெடியுள்ள உணவுகள் — இவையெல்லாமே உணவின்பால் அவனுக்கு ஒரு வெறுப்பைத் தூண்டக் கூடும்.

ஐந்து வயதுவரை — பிற்கால ஆரோக்கிய வாழ்வெனும் பலமாடிக் கட்டிடத்தின் அஸ்திவாரம் பலமாகப் போடப்பட வேண்டிய காலம். அதே சமயம், தொற்று நோய்கள் குழந்தைகளை அதிகம் பீடிக்கும் காலமும் இதுவே. இந்த வயதில் அளிக்கப்படும் உணவு, நோய்களை எதிர்த்து நிற்கும் சக்தியையும், பலமான ஈறு, பல், எலும்பு வளர்ச்சியையும், மொத்த உடல் வலுவையும் அளிக்கத் தக்கதா யிருக்க வேண்டும்.

சாதாரணமாக, குழந்தைகள் படுக்கையை விட்டு எழுந்திருந்ததும், பற்களைச் சுத்தம் செய்வது போன்ற சுகாதாரப் பழக்கங்களை இந்த வயசில் ஆழப் பதியுமாறு வழக்கப் படுத்தி விடுதல் அவசியம். ஆயுள் பூராவும் இவை நிலைத்துவிடும். காலையில் முதல் உணவாக ஒரு டம்ளர் பால் கொடுங்கள். வெறும் பாலின் நிறமோ, மணமோ பிடிக்காத குழந்தைகளுக்கு 'போர்ன்விட்டா' போன்ற ஏதேனும் கலந்து கொடுக்கலாம். இத்தகைய விலை உயர்ந்த உணவுகளை வாங்க முடியாதவர்கள் சோளம், கேழ்வரகு, பொட்டுக்கடலை, மூன்றையும் சுத்தம் செய்து வறுத்துப் பனங்கற்கண்டு அல்லது வெல்லச் சர்க்கரை சேர்த்து, மாவாக அரைத்து வைத்துக் கொள்ளவும். இந்தப் பொடியைப் பாலிலோ நீரிலோ கலந்து கொடுக்கலாம். இது ப்ரோட்டீன், தாதுப் பொருட்களைப்பொறுத்

---

பீங்கான் ஜாடி தாறுமாறாக உடைந்திருந்தால் ஜாடியின் (பெரிய) நன்றாக உள்ளபகுதி வரை நீரை ஊற்றி வெள்ளைத் துணியை மண்ணெண்ணெயில் தோய்த்து வெளிப்பக்கம் தண்ணீரின்மேல் மட்டத்துக்கு மேல் நன்றாக இறுகக் கட்டிவிட்டு வெள்ளைத் துணியைத் தீப்பற்ற வைக்க வேண்டும். நன்றாக எரிந்து சாம்பலாகிய பின் தண்ணீரின் மேல் மட்டம் வரை ஒரே அளவாக உடைந்துவிடும். பிறகு வேறு மூடி உபயோகப்படுத்தலாம். —சித்ரா



வரை ரொம்பவும் Rich powder தான். பால் வாங்கச் சக்தி யில்லாதவர்கள் தினமும் பொட்டுக் கடலை, கேழ்வரகு பொடியை தண்ணீரில் காய்ச்சி, கஞ்சியாக்கிக் கொடுக்கலாம். இது வளரும் குழந்தைக்கு நல்ல உணவாகும்.

அடுத்தபடி சுமார் எட்டரை மணிக்கு காலை உணவாக எண்ணெய் அதிகம் சேராத இட்லி, தோசை, ப்ரெட், உப்புமா, கார்ன் ப்ளேக்ஸ், ஓட்ஸ் போன்ற மிருது உணவுகளில் ஏதாவது ஒன்றையும் வேகவைத்த முட்டையையும் கொடுக்கலாம். பனிரெண்டு மணி அளவில் மதிய உணவாக பருப்பு, கீரை, காய்கறிகள் கலந்த ஆகாரம். மாலை உணவாக பால்கலந்தபானத்துடன் குழந்தைகளுக்குப் பிடித்தமான தின்பண்ட வகைகளும், பழ வகைகளும் கொடுக்கலாம். இரவு சாப்பாடு ஏழு ஏழரை மணிக்குள் கொடுத்து விடுதல் நலம். இரவு நேரம் கழித்து உண்ணுதல் குழந்தைகளின் நலனைப் பாதிக்கக் கூடிய ஒரு பழக்கம். படுக்கப் போகு முன் ஒரு டம்ளர் பால் தருவது அவசியம்.

இந்த உணவு வேளைகளிடையே நொறுக்குத் தீனி தின்னும் பழக்கத்தைக் கூடியவரை குழந்தைப் பருவத்திலிருந்தே தவிர்த்தல் நலம். ஆனால் குழந்தைகளுக்கு இதில் உள்ள ஈடுபாடு நாம் அறிந்ததே. இந்தச் சமயங்களில் எளிதில் ஜீரணைப்பட்டுப் போகின்ற உணவுகளாக சோளப் பொரி, அரிசிப் பொரி, கொய்யா, ஆப்பிள், ஆரஞ்சு போன்ற Crisp fruits பச்சை காரெட், பொட்டுக் கடலை மிட்டாய் போன்றவைகளைக் கொடுக்கலாம். பல்லில் ஒட்டும் இனிப்பு வகைகளைத் தவிர்ப்பது அவர்களின் ஆரோக்கியத்திற்காகவே. பால் அதிகம் சேர்க்க முடியாதவர்கள் அதற்கு ஈடாக உணவில் வேர்க்கடலையைச் சேருங்கள். பழங்கள் அதிகமாக உண்ணக் கொடுக்க இயலாதவர்கள் அதிகக் கீரை வகைகளை மசித்து உண்ணத் தாருங்கள். இது மலச் சிக்கலைத் தவிர்க்கும்.

கூடியவரை குழந்தைகளுக்கு டாம்பீகம் கருதியோ, நாகரிகம் எனத் தவறாகக் கணித்தோ, சாக்லேட், பப்பர்மிட், ஐஸ் கிரீம், பாட்டிலில் அடைத்த குளிர் பானம் இவைகளை வாங்கித் தருவதைத் தவிருங்கள். இத்தகைய பொருட்கள் குழந்தைகளின் வளரும் பற்களை ஆரம்பத்திலேயே பலவீனப்படுத்தி, நுண் கிருமிகளை வளர விட்டு, நோய் பிடிக்கவும் செய்கின்றன. தவிர, இவை சத்தான சாப்பாட்டில் அவர்களுக்கு உள்ள பிடித்தத்தைக் குறைத்து விடுகின்றன.

குழந்தைகள் ஆரம்பத்தில் சுயமாக, அதிக சூட்டையோ, அதிக குளிர்ச்சியையோ உணவில் விரும்புவதில்லை. வெது வெதுப்பான, மிருதுவான (நன்கு வேகவைத்த கறிகாய், பழம், மசித்த சாதம், பருப்பு வகைகள், பழக் கூழ்) உணவுகளையே விரும்புகிறார்கள்.

உங்களுக்குப் பிடித்த உணவு வகைகளையே உங்கள் குழந்தை உண்ண வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள். அதே போல் நீங்கள் வெறுக்கும் பதார்த்தங்களை உங்கள் குழந்தையும் ஒதுக்க வேண்டும் என்று கட்டாயப்படுத்துகிறீர்கள். அவன் இஷ்டத்துக்கு நல்ல பொருட்களைச் சாப்பிட அனுமதியுங்கள். நீங்கள் பிடிவாதம் பிடித்து, அவனையும் பிடிவாதக்காரனாக்கி, அவன் சாப்பாட்டு விஷயத்தை வீட்டில் ஒரு பிரச்னைக்குரிய விஷயமாக்கிவிடாதீர்கள். ஒரு குழந்தை சாப்பிட மறுத்தால், உடனே மறு பேச்சின்றி சாப்பாட்டுத் தட்டை அகற்றிவிடும்படி ஒரு குழந்தை உணவு நிபுணர் ஆலோசனை கூறுகிறார். அடுத்த வேளை அவன் வீம்பு செய்ய மாட்டான். எந்தக் குழந்தையும் பசித்திருக்க விரும்பாது.

எந்தச் சூழ்நிலையில் எந்தச் சாப்பாட்டை எந்த அளவில் உங்கள் குழந்தை விரும்பி உண்கிறதென்பதை, தெரிந்து, புரிந்துகொள்ளுதல் நலம்.

சில வேளைகளில் பொதுவான அளவை விட குறைத்துச் சாப்பிட்டாலும், அதிகம் சாப்பிட்டாலும்பொருட்படுத்தவேண்டாம். தினமும் தானே சாப்பிடும் ஒரு பெரிய குழந்தை சில வேளைகளில் நீங்கள் ஊட்டி விட வேண்டும் என்று விரும்பலாம். கேலி செய்து அவனைக் கூச்சப்படுத்தாமல், ஒரு தடவை நீங்கள் செய்யும் அந்த அன்புச் செயல், எத்தனையோ விதத்தில் அவனை மகிழ்வித்துத் திருப்தியுறச் செய்யும்.

சாப்பாட்டில் பிடித்தமில்லாத குழந்தைகளை சத்தான உணவின் பயன்களை அவன் வியக்கும்படி வர்ணித்து ஈடுபாடு கொள்ள வைக்க வேண்டும். (மிக அழகானவனாக, பளபளக்கும் கண், குண்டு கன்னம், நல்ல அறிவு, இவற்றுடன் வளருவான் எனக் கதைகள் மூலம் கூறுங்கள்.)

பொதுவாக இந்தியக் குழந்தைகள் வளர்ச்சிக்கு இன்றியமையாத தேவையான புரதச் சத்துக் குறைவினால் மிக பாதிக்கப்படுகின்றன. நம் விஞ்ஞானிகளும், எத்தனையோ விதப் பரிசோதனைகள் மூலம், விலை மலிவாக எளிதில் எல்லோருக்கும் கிடைக்கும் புரதத்தைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் மிகவும் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார்கள். 'ஆவின்' பால், மற்றும் TAPCO அளிக்கும் முட்டைகள் – ஒரு வரப்பிரசாதம் என்றே கூறலாம்.

எந்தப் பிண்ணாக்கும் மிக நல்ல புரதம் (Protein concentrate ) நிறைந்த உணவாகும். சிறிதும் எண்ணெய்ப் பசை இல்லாத பிண்ணாக்கு வீணாக்கப்படாமல், பிஸ்கட், பானம் என்கிற உருவில் தயாரிக்கப்பட்டு குழந்தைகளுக்கு அளிக்கப்பட்டால், அதுவே நம் நாட்டில் சைவ உணவு உண்பவர்களுக்கு மலிவு விலையில் தலைசிறந்த புரதமாக அமையும்.



கருவுற்ற பெண்கள் 'ஆஸ்ப்பிரின்' மருந்துகளைச் சாப்பிட்டால் அவர்களுக்குப் பிறக்கும் பிராணவாயு அளவு குறைந்த குழந்தை நீல நிறமாகிவிடும் என்று கனடா நாட்டைச் சேர்ந்த 'ரிச்சர்ட் ரோம்' என்ற டாக்டர் எச்சரித்துள்ளார். எஸ். விஜயன்

---

புரதச் சத்து, இரும்பு, மற்றும் சுண்ணாம்புச் சத்துக்கள் – இரத்தம், பல், எலும்பு வளர்ச்சிக்கு மிகத் தேவையானவை. மாத மளிகைப் பட்டியலில் அரிசி, கோதுமையோடு கேழ்வரகும் இருக்கட்டும். அந்த மாவில் பல தின்பண்டங்கள் செய்து வளரும் குழந்தைகளுக்கு அளியுங்கள்.

கீரை வகைகள் மனித வாழ்வில் எந்தப் படியிலும் உண்ண வேண்டிய முக்கிய எளிய உணவாகும்.

ஒவ்வொரு வேளைச் சாப்பாட்டுக்குப் பிறகும், குழந்தைக்கு ஒரு காரெட்டோ, பழமோ (Crisp fruits) சாப்பிடக் கொடுங்கள். இது பல்லைச் சுத்தப்படுத்துவதோடு போதுமான தாதுப் பொருள், வைட்டமின்களைக் குழந்தை அடைய உதவுகிறது.

பள்ளி செல்ல ஆரம்பித்த உடன் அவன் உணவு வேளைகளில் சிறிது மாறுதல் ஏற்படும். ஒரு வாரம் முன்னதாகவே சிறிது சிறிதாக பழக்கத்தை மாற்றிவிடுதல் சுலபம். நன்கு காய்ச்சிய நீரை அவனுக்குக் கொடுத்தனுப்புங்கள். பள்ளிக்கு அருகில் உள்ள கடைகளில் தின்பண்டம் வாங்கித் தின்னும் பழக்கத்தை அவன் வெறுக்கும்படி செய்ய வேண்டும்.

மிகச் சிறிய விஷயங்கள் மிகப் பெரிய காரியங்களுக்கு அஸ்திவாரமாக அமைகின்றன. பள்ளிக்கு அனுப்பு முன் உங்கள் குழந்தை நோய் எதிர்ப்புச் சக்தி உள்ளவனாயும், ஆரோக்கியமாக, சீக்கிரம் சோர்வடையாதவனாக, வலுவான எலும்பு, பற்களுடன் நல்ல உணவு, சுகாதார மனப் பழக்கங்களுடன் வளர்ந்திருக்கிறான் என்று உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள். பிறகு வாழ்க்கை முழுவதும் அவனைப் பற்றிக் கவலைப்படவேண்டிய நிமிஷம் உங்களுக்கு ஏற்படாமல் அவன் பார்த்துக் கொள்வான்.

# அழகுப் பூக்கள்

## தேவையான பொருள்கள்

(1) வெள்ளை ஆர்கண்டி, பச்சை ஆர்கண்டி
(2) லான் வெள்ளையிலும், பச்சையிலும்.
(3) 26 கேஜ் வயர் 6(3½'' நீளத்தில்)
(4) 30 கேஜ் வயர், 7
(5) வெள்ளையான டேப்
(6) துணிகளுக்குப் போடும் கஞ்சி

சென்ற முறை காகிதத்தால் செய்யும் பூக்களைப் பார்த்தோம். இதைவிட இன்னும் அழகாகத் துணியால் பூக்களைச் செய்யலாம். இந்தப் பூக்கள் திருமணப் பெண்களை அலங்கரிக்கவும், பூச்சாடியில் வைப்பதற்கும், கிறிஸ்துவத் திருமணங்களில் பெண்ணின் தலையில் வைக்கும் தொப்பியில் வைப்பதற்கும் பயன்படுத்தலாம்.

சாதாரணமாகவே துணியால் பூக்களைச் செய்யும்போது ஆர்கண்டி துணிக்கு ஒரு தடவை கஞ்சி போட வேண்டும். லான் துணிக்கு ஒரு தடவை போட்டு, அது உலர்ந்ததும் இரண்டாவது தடவை போட வேண்டும். கஞ்சி மைதா மாவாலும், அரரூட் மாவாலும் கூடத் தயார் செய்யலாம்.

இரண்டு துணிகளும் உலர்ந்ததும் அதை இஸ்திரி போட்டுவிட வேண்டும்.

இனி வரைபடங்களைக் கவனியுங்கள்.

முதல் படம் பூவிதழின் படம். அதையே ட்ரேஸ் செய்து அதே அளவுக்கு வெள்ளை லானில் நான்கு இதழ்களையும், வெள்ளை ஆர்கண்டியில் எட்டு இதழ்களையும் வெட்டிக்கொள்ளுங்கள்.

இரண்டாவது படம் மலர்களின் காம்புகளைக் குறிக்கும். படத்தில் உள்ள அளவுக்கு நன்கு வெட்டிக் கொள்ளுங்கள். ஓரத்தில் படத்தில் உள்ளது போல் வெட்டிவிடுங்கள்.

இனி மகரந்தம் தயாரிக்க வேண்டும். பட்டு நூலோ, கம் பனிநூலோ மூன்றரை அங்குல நீளத்துக்கு ஆறு எடுத்துக்கொண்டு அதைப் படத்தில் உள்ளது போல் 26 கேஜ் வயரால் இறுகக் கட்டி விடுங்கள். பிறகு அதன் நுனிகளை வெட்டிவிட்டு, அதன் நூல்களை புசுபுசுவென்று பிரித்து விட வேண்டும். ஓரத்தைப் பந்து போலச் செய்துவிட்டு கம்பி கட்டியுள்ள நடு பாகத்தை மடித்து 30 கேஜ் வயரால் நான்காம் படத்திலுள்ளது போலக் கட்டிவிடுங்கள்.

(படம் 5) இனி மலரின் இதழ்களைக் கவனிப்போம். இயல்பாகவே ஆர்கண்டி கஞ்சி போட்டு, இஸ்திரி செய்து வெட்டியவுடன் சுருண்டு கொள்ளும். ஆர்கண்டியில் நான்கு இதழ்களையும் லானில் நான்கு இதழ்களையும் எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு லான், ஒரு ஆர்கண்டி என ஒன்றின் மே ஒன்றாக வைத்து, அதன் மேல் பாகத்தையும் அடிப் பாகத்தையும் மட்டும் ஒட்டிப் படத்திலுள்ளது போல அமைத்துக் கொள்ளுங்கள். அதன் நடுவில் மகரந்தத்தைச் செருகிக் கம்பியால் நன்கு கட்டிவிடுங்கள்.

(படம் 6) மீதி நான்கு வளைந்த ஆர்கண்டி இதழ்கள் இருக்கும். அவற்றை, முதல் நான்கு இதழ்களின் நடுநடுவே அமைத்து அத்தனையையும் இறுக்கமாக 'டேப்'பில் சுற்றிவிடுங்கள்.

பச்சை லானில் தயாரித்துள்ள காம்பை டேப்பின் மேல் வரிசையாக அமைத்து, டேப்பால் இறுக்கிச் சுற்றிவிடுங்கள். டேப் தெரியாமல் இருக்க அதன் மேல் லேசாகப் பச்சை வர்ணத்தைப் பூசிவிடலாம்.

(படம் 7) முடிவில் மலர்ந்த பூக்கள் கிடைக்கும்.

-ரத்ந நரசிம்மையா





▫ லட்சுமியின் அட்டை வண்ணப் படம் 'லட்சுமிகரமாய்' உத்ராவின் கைவண்ணத்தில் அருமையாக மிளிர்ந்துள்ளது. ''நான் சாக விரும்பவில்லை'' என்ற திடுக்கிடும் தலைப்பில் நடிகை — சாரி டைரக்டர் லட்சுமி வழங்கிய பேட்டிக் கட்டுரை புதுமை— அருமை.

வி. மஞ்சுளா வழங்கிய ''காஸ்...காஸ்... காஸ்...'' இல்லத்தரசிகளுக்கு ரொம்ப யூஸ். யூஸ்...யூஸ்!

மாயூரம் பிரபாவதி

▫ வரதட்சிணைப் பிரச்னை குறித்து ஸ்ரீகாஞ்சி சுவாமிகளின் கட்டுரை முதல் பக்கம் வந்த முதல் தரமான கட்டுரை. பெண்களின் இன்றைய சீர்குலைவு எதில் என்று உணர வைத்துவிட்டது ஜகத்குருவின் தீர்க்க தரிசனம். மாதா மாதம் ஒரு அருள்மொழியை இதுபோல் தொடர்வீர்களா?

திருநெல்வேலி ஜி. சதாசிவம்

▫ 'மதங்களை விட மனங்களை நேசிப்பவள் நான்' என்ற அனுராதா ரமணன் அவர்களின் வரிகளில் தெரியும் கவிதை நயம், மனசில் பட்டதை அப்பட்டமாய் வெளிக் கூறும் பேட்டிக் கட்டுரை இவ்விதழின் சிறப்பான அம்சம். 'குறைகளைச் சொல்லும்போது மட்டும் ஏன் கோபம் வருகிறது?' என்று கேட்பவர், தொடர்ந்து அவர் கதைகளைப் பிரசுரித்து வரும் பத்திரிகை உலகத்தையும் அதற்குக் காரணமான பெரும் வாசகர் கூட்டத்தையும் ஒரு கணம் மறந்து போய் விட்டாரோ என்ற மனத் தாங்கலை உண்டு பண்ணி விடுகிறார். தெளிவான கருத்துக்களை உடைய அவருக்கு இது விஷயமாக நிச்சயமாய் மனக் குறை தேவையில்லை.

திருச்சி-4 ப. விஜயராகவன்

▫ ''காஸ்., காஸ்.! காஸ்..?'' கட்டுரை பயனுள்ள பகுதி. சிலிண்டருக்குப் பதிவு செய்துள்ள எனது நண்பரின் சகோதரி இந்த இதழை வாங்கி வரச் செய்து பத்திரப் படுத்திக் கொண்டுள்ளார். மத்திய பெட்ரோலிய அமைச்சர் திரு சேத்தி குறிப்பிட்ட படி, பதிவு செய்தவர்களுக்கு இந்த ஆண்டு இறுதிக்குள்கிடைத்தால் தாய்மார்கள்அவரை மனமார வாழ்த்துவார்கள்.

மேட்டுப்பாளையம் எம். ரத்தினகுமார்

▫ இந்திரா பார்த்தசாரதியின் ''கமனியக் கனவுகள்'' கல்யாணியின் பாத்திரப் படைப்பின் முழுமையில் மனம் ஒன்றிப்போனேன். நுண்ணிய உணர்வோட்டங்களை, உயர் கல்வியின் ஆவேசப் பிரவாகத்தை — ஆடவர்க்கு மெல்ல அடங்கிப் போகும் அவலத்தை— பெண்மையின் ஏலாமையை அர்த்த புஷ்டியுடன் எழுத்தில் வடித்தபோது ரேணு மட்டுமா அதிர்ச்சி அடைந்தாள்? படித்து முடித்த போது கண்கள் கண்ணீரில் கலங்கி எழுத்தை மறைத்தன. மை காட்! பெண்மையைப் போற்றுவதாக வாய் கிழியப் பேசியும் எழுதியும் வருபவர்கள் சிந்திப்பார்களா?

காட்பாடி தீபப்ரியா

▫ தங்களின் ஜூன் மாத மங்கையர் மலர் படித்தேன். 'நான் சாக விரும்பவில்லை'— என்ற நடிகை லட்சுமியின் சுய சரிதக் கட்டுரையில், அவர் தன்னைப் பற்றி இவ்வளவு விரிவாக, தெளிவாக வேறு எந்தப் பத்திரிகைகளிலும் கூறியதில்லை என்று எண்ணுகிறேன். இந்தக் கட்டுரையின் வாயிலாக ஆச்சரியமான ஓர் உண்மையைத் தெரிந்து கொண்டேன்.

விருத்தாசலம் எம்.ஏ. பேபி சாதுல்லா

▫ மாதா மாதம் தாங்கள் வெளியிடும் ஹோமியோபதி சிகிச்சை முறைக் கட்டுரை மிகவும் நன்றாக இருக்கிறது. நாம் அலட்சியமாக ஒதுக்கிவிடும் மருத்துவ முறைகளின் சிறப்பைப் புரிந்துகொள்ள முடிகிறது. தொடருங்கள் உங்கள் பணியை.

மேற்கு மாம்பலம் லக்ஷ்மி சீதாராமன்

▫ மாயா 'உணவும் ஆரோக்கியமும்' பற்றிக் கட்டுரை எழுதுகிறாரா கதை எழுதுகிறாரா? சுவையான நடையில் எழுதும் இவர் கட்டுரை படிப்பதற்கு எளிதாகவும், சுவையாகவும் பயனுள்ளதாகவும் இருக்கிறது.

தஞ்சாவூர் மங்களம்



# வேலைக்கு செல்லும் பெண்ணே




அன்புள்ள வனிதா,

வேலை என்று வந்துவிட்டால் பரபரப்பும், அவசரமும் ஏற்பட்டு விடுவது இயற்கையே. காலை நேரத்து அவசரத்தில், ஆத்திரமும் எரிச்சலும் பொங்கும். சமையல், கையோடு டிபன் இத்யாதிகள். குழாய் நீர் சரிவர வராவிட்டால் அது ஒரு பிரச்னை.

எரியும் அடுப்பு 'காஸ்' 'மண் எண்ணெய்' என்று தீர்ந்து போனால் தொலைந்தது. ஒரு ருத்ர தாண்டவமே ஆடிவிடலாம் போல் தோன்றும். இதனால் மறதிகள் ஏற்படும். குழப்பங்கள் விளையும். இவற்றையெல்லாம் யோசித்துப் பார்த்து முன்கூட்டியே முடிவு காண்பதுதான் புத்திசாலித்தனம்.

நமது பத்திரிகைகளில் அடிக்கடி வரும் ஒரு நகைச்சுவைத் துணுக்கை நீ படித்திருப்பாய்.

ரயிலில் குடும்பத்தினர் முழுவதும் ஏறியான பிறகு, ''ஏங்க... வீட்டு வாசல் கதவைப் பூட்டினேனோ இல்லையோன்னு நினைவில்லீங்க.'' – குடும்பத் தலைவனுக்கு எப்படி இருக்கும்?

இதுபோல பல மறதிகள், அதிலும் வேலைக்குச் செல்லும் உனக்கு ஏற்படலாம். 'காஸ்' அடுப்பானால் அதைச் சரிவர மூடினேனா என்ற சந்தேகம், உனக்கு ஆபீஸ் வந்த பிறகு தோன்றலாம்.

''ஸ்டவ்வை அணைத்தேனா... அடேடே! பாலை எடுத்துக் கவனமாக வைக்க மறந்திட்டேனே, பூனை குடிச்சிடுமோ?''

''படுக்கை அறை ஜன்னலைச் சரிவர மூடினேனா''

பிரிட்ஜ் வைத்திருப்பவரானால் ''தயிரை எடுத்து வைத்தேனே... வெளியிலே கிடந்தால் வீடு திரும்பும் முன் புளித்துப் போய் விடுமே!''

இப்படிப் பல கவலைகள் உன்னை ஆபீஸ் வேலையைச் செய்ய விடாமல் சூழ்ந்து கொள்ளும்.

வேலைக்கு வரும் பெண்கள், வீட்டு நினைப்புடனேயே வருகிறார்கள் என்று உடன் வேலை செய்யும் பல ஆண்கள் குற்றம் சாட்டுகிறார்கள். இதற்கு ஏன் இடம் கொடுக்கவேண்டும்?

வீட்டில் உதவி செய்ய ஆட்களோ, உறவினரோ இருந்தாலும் வீட்டின் தலைவி என்ற வகையில் உனக்கும் பொறுப்புண்டு.

காலைச் சமையல் குறிப்பு முதல், குழந்தை இருந்தால் அவர்களைக் கவனிப்பது வரை உனது பொறுப்புத்தான்.

சமையல், சாப்பாடு, குழந்தை, கணவன், என்று மேற்பார்வையாவது இட வேண்டும். அப்போதுதான் குடும்பம் சரிவர இயங்கும்.

வீட்டுக்குத் தேவையானவைகளை நிர்ணயம் செய்வதில் உன் திறமை பளிச்சிட வேண்டும்.

சில வீடுகளில், ''அம்மாவும் ஐயாவும் ஆபீஸ் புறப்பட்டுப் போனால், வீட்டில் இருப்பவர்கள் வைத்ததுதான் சட்டம். பூனை வெளியேறினால் எலிகளும் கொட்டமடித்த கதைதான். எனவே வீட்டுத் தலைவிக்கு எல்லாம் தெரியும். நேரம் இன்மையால்தான் மற்றவர்களின் உதவியை அவள் நாடுகிறாள் என்ற உண்மை மற்றவர்களுக்கு உரைக்கும்படி செய்தல் அவசியம்.

''காலைல கிட்டத்தட்ட அரை லிட்டர் பால் வச்சிருந்ததே'' என்ற நினைப்பு இருக்க வேணும்.

மளிகைச் சாமான்கள், காய் கறிகள் போன்ற அவசியப் பண்டங்களைப் பற்றிய எச்சரிக்கையும் தேவை.

''முந்தாநாள்தானே ஒரு கிலோ எண்ணெய் வாங்கினேன். அதுக்குள்ளே எங்கே போகும்?'' என்ற கணக்கு வழக்குத் தெரிந்து கொள்ள வேண்டும்.

நம்பகமான உறவினர்கள் இருந்தால் நிம்மதி. ஒரு சமயம், தன் கையே தனக்கு உதவி என்று வந்து விட்டால்....

நிறையக் கவனம் தேவைதான்.

அடுப்பிலே பாலையோ, எண்ணெயையோ வைத்துவிட்டு வேறு வேலையாகப் போகக் கூடாது.

''என் புடவைக்கு இஸ்திரி போடலே, ஆபீசுக்கு எப்படிப் போறதுன்னு போனேன். அதுதான்'' என்று சமாதானம் சொல்லக் கூடாது.

அடுப்பிலே வதக்குவதற்குக் காய்களைப் போட்டுவிட்டு, ''சின்னதாய்த்தானே வச்சிருக்கேன், இதோ சின்னவளைக் குளிப்பாட்டிவிட்டு வந்திட்டாப் போச்சு'' என்று போனால் பொரியல் கிடைக்காது. கருகல் தான் கிடைக்கும்.

எல்லாராலுமே அஷ்டாவதானம் செய்ய முடியாதுதான். அதனால், முதல் நாளே முன் கூறியபடி ஆபீஸ் அவசரத்திற்குத் தயார் செய்துவிடு.

மறுநாள் காலை குளித்து, சமையலறைக்குள் புகுந்தால் சமையல் மீதே கண்ணாக இரு.

சமையல், சாப்பாடு முடிந்து எஞ்சியவற்றைச் சரிவர மூடிவைத்து, அடுப்பை அணைத்தோமோ என்று ஒரு முறைக்கு இரு முறை பார். பாதி வழியில் போய் 'காஸை' மூடினோமா, ஸ்டவ்வை அணைத்தோமா என அவதிப்படத் தேவையில்லை.

புறப்படும் அவசரத்தில் வாயில் கதவைப் பூட்டினோமா, கையில் சாவியை எடுத்துக் கொண்டோமா என்ற சந்தேகம் வராமல் கவனமாக இரு.

அதற்காகப் பூட்டுக்களைப் பூட்டினோமா இல்லையா என்று அதைப் பிடித்துத் தொங்கிக்கொண்டே இருக்க வேண்டாம். அடிக்கடி அப்படிச் செய்தால் நாதாங்கியே பெயர்ந்து கையோடு வந்து விடும்.

நமது கஷ்டங்களை மறக்க மறதி ஒரு மாமருந்துதான் ஒப்புக்கொள்கிறேன். காலம் செல்லச் செல்ல மறதி என்ற மாயத்தால் துயரங்கள் அழிந்து போகும் என்பதெல்லாம் பெரிய விஷயங்களுக்குச் சொல்லப்பட்டவை. அன்றாட நியதிகளில் அல்ல.

மறக்க வேண்டியவை வேறு. இல்லத் தலைவி மறக்காமல் இருக்கவேண்டியவை பல.

வீட்டைப் பூட்டிக் கொண்டு இறங்கிய பின் வீட்டைச் சரிவரக் கவனித்துவிட்டோம் என்ற திருப்தியில் அப்படியே மறந்து விடலாம்.

ஆபீஸ் போனதும், வேலையில் உன் கவனம் முழுமையாகப் பதிய வேண்டும். ஏனெனில் அங்கேயும் மறதி ஏற்படக் கூடாதே!

''என்ன ஸார் செய்யறது? வீட்ல, புறப்படும்போதே ஒரே அவசரம். அப்படி அப்படியே போட்டுவிட்டு ஓடி வந்து விட்டேன். இங்க வந்து 'மனசே குழம்பிட்டுது'' என்று மேலதிகாரியிடம் சொல்ல முடியுமா? சொல்லத்தான் விடுவாரா?

''எதுக்குத்தான் இந்தப் பொம்பளைங்க வேலைக்கு வராங்களோ'' என்று உன் காது கேட்குமளவுக்குக் கோபத்தில் பற்களைக் கடிப்பார். எனவே கவனமாக இரு. மறதியாக இராதே.

வேலைகளைச் சரிவரப் பங்கிட்டு, அந்த நேரத்தில் இயங்கினால், மறதிக் குழப்பம் ஏற்படாது. காலைத் தூக்கத்தைச் சிறிதளவு செய். அரை மணி முன்னதாக எழுந்தால் அவசரம் இல்லை. அவசரம் இல்லையேல் மறதியும் இல்லை. மறதி இல்லையேல்... மன நிம்மதி உண்டாகும்.

---

## யோசனை

நாம் வாங்கிய பால் கெட்டுப்போகும் நிலையில் இருந்தால் பால் திரிந்து போகாமல் இருக்க ஒரு துளி சோடா உப்பை (சமையல் சோடா) போட்டுக் காய்ச்சவும். பால் திரிந்து போகாது. —நாருன்னிஸா



# திருமண மலர்



27 வயதுள்ள கௌசிக கோத்ரம், சொந்தமாக மருந்துக் கடை வைத்துள்ள பிராமண இளைஞனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த படித்த மணமகள் தேவை.

## பெட்டி எண் 38

கௌண்டின்ய கோத்ரம், பிரஹசரணம், 31 வயது, அஸ்வதி நட்சத்திரம், பி.காம் மூன்றாம் ஆண்டு படிக்கும் தமிழக அரசுத் துறை உதவியாளர் பதவியில் உள்ள பெண்ணுக்குத் தகுந்த வரன் தேவை.

## பெட்டி எண் 39

டி.காம் படித்த வடமாள் ஐயர் வகுப்பைச் சேர்ந்த 26 வயதான, 160 செமீ. உயரமுள்ள, அழகிய பெண்ணுக்கு கௌடின்ய கோத்திரத்தவரல்லாத மணமகன் தேவை. பெண்ணின் நட்சத்திரம் மூலம் 2-ம் பாதம். மேல் விவரங்களுக்கு அணுகுக.

## பெட்டி எண் 40

கார்க்க கோத்ரம், மூல நட்சத்திரம் 4ம் பாதம். பிரஹசரணம் கேரள பிராமண வகுப்பைச் சார்ந்த 32 வயதுடைய தனியான தொழில் புரியும் பொறியியல் படித்த பையனுக்கு மணமகள் தேவை. வயது 26க்குள் – ஜாதகத்துடன் புகைப்படம் அனுப்புதல் நன்று.

## பெட்டி எண் 41

அரசுத் துறையில் ரூ. 600 மாத வருமானம் பெறும் ஸ்ரீவத்ஸ கோத்ரம், அவிட்டம் நட்சத்திரம், பிராமண வகுப்பைச்சேர்ந்த 31 வயதுப் பெண்ணுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த நல்ல வேலையில் உள்ள மனிதாபிமானமுள்ள, குணமுள்ள 37 வயதுக்குள் மணமகன் தேவை. பையனின் புகைப்படத்துடன் பதில் அனுப்பவும். உடனடியாகத் திருமணம் நடத்தப்படும்.

## பெட்டி எண் 42

தனியார் கம்பெனியில் வேலை செய்யும் கௌசிக கோத்ரம், அஸ்த நட்சத்திரம், பிராமண வகுப்பைச் சேர்ந்த 28 வயது பெண்ணுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த நல்ல வேலையில் உள்ள மனிதாபிமானமுள்ள குணமுள்ள, வரதட்சிணை எதிர்பாராத மணமகன் 37 வயதுக்குள் தேவை. பையனின் புகைப்படத்துடன் பதில் அனுப்பவும். பெண்ணுக்குப் பெற்றோர்கள் கிடையாது. ஜாதகம் இல்லை. உறவினர்கள் இல்லை. மிகவும் எளிமையான முறையில்தான் திருமணம் நடத்தப்படும்.

## பெட்டி எண் 43

நல்ல குடும்பத்தில் பிறந்த ஒழுக்கமான, நாணயமான, எந்தவிதக் கெட்ட பழக்க வழக்கமும் இல்லாத 5 அடி 9 அங். உயரமுள்ள பி. காம் படித்த தற்போது ஒரு ஷெட்யூல்ட் பாங்க் ஒன்றில் மானேஜராங்கில் வேலை பார்க்கும் 27 வயதுள்ள இந்து நாடார் இளைஞனுக்கு அதே இனத்தில் நல்ல நிறமுள்ள, வசதியான உயர் குடும்பத்தில் பிறந்த சிறந்த குணமுள்ள பெண் தேவை. வேலை பார்க்கும் ஊரில் தனிக் குடித்தனம். வேறு எந்த விதமான பிரச்னையும், தொந்தரவும் இல்லை.

## பெட்டி எண் 44

வடகலை ஐயங்கார் ஸ்ரீவத்ஸ, கோத்ரம் எஸ்.எஸ். எல்.சி. 21 வயது, குடும்பப் பொறுப்புத் தெரிந்த பெண்ணுக்கு ஏற்ற ஐயங்கார் வடகலை-தென்கலை வரன் 28-30 வயதுக்கு மேற்படாமல் தேவை. ஜாதகத்துடன் எழுதவும்.

## பெட்டி எண் 45

நல்ல குடும்பப் பொறுப்புள்ள வடமாள், ஸ்ரீவத்ச கோத்ரம், உத்திரட்டாதி, வயது 26, மாநிறம், உயரம் 5' 2'' உள்ள பிராமண ஜாதி கன்னிப் பெண்ணுக்கு அதே ஜாதியில் நல்ல வேலையில் உள்ள, ஆரோக்கியமான உடல் அமைப்பு உள்ள, பிரமச்சாரிகளிடமிருந்து ஜாதகம் வரவேற்கப்படுகிறது. பெண் வேலையில் இல்லை. படிப்பு எஸ்.எஸ். எல். சி. திருமணச் செலவு மொத்தம் ரூ. 10000. (எல்லாம் அடக்கம்) வரையில் செலவழிக்க மட்டும் வசதி உள்ளது. தகுதியும், விருப்பமும் உள்ளவர்கள் ஜாதகமும் மற்ற விவரங்களும் அனுப்பி வைக்கவும்.

## பெட்டி எண் 46

தேசியமயமாக்கப்பட்ட தொழிலில் பணி புரியும் ரூ. 1000 மாத வருமானம் பெறும் ஸ்ரீவத்ஸ கோத்ரம், ஹஸ்த நட்சத்திரம் வயது 30 வடகலை அய்யங்கார் பெண்ணுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த படித்த தகுந்த வரன் தேவை.

## பெட்டி எண் 47

கௌண்டன்ய வடகலை M. Tech. 27, (5'–8'') சதய நட்சத்திரம் நல்ல சிவப்பு பையனுக்கு வசதியான, சிறுகுடும்பத்தி லிருந்து நல்ல படிப்புள்ள (M. Sc) (M. B. B. S.) (Ph. D.,)] 24 வயதுக்கு மேற்படாத சமையலும் தெரிந்த அழகியபெண் தேவை. பெண் ஜாதகமும், குடும்பவிவரங்களும் வர வேற்கிறோம். அரபிக் கடல்பக்கத்தில் வேலை. வளமான சம்பளம். குடும்பத் தொந்தரவு ஒன்றும் கிடையாது. பையன் மறுபடியும் 8–9 மாத வாக்கில் இந்தியா வர இயலும்.

**பெட்டி எண் 48**

மாதம் 1000 ரூபாய் சம்பாதித்துக்கொண் டிருப்பவருக்கு பேரி செட்டி வம்சத்தில் இளம் விதவை தேவை. குழந்தை இல்லாமல் இருந் தால் நல்லது.

**பெட்டி எண் 49**

பி.ஏ. வரை படித்த அழகும், பண்பும் மிக்க 23 வயது வேளாளர் பெண்ணுக்கு வரனும், பி.டெக் படித்து மத்திய அரசு நிறுவனத்தில் 2500 பெறும் 33 வயது அதி காரிக்கு அழகும் படிப்பும் உள்ள பெண்ணும் தேவை. தகுதி முக்கியம்.

**பெட்டி எண் 50**

சோழிய வேளாள–வகுப்பைச் சேர்ந்த (எம்.ஏ.) பி.எட். முடித்துத் தனியார் பள்ளி யில் ஆசிரியராக இருக்கும் அழகான, உயர மான, சிவப்பு நிறமுள்ள 27 வயதுடைய மணமகனுக்கு அதே இனத்தைச் சேர்ந்த பி.எட். முடித்து ஆசிரியராக இருக்கும் அழ கான உயரமான, மணப் பெண் தேவை. புகைப்படத்துடன் விண்ணப்பிக்கவும்.

**பெட்டி எண் 51**

பராசர கோத்ரம் கர்ணகம்புலு தெலுங்கு வகுப்பைச் சேர்ந்த 24 வயது சதய நட்சத் திரம் எஸ். எஸ். எல். ஸி. பெண்ணுக்கு உத்தியோகத்தில் உள்ள மணமகன் தேவை. 32 வயதுக்குள் இருக்க வேண்டும். ஜாதக மும் தேவை.

**பெட்டி எண் 52**

சென்னையில் சொந்த இடத்தில் வீடும், ஆட்டோமோபைல் நிறுவனம் வைத்து நடத் தும் மாதம் 5000 ரூபாய்க்கு மேல் வரு மானமுள்ள 26 வயது முதலியார் வரனுக்கு இதே இனத்தில் 21 வயதுக்குள் குணமும் அழகும் படித்த வசதியுள்ள மணமகள் தேவை.

**பெட்டி எண் 53**

## திருமண மலர்

திருமணம் செய்து கொள்ள விரும்பும் ஆண் களும் பெண்களும் **மங்கையர் மலரில்** விளம் பரம் செய்யலாம். கட்டணம் ரூ. 10/- மட்டுமே. இது மங்கையர் மலர் என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்பப்பட வேண்டும். விளம்பரத்திற்குப் பதில் அனுப்புபவர் பெட்டி எண்ணை மறக்காமல் குறிப்பிட வேண்டும்.

முகவரி :

'திருமண மலர்'ப் பகுதி
மங்கையர் மலர், கிண்டி, சென்னை-32

ஹோமியோபதி சிகிச்சை :

# பெண்களுக்கு இது ஒரு சாபக்கேடா?

எம். வி. எல். நரசிம்மன்

"இயற்கையே பெண்களுக்குத் தண்டனையாக வழங்கியுள்ள சாபக்கேடுதான் மாதவிலக்கு. ஒவ்வொரு மாதமும் இந்த மூன்று நாட்களும் சித்திரவதைதான்" என்று எவ்வளவோ பெண்கள் சொல்வதைக் கேட்டிருக்கிறோம். மாதவிலக்கு அல்லது மாத விடாய் எனப்படுவது பெண்களுக்கு சாபக்கேடுஅல்ல. அது ஒரு வரப்பிரசாதம்.

பருவம் அடைந்த பெண்கள் அனைவரும் உடல் ஆரோக்கியமுடன் இருக்க வேண்டுமானல், இந்த மாதவிடாய் இருக்க வேண்டியது அவசியம். கருத்தரிப்பதற்கான உயிர் அணுக்கள் பெண்ணின் உடலில் உற்பத்தியாகி,அந்த உயிரணுக்கள் கருத்தரிப்புக்கு உள்ளாகாவிட்டால், பெண்ணின் உடலிலிருந்து இந்த 'மாதவிடாய்' என்ற முறையின் மூலம் கழிவுப் பொருளாக வெளிப்படுகிறது. இதன் மூலம் பெண்ணின் உடல் உறுப்புக்களின் செயல்முறை 'ஓவர்ஹால்' செய்யப்பட்டு, பரிசுத்தமடைந்து புத்துணர்ச்சி பெறுகிறது என்று சொல்லலாம்.

இதனுல்தான் மாதவிடாய் முடிந்த பெண்களின் முகம் அதிகப் பொலிவோடு விளங்குவதையும் உடல் தெம்போடும், புத்துணர்ச்சியோடும் இருப்பதையும் உணரலாம். ஆகவேதான் இதை இயற்கை பெண்களுக்கு அளித்துள்ள வரப்பிரசாதம் என்று குறிப்பிட்டேன்.

ஆனல் இயற்கையாக ஏற்பட வேண்டிய இந்த 'கழிவு நீக்கப் பணி' செம்மையாக நடைபெறுமல் கோளாறு அடையும்போதுதான் அதை மாதாந்தரச் சித்திரவதை என்று பெண்கள் கருதத் தொடங்குகிருர்கள். இதனுல் ஏற்படும் கோளாறுகளையும் வெளியில் சொல்ல முடியாமல், வெட்கத்தினுலும் கூச்சத்தினுலும் எவ்வளவோ பெண்கள் தொடர்ந்து 'சித்திரவதை' அனுபவித்து வருகிருர்கள். இந்தியா போன்ற வெப்ப நாட்டில் 13 அல்லது 14 வயதிலேயே பெண்கள் 'புஷ்பவதி'யாகி, முழுப் பெண்மையை அடைந்து விடுகிருர்கள். இந்த மாதவிடாய் பற்றிய உண்மைகள் என்ன என்பது இன்னும் நமது நாட்டில் பாடத் திட்டத்தில் சேர்க்கப்படாததால் 'இந்த' மூன்று நாட்கள் வெறுத்து ஒதுக்கப்பட்ட நாட்கள் என்று கருதப்படுகிறது.

உண்மையில் இந்த மூன்று நாட்களில்தான் பெண்கள் மிகவும் சுத்தமாக உடம்பை வைத்துக்கொள்வதோடு, சுத்தமானஆடைகளையும் அணிய வேண்டும். சாதாரணமாக ஆரோக்கியமான பெண்களுக்கு இந்த 'மாதவிடாய்' 28 நாட்களுக்கு ஒரு முறை ஏற்படவேண்டும். 'கழிவு நீக்கம்' மூன்று அல்லது நான்கு நாட்களுக்கு மேல் போகக் கூடாது.

மாதவிடாய்க்கு முன்போ, அது ஏற்படும் காலத்திலோ வலி ஏற்பட்டால் அதற்கு 'டிஸ்மெனேரியா' என்று கூறுவார்கள். ஏற்படவேண்டிய காலத்தில் தற்காலிகமாகவோ நிரந்தரமாகவோ மாதவிடாய் ஏற்படாவிட்டால், அதை 'அமனேரியா' என்பார்கள். அளவுக்கு அதிகமான ரத்தப் போக்கு ஏற்பட்டாலோ, நான்கு நாட்களுக்கு அதிகமாக ரத்தப் போக்கு நீடித்தாலோ இதற்கு "மெனேர்ஜியா" என்று பெயர்.

இதை 'வெள்ளை படுதல்' என்றும் 'லூகோரியா' என்றும் கூறுவர்.

மேலே சொன்ன சிலவகைக் கோளாறுகளும் இன்னும் பலவித மாதவிடாய் கோளாறுகளும் பெண்களுக்கு ஏற்பட்டால், அதனுல் உடலில் வேறு பல தொல்லைகளும் தலைவலி, முதுகு வலி, களைப்பு, தூக்கமின்மை போன்றவைகளும் ஏற்படலாம்.

இந்தக் கோளாறுகளைச் சரிசெய்ய ஹோமியோபதியில் சிறந்த மருந்துகள் இருக்கின்றன.



என்னிடம் சிகிச்சைக்கு வரும் பெண் நோயாளிகளிடம் நான் அடிக்கடி கூறுவது இதுதான்—

''பெண்களைப் பொறுத்தவரை எந்த வித உடல் கோளாறாக இருந்தாலும், அதற்கும் மாதவிடாய் செயல்படும் முறைக்கும் சம்பந்தம் இருக்கும். ஆகவே அதை விளக்கமாக மறைக்காமல் சொல்லிவிடுங்கள்'' என்று.

வலியுடன் கூடிய 'மாதவிடாய்' என்பது பெரும்பாலும் நாகரிகம் மிகுந்த பகுதிகளில் வசிக்கும் பெண்களிடம் அதிகம் இருக்கும்.

'மாதவிடாய்' சரிவர ஏற்படாவிட்டால் 'வலிப்பு' ஏற்படுவதுகூட உண்டு. 'பல்சடில்லா' என்ற மருந்து ஹோமியோபதியில் பெண்களுக்காகவே உள்ள தனிப்பட்ட சிறந்த மருந்து. மாதவிடாய் சம்பந்தமாகப் பெண்களுக்கு ஏற்படும் பெரும்பாலான கோளாறுகளை இந்த 'பல்சடில்லா' தீர்த்துவிடும். 13 ஆண்டுகள் இடைவிடாது வயிற்று வலியினால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த ஓர் ஆசிரியைக்கு அவரது அறிகுறிகளுக்கு ஏற்ப இந்த 'பல்சடில்லா' மருந்தை கொடுத்தேன். இரண்டரை மாதங்களில் வயிற்று வலி அடியோடு நீங்கிவிட்டது. இரண்டு ஆண்டுகளுக்கு முன் என்னிடம் சிகிச்சை பெற்ற இந்த ஆசிரியை இன்றுகூட என்னை எங்கே கண்டாலும் நன்றி கூறுகிறார். நான் இப்படிச்சொல்வதால் இது ஒன்றுதான் எல்லாக் கோளாறுகளுக்கும் மருந்து என்று நினைத்துவிட வேண்டாம். அறிகுறிகளுக்கு (Symptoms) ஏற்ப மருந்துகள் மாறுபடும்.





பெண்கள் பருவமடைவது தாமதப்பட்டு, தலைவலி, நெஞ்சு வலி ஏற்பட்டு, நுரையீரல் சம்பந்தப்பட்ட கோளாறுகள் ஏற்பட்டிருந்தால் கால்கேரியா கார்போனிகா என்ற மருந்து, இந்தக் குறையைச் சரி செய்யும். பருவமடைவது தாமதப்பட்டு, மாதவிடாய்க்குப் பதிலாக 'வெள்ளை படுவது' அதிகமாக இருந்தால், 'சீபியா' என்ற மருந்து அளிக்கப்பட வேண்டும்.

நலிவமான உடம்புடன் பலவீனமான மார்பு உள்ள சுவாச நோய்களுக்கு ஆளாகியுள்ள பெண்களுக்கு மாதவிடாய்க்குப் பதிலாக இருமினால் ரத்தம் வருகிறது என்றால், 'பாஸ்பாஸ்' என்ற மருந்து கொடுத்தால் உடனே பலன் கிடைக்கும். மற்றும் அகனைட், பிரையோனியா, பெல்லடோனா, சல்பர், சைனா, காஸ்டிகம், பினாடினு முதலிய வேறு பல மருந்துகளும் உள்ளன.

ஏற்கனவே நான் கூறியுள்ளது போல் எந்த நோயாக இருந்தாலும், அந்தப் பெண்ணின் உடலிலும், உள்ளத்திலும் ஏற்பட்ட எல்லா நோய் அறிகுறிகளையும் கேட்டறிந்து, அவைகளின் மொத்தத்தையும் கணக்கில் எடுத்துக் கொண்டுதான் ஹோமியோபதியில் எந்த மருந்து கொடுப்பது என்று முடிவு செய்ய வேண்டும். மாதவிடாய் சம்பந்தப்பட்ட கோளாறுகளை கூச்சப்படாமல் டாக்டரிடம் சொல்லி, சரி செய்து கொண்டால், பெண்களின் ஆரோக்கியம் பெருமளவு நன்றாகவே இருக்கும்.

## அவல் வெஜிடபிள் பிரியாணி

**தேவையான பொருட்கள்:**

அவல் கால் கிலோ
பீட்ரூட் 1 சாதாரண சைஸ்
கேரட் 4
உருளைக்கிழங்கு 2
தக்காளிப்பழம் 8
பச்சை மிளகாய் 10
பெரிய வெங்காயம் 4
இஞ்சி ஒரு துண்டு
பூண்டு 2 (பெரியது)
டால்டா 2 பெரிய கரண்டி
பட்டை, லவங்கம், மராட்டி மொக்கு, ஏலம் வகைக்கு, 2 அல்லது 3 எடுத்துக்கொள்ளவும்.
சோம்பு - சிறிதளவு அல்லது கால் டீஸ்பூன்
சிறிதளவு மிளகாய்த் தூள்
சிறிது மஞ்சள் தூள்
தேவையான அளவு உப்பு
எலுமிச்சம்பழம் - ஒன்று

**செய்முறை:**

அவலைச் சுத்தம் செய்து ஒன்று இரண்டாக இடித்துக் கொள்ளவும். ஒரு டம்ளர் தண்ணீர் ஊற்றி அவலை அரை மணி நேரம் ஊற வைத்துவிடவும். பீட்ரூட், காரட், வெங்காயம் 2, உருளைக் கிழங்கு, தக்காளி, இஞ்சி, பூண்டு ஆகியவைகளைச் சிறுசிறு துண்டுகளாக நறுக்கி வைத்துக் கொள்ளவும். பச்சை மிளகாயை நடுவில் கீறி வைத்துக்கொள்ளவும். அடுப்பில் வாணலியைப் போட்டு ஒரு பெரியகரண்டிடால்டாவைவிட்டு, அது காய்ந்ததும், பட்டை லவங்கம்,—மராட்டி மொக்கு, ஏலம், சோம்பு ஆகியவைகளைப் போட்டு, பொரிந்ததும் இஞ்சி, பூண்டு துண்டுகளைப் போட்டு நன்றாக வதக்கவும். பின்பு, வெங்காயம், மற்ற காய்கறிகளைப் போட்டுத் தக்காளிப் பழத்தையும் போட்டு மூடி வைக்கவும். ஐந்து நிமிஷம் கழித்து வதங்கிய நிலையில் உள்ள காய்கறிக்கு உப்பு, மஞ்சள் பொடி, மிளகாய்ப் பொடி போட்டு, காய்கறி வேகுவதற்குப் போதுமான அளவு தண்ணீர் ஊற்றிக் குக்கரில் வைத்து வேக வைத்து எடுத்துக் கொள்ளவும். மறுபடியும் அடுப்பில் வாணலியைப் போட்டு, மீதமுள்ள டால்டாவை ஊற்றி, காய்ந்த பின் ஊறவைத்துள்ள அவலை நன்றாக உதிர்த்து விட்டு உப்புமா போல கிளறவும். வாய் அகன்ற பேஸின் அல்லது பாத்திரத்தில் அவலைக் கொட்டி, வேகவைத்துள்ள காய்கறிகளைப் போட்டு நன்றாகக் கலந்து ஐந்து நிமிடம் மூடி வைக்கவும். புளிப்பு தேவையானால் எலுமிச்சம் பழம் பிழிந்து கொள்ளவும். தொட்டுக்கொள்ள தயிர், வெங்காயச் சட்னி செய்து கொள்ளவும். விருந்தினர் வந்தால் உடனே அவல் பிரியாணி தயார் செய்து, விருந்தினர்களை மகிழ்விக்கலாம்.

— திருமதி பத்மா ராமநாதன்

## அவல் அப்பளம்

**தேவையான பொருட்கள்:**

இரண்டு பெரிய டம்ளர் சுத்தம் செய்த அவல் (புதியது)
ஒரு மூடி எலுமிச்சம் பழம்
இரண்டு கரண்டி அரிசி மாவு
ஒரு தேக்கரண்டி பொடித்த உப்பு
புது தேங்காயெண்ணை நான்கு தேக்கரண்டி
2 பச்சை மிளகாய், துளி பெருங்காய ஜலம்

**செய்முறை:**

கல், உமி முதலியன நீக்கிய 2 டம்ளர் அவலை வாணலியில் போட்டுச் சிறு தீயில் வறுத்து நைஸாக மிக்ஸி அல்லது உரலில் பொடி செய்து சலித்துக் கொள்ளவும். ஒரு கனமான ஈயம் பூசிய பித்தளை அடுக்கு அல்லது எவர்சில்வர் அடுக்கில் அரை டம்ளர் ஜலத்தைக் கொதிக்க விட்டு, இறக்கி அதில் அவல் பொடியைக் கொட்டி, உப்பு, அரைத்தெடுத்த இரண்டு பச்சை மிளகாய் கலந்து, பெருங்காய ஜலம் விட்டு ஒரு தட்டால் மூடிவைக்கவும். பத்து நிமிஷம் கழித்து அம்மி, உலக்கை இரண்டையும் நன்கு ஈரத் துணியால் துடைத்து, அம்மி மேல் அவல் விழுதை வைத்து, தேங்காய் எண்ணெயை உலக்கை மேல் தடவி, நைஸாகப் புரட்டிப் புரட்டி இடிக்கவும். 10 நிமிஷம் இடிபட்டால் மாவு ரப்பர் பந்து போல் ஆகும். எவ்வளவு இடிக்கிறோமோ அப்பளமும் அவ்வளவு நன்றாக வரும். ஒரு கரண்டியில் எலுமிச்சம் பழ சாறைப் பிழிந்து கொட்டை எடுத்து மாவில் இடிக்கும்போதே கலந்து விடவும்.

இந்த இடித்த மாவை சின்ன எலுமிச்சம் பழ அளவு அல்லது நெல்லிக்காய் அளவுக்கு உருண்டைகளாகப் பண்ணி ஒரு பாத்திரத்தில் மூடி வைத்துக் கொண்டு, ஒரு தட்டில் அரிசி மாவை எடுத்துக் கொண்டு, அதில் தோய்த்துச் சிறிய அப்பளங்கள் இட்டுக் கொள்ளவும். அவல் அப்பளம் ஜாக்ரதையாக இடவேண்டும். இல்லையேல், பிரிஞ்சு போகும். இட்ட அப்பளங்களை வெய்யிலில் காயப்போட்டு, திருப்பி விடவும். ஒருவர் இட ஒருவர் வெய்யிலில் உலர்த்தினால் சுலபம். நன்றாகக் காய்ந்து அப்பளமே தணலில் சுட்டாலும், எண்ணெயில் பொரித்தாலும் — யாவரும் விரும்பிச் சாப்பிடுவார்கள்.

2 டம்ளர் அவலில் 12 அப்பளம் முதல் 16 வரை செய்ய முடியும்.

— ஸ்ரீமதி அன்னபூரணி

**சென்ற மாத ஆறுதல் பரிசு சமையல் குறிப்புகள்**

# பூங்கா கேக்!



விசாலமான சிறுவர் பூங்கா. அதில் பெரிய ராட்சத கேளிக்கை ராட்டினம் — நீச்சல் குளம். கொம்மாளமடிக்கும் சிறுவர் உட்பட — ''ஸீஸா'' ஏற்றம், சறுக்குப் பலகை, புரண்டு விளையாட பச்சைப் புல் வெளி — யாவும் ஒரே மணி நேரத்தில் அமைக்கப்பட்டன. ஆமாம். ஆச்சரியமாக இருக்கிறதா? ஆனால் உண்மையாகும். சர்க்கரை பாகும், தூளும், மாவும் கொண்டு 'ஸ்பென்ஸர்' கம்பெனி பேக்கரி கலைஞரின் விரல்கள் சமைத்த விந்தை அப் பூங்கா! எந்தவிதமான அலங்கரிப்பும், அழகு படுத்தலும், — சென்ட்ரல் ஸ்டேஷன் போன்று, ஸ்பென்ஸர் கட்டிடம் போன்று தாஜ் மகால் போன்று; விலங்குகள் மற்றும் பட்சிகள் போன்று எந்த விதமான உருவத்திலும் கண்ணுக்கினிய கேக்குகள் கவைக்கின்றவாறு அமைக்க முடியும் என நிரூபித்தார் அக்கலைஞர். சென்ற மாதம் 28ம் தேதி யன்று சென்னை அண்ணாநகர் ஸ்ளப்பில், செய்து காட்டிய அக்கூட்டத்தில் வந்திருந்த மாதர் அனைவரும் — ஆம்., நூறால் நிரம்பிய மாதர் கூட்டம் — முகத்தில் விரல் வைத்து வியந்தனர். அப்பூங்காவைச் சுற்றிச் சுற்றி வந்து. (படம் இத்துடன்)

ஜீன்ஸ் உடுத்திய, பள்ளிக் களை முகத்தில் தவழும் மாணவி முதல், மடிசார் தரித்த மாமிகள்வரை — ஆங்கிலம், தமிழ் தவிர, தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஏன் குஜராத்தி பேசிய அக்கூட்டம் — ஒவ்வொருவரும் கையில் நோட்டும் பேனாவும் கொண்டு குறிப்பெடுத்துக் கொண்டும், கேள்விகள் கேட்டு விவரங்கள் தெரியக் காட்டிய ஆர்வமும் இந்தக் கலைக்கு இன்று நம் பெண்மணிகளிடம் உள்ள மதிப்பையும் ஆர்வத்தையும் எடுத்துக் காட்டின. எனவே, 'ஸ்பென்ஸர்' நிர்வாகி, தங்கள் நிறுவனத்தில் கேக், பிஸ்கெட்,ரொட்டி தயாரிப்பதை யொட்டிய ஐயங்களுக்கும், கேள்விகளுக்கும் விளக்கம் தர ஒரு தனிப் பிரிவையே ஏற்படுத்துவதாக அறிவித்தார். மேலும் இம்மாதிரி ஆர்வத்துடன் கோரினால் இதே போல நிருபண செய்முறைக் காட்சிகளை மற்ற சங்கங்களுக்காக, ஸ்ளப்புகளுக்காக நடத்திக் காட்ட என்றும் தயார்' என்று ஸ்பென்ஸர் பிரதிநிதி கூறினார். இவ்வாய்ப்பை நன்கு பயன்படுத்திக் கொள்வோமாக.

அன்று, ஸ்பென்ஸர் கம்பெனியார் புதிதாக Prefiozen Dough என்னும் ரெடிமேட் கலவை மாவு தயாரிப்பை அறிமுகப்படுத்தினார்கள். இந்தக் ''இமர்'' கலவை மாவு உபயோகப்படுத்தி அங்கேயே பத்தே நிமிஷங்களில் விதவிதமான சோமாசி, சீடை முதலிய தின்பண்ட வகைகளை தயாரித்துக் காட்டினார்கள். இந்த 'ரெடிமேட்' கலவை மாவு இல்லத்தரசிகளுக்கு ஒருவரப்பிரசாதம். விரல்கள் வலியெடுக்க மாவைப் பிசைவதும், மணிக் கணக்கில் ஊறவைக்கும் தொல்லைகளும் இனி இல்லை. எதிர்பாராத விருந்தினர் வந்து நிற்கும்போது இந்தத் 'இமர்' கலவை மாவு கை கொடுக்கும் — 10 நிமிஷத்தில், உள்ளே பூர்ணம், மசாலா வைத்து எண்ணெயில் பொரித்து எடுக்கக் கூடிய மற்றும் Backe செய்து சுட்டுத் தயாரிக்கக் கூடிய விதமான. தின்பண்டங்களை இந்த 'ஸ்பென்ஸர்ஸ்' Piafrozen Dodgh கலவை மாவு கொண்டு தயாரிக்க முடிந்தது என்பது வந்திருந்த மாதர் அனைவரும் பாராட்டினர்.

அன்று 'ஸ்பென்ஸர்' பேக்கரி பிரிவினர் அண்மையில் அறிமுகப்படுத்தியுள்ள Health Loaf என்ற சத்துள்ள பாலை மிகுதியாகச் சேர்த்து. அதிகப் புரதச் சத்துக் கொண்ட ரொட்டி Bakeமற்றும் ரஸ்க்,கேக்குகள் இவைகளையும் காட்சிக்காக வைத்திருந்தார்கள். ருசித்துப் பார்த்து. இவைகளையும் ஏற்பாடு செய்திருந்த நிருபணத்தையும் வந்திருந்த அனைவரும் பாராட்டினர்.

பூங்கா கேக் - கண்ணுக்கும் நாவிற்கும் சுவை மிக்கது - சர்க்கரையும், மாவும் 'ஸ்பென்ஸர்ஸ்' கேக் கலைஞரின் கைவண்ணச் சிறப்பைக்காட்டுகிறது.

"முடியாதுன்னு முடியாதுதான்! நீ எத்தனை தடவ கேட்டாலும் இதே பதில்தான். இந்த விஷயத்திலெல்லாம் நீ தலையிட வேண்டாம். எனக்கும் வயசாச்சு. எல்லாந் தெரியும் எனக்கு. எப்ப எது செய்யணும், செய்யக் கூடாதுங்கறது. அநாவசியமா என் பேச்சுக்கு வராதே!"

நெருப்பாய் வார்த்தைகளைக் கொட்டிவிட்டு வேகமாய் வாசலைக் கடந்து 'விடுவிடு' வென்று வெளியேறிவிட்டான் பிரதாப். மௌனமாய் நின்று கொண்டிருந்தாள் கல்யாணி. மகனின் கடு சொற்கள் இப்போதெல்லாம் இப்படித்தான் வருகிறது. 'நீ யார் இதெல்லாம் கேட்க!' இந்த வார்த்தை வெகு சகஜமாகி விட்டது.

இருபத்தைந்து வயதில் உலகத்தின் மீது இப்படியொரு வெறுப்பா? கழுத்தின் கீழ் சிக்குப் பிடித்துப் புரளும் கேசத்தை வெட்டச் சொன்னால் அதற்கொரு சீறல்! சிகரெட் பிடித்துப் பிடித்துக் கறுத்துக் கொண்டு வரும் உதடுகள். கண்களில் சதா ஒரு அலட்சியம்! 'எங்களுடைய உலகை உங்களால் புரிந்து கொள்ள முடியாது' என்று சுடச் சுடக் கொட்டும் வார்த்தைகள். கண்களில் நீர் மல்கியது கல்யாணிக்கு.

"நீ யார் இதையெல்லாம் கேட்க!"

நெஞ்சம் நெருப்பாய்ச் சுட்டது.

● ● ●

"ஏய் கல்லு! என்ன இன்னிக்கும் இருக்கே?"

அலுவலகத்திலிருந்து திரும்பிய சுந்தரேசன் குறும்புடன் சிரித்தான். முகத்தில் தெரிந்த வெட்கத்தை மறைக்கச் சமையலறைக்குள் புகுந்து கொண்டாள் கல்யாணி.

அவர்களுக்குத் திருமணம் ஆகி மூன்று மாதம்தான் ஆகிறது. இரண்டு மாதமாக நெஞ்சில் நெருடும் சந்தேகம். 'இதற்குள்ளா அவசரம்!' என்று தோன்றினாலும், 'அதற்கு நாமென்ன செய்ய முடியும்' என்ற சமாதானம். இன்னும் புது மோகம் அடங்காத உணர்வுகள். பூனைக் குட்டியாய் ஒடுங்கிக் கொள்ளத் துடிக்கும் அவசரம். கணவனையே நம்பிப் பிறந்த இடத்திலிருந்து வெகு தூரம் வந்து தனிக் குடித்தனத்தில் இன்னும் கணவனையே முழுமையாகப் புரிந்துகொள்ளாத நிலை!

இரவில் தனிமையில் அவள் கண்களுக்குள் தன்னைப் பார்த்துக் கொண்டே சுந்தரேசன் அவளை அள்ளினான்.

"கல்யாணி! ரொம்ப அவசரம் போல இருக்கே உன் மகனுக்கு!" அவன் சிரித்தான்.

"உங்களுக்குத்தான் அவசரம். இன்னும் நிச்சயமாய்த் தெரியாதப்பவே மகன் மகன்னு பறக்கறீங்களே!"

மென்மையாக அவள் கூந்தலை வருடிக் கொண்டே யோசித்தான். "என்னதான் நாம சிரிச்சாலும் ஒரு பக்கம் பயமாத்தான்



இருக்கும்மா. பாரேன், விளையாட்டுப் பிள்ளை போல ஏதோ படிக்க வேலை செஞ்சுக் கிட்டிருந்த எனக்கு நீ கிடைச்சே, கூட விளையாடறத்துக்கு ஒருத்தி போல. ஆனா குழந்தையும் ஆயிட்டா எவ்வளவு பெரிய பொறுப்பு வந்துடறது பாரு. எத்தனை எத்தனை கடமைகள்!''

அவனைக் கேலி செய்ய வேண்டும் போலத் தோன்றினாலும், முகத்தின் பாவத்தைப் பார்த்து ஆறுதலாக அவனை வளைத்து அணைத்துக் கொண்டாள் கல்யாணி.

''என்னிக்குமே நாம சின்னவங்களாவே இருந்துட்டா முடியுமான்னு கேக்கத்தானே இந்தப் பொறுப்பு. குழந்தை நமக்கு நடுவிலே வந்தப்புறம் நாம விட்டுக்கொடுக்க வேண்டியது எல்லாமேதான். அதுதானே வாழ்க்கை? நான் இருக்கேனே, ஏன் பயப்படறீங்க!''

• • •

அன்றைக்கு உறக்கம் வரவேயில்லை. பகலெல்லாம் எல்லா வேலைகளையும் செய்து, இரவில் அடித்துப் போட்டது போல உறங்கி விடும் கல்யாணி நெளிந்தாள். வயிற்றில் என்னவோ இனம் தெரியாத சங்கடம். ஒரே சமயத்தில் வாந்திவருவது போலவும் இருந்தது, பசி யெடுப்பது போலவும் இருந்தது. சகிக்க முடியாத தாகம் வேறு. சந்த்ரேசன் அவள் படுக்கையில் நெளிவதைப் பார்த்துத் தவியாய்த் தவித்தான்.

''என்னம்மா செய்யறது, உனக்கு? சொல்லேன்.''

''ஒண்ணுமில்லீங்க. கொஞ்சமா வயித்து வலிதான்...''

''இல்லே. நீ பொய் சொல்றே, நான் பயப்படுவேங்கறதுக்காக. உன் முகத்தைப் பாத்தாத் தெரியறது நீ ரொம்ப வேதனைப் படறது.''

''ஐயோ, உங்க கற்பனையே கற்பனை. கொஞ்சம் தண்ணி கொண்டு வாங்க. அது போதும்.''

---

சமையலில் மோர்க் குழம்பு தயார்செய்யும் போது, மோர் மிகவும் புளிப்பாக இருந்தால் அதை நீக்க, சிறிதளவு கடலை மாவு (கொண்டைக் கடலை மாவு) போட்டு, நன்றாகக் கலக்கி மோர்க் குழம்பு வைத்தால் புளிப்பு இல்லாமல் இருப்பதுடன், மணமாகவும், ருசியாகவும் இருக்கும். —நாருன்னிஸா



அவன் ஹார்லிக்ஸ் கரைத்துக் கொண்டு வந்து கொடுத்தான். மடியில் அவளைப் போட்டுக் கொண்டு மெதுவாக நீவினான். அவனுடைய பரிவிலே உருகியே கண்களில் நீர் மல்கியது கல்யாணிக்கு.

'ஆறு மாசத்துக்கு முன்னாடி இவர் யாரோ நான் யாரோ. இப்போ எப்படி இவ்வளவு அன்பு வந்தது? இவரே இப்படின்னா நாலு மாசமா எனக்குள்ளே வளரும் என்குழந்தை, நான் சுமக்கிற குழந்தை எப்படி அன்பு செலுத்தும் என் மேலே! எவ்வளவு அருமையான சொந்தங்கள்!'

நினைத்து நினைத்து உருகி வழிந்த கண்ணீருடன் அன்று முழுவதும் சிவராத்திரி தான். அன்றைக்கு மட்டும்தானா? எப்படியும் வாரம் ஒரு முறை இப்படி ஆகிவிடும். என்னவென்று சொல்லத் தெரியாத சங்கடம். வேலையிலிருந்து களைத்து வரும் கணவனும் அவளுடன் கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டு இருப்பான்.

• • •

''ஆறாவது மாசமும் வந்தாச்சே கல்யாணி! உங்கம்மாவுக்கு எழுதிப் போடேன் வரச்சொல்லி. நீ போய் இருன்னாலும், நான் சாப்பாட்டுக்குக் கஷ்டப்படுவேன்னு போக மாட்டேங்கறே. இப்படி அவஸ்தைப் படறியேம்மா....''

அவள் சோபாவில் அமர்ந்திருக்க அவன் கீழே உட்கார்ந்து கொண்டிருந்தான். அந்தக் கால் நரம்பு இழுத்துக் கொள்ளும்போது துடியாய்த் துடித்து விடுகிறாள். நடக்க முடியாமல் அவள் படும் பாடு! டாக்டர் எழுதிக் கொடுத்த வைட்டமின் மாத்திரைகளைச் சாப்பிட்டும் பயனில்லை. திடீர் திடீரென்று மரணவஸ்தையாக வந்து விடும் நரம்பிழுப்பு! அப்போதெல்லாம் தாங்க முடியாமல் அழுது விடுகிறாள். கணவனே தாயாக மாறி மூன்று மாதங்களாகிவிட்டன. அவளுடைய வலிகளில்தான் பங்கெடுத்துக் கொள்ள முடியவில்லையே தவிர, அதைப் போக்க அவன் படும் பாடு! அவளோடு சேர்ந்து கண் விழிக்கிறான், பூவாகச் சாந்தப் படுத்தத் துடிக்கிறான். கணவன் மனைவி என்ற நினைப்பே போய்விடும் போலிருக்கிறது.

''என்ன கல்யாணி, கேட்டதுக்குப் பதில் இல்லாம அப்படியொரு யோசனை?''

தேய்த்துத் தேய்த்துச் சிவந்துவிட்ட அவன் கைகளைப் பற்றித் தன் மடியில் வைத்துக் கொண்டாள் கல்யாணி.

''நமக்குக் கல்யாணமாகி ஏழு மாசம்தான் ஆச்சு. ஏற்கனவே எப்பப் பாரு உடம்பு உடம்புன்னு உங்களுக்குப் பிரயோஜனம் இல்லாமப் போயிட்டேன். உங்களுக்குச் சமைக்கிறது பரிமாறதுங்கூடவா இன்னொருத்தர் செய்யணும்?''

''சீ, அசடு மாதிரிப் பேசாதே கல்யாணி எப்பப் பாரு உடம்பு சரியில்லேன்னு

சும்மாவா படுத்துக்கறே? நீ படற அவஸ்தை எனக்கில்ல தெரியும்? எந்த விதத்திலும் பிரயோசனமில்லாமப் போயிட்டேன்னு பேசறியே பைத்தியம்! நீதானே சொன்னே, குழந்தைன்னு வந்துட்டா எவ்வளவோ விட்டுக் கொடுக்கணுமுன்னு.... நிஜமா சொல்றேன், கல்யாணி, எனக்கு நீ நல்லபடியா பெத்துப் பொழைக்கணுமின்னு நினைக்கிற நினைப்புத் தவிர வேற ஒண்ணுமே யில்லே இப்போல்லாம்.''

• • •

நாட்கள் ஏற ஏற அவர்கள் தங்களையே மறந்தார்கள். இளமைத் துடிப்பும் எழுச்சிகளும் கூட மறைந்துவிட்ட, புது மாதிரியான உணர்வுகள். அப்போதே தாயும் தந்தையுமாகிவிட்டது போல இளமையையே தியாகம் செய்துவிட்ட சிறுசுகள். வளைய வளைய வரும் குழந்தைக்கான எதிர்கால கனவுகள். தாங்கள் உணர்வுகளையே தியாகம் செய்கிறோம் என்பதே உணராமல் செய்துவிட்டு அதைப் பற்றி நினைவுகூட இல்லாமல் குதூகலிக்கும் உள்ளங்கள். மொட்டவிழ்ந்த பருவத்தில் இனிமையை முழுமையாக அனுபவிக்காமல் ஆதரவான அன்பிலே திருப்திப்பட்டுப் போகும் இதயங்கள்!

• • •

கல்யாணியின் அம்மா வந்து விட்டாள் அழைத்துப் போவதற்கு. நிறை மாதக் கர்ப்பிணியாய்த் தளர்ந்து நடக்கும் கல்யாணியைப் பார்க்கும்போது மனமெல்லாம் துடிக்கும் சுந்தரேசனுக்கு.

இன்றைக்கெல்லாம் இருபத்திரண்டு கூட நிரம்பாத இந்த இளம் பெண்தான் எத்தனை தைரியமாய் ஒவ்வொரு வேதனையையும் தாங்கிக் கொள்கிறாள். இன்னும் பயங்கரமான ஒன்று கொஞ்ச நாட்களிலே படப் போகிறாள்...

பெண்ணுக்கு மறு பிறவி மாதிரி என்று சொல்கிற அதை நினைத்து நினைத்துக் கலங்கினான் சுந்தரேசன். கல்யாணியின் அம்மா அங்கு தங்கியிருந்த அந்தப் பத்து நாட்களிலும் சரி, ரயிலடியில் கண்களாலேயே பேசிப் பேசி விடை பெற்ற பின்பும் சரி ஒவ்வொரு நிமிடமும் நரக வேதனைதான். அனுபவித்தவளுக்கும் அதிகமாக, அவளைப் பார்த்துக் கொண்டிருப்பவர்களுக்கு வேதனை!

அந்த நாளும் வந்து விட்டது. நாள் நாளாக, மாதம் ஒன்றாக அவஸ்தைப்பட்டு, இன்பக் கனவுகளை மட்டுமே அளித்த உடல் வேதனைகளின் உச்ச கட்டம்! அம்மாவின் தோள்களை ஆதரவாய்ப் பற்றி டாக்ஸி ஏறி மருத்துவ மனைக்குப் பறந்தாள் கல்யாணி. வயிற்றை இழுத்து உடலையே முறுக்கிப் பிழிந்து துவைத்து அடித்து உலர்த்தும் வலி என்னும் அரக்கனைத் தாங்கப் பல்லைக் உதட்டைக் கடித்துக் கடித்து, நொந்துபோய், தாள முடியாத நிலை என்னும்போது வெட்கத்தையும் விட்டுக் கத்தித் தொண்டையும் காய்ந்து போய்...

அவள் கதறினாள். அத்தனையையும் மறந்து... பெண்ணாகப் பிறந்ததற்கு... அன்பையெல்லாம் கொட்டி வளர்த்தவர்களை ஒருதனுக்காகப் பிரிந்ததற்கு... அவனுக்கும் தனக்குமே துன்பமாகி என்றோ வரப்போகும் மதலையின் கனவுகளை மட்டுமே சுமந்ததற்கு..

அவள் கதறலின் எதிரொலியாக அவன் பிறந்தான். தூங்காத இரவுகள், திருமணமான இரவு மட்டுமில்லை கல்யாணிக்கு. உடனே அவனை வயிற்றில் ஏற்றுக் கொண்ட போதுமட்டுமில்லை... ஒன்பது மாதங்கள் அவஸ்தைப்பட்டபோது மட்டுமில்லை. பெற்ற வயிறும் உடலும் தளர்ந்து நொந்து இறங்கும்போதும் பஞ்சப் பொதியாகக் குழந்தை இரவெல்லாம் அழுதபோது அமுதமூட்டும் போது மட்டுமில்லை... அவன் தவழ்ந்து நடந்து, குறும்புகளுக்கெல்லாம் ஈடுகொடுக்கும்போதும்... மேலும் மேலும்.... இளமையையே மறந்துவிடும் இரவுகள்.

இப்போதும்....

• • •

படபடவென்ற மோட்டார்பைக் தெருவையே அதிரடிக்க வாசலில் வந்து நின்றான் பிரதாப் தன் நண்பனுடன். அவர்களுக்குள் காரசாரமான விவாதம்.

''அம்மா இரண்டு காப்பி என் ரூமுக்குக் கொண்டு வந்துவிடு.''

அறைக்குள் புகுந்து கொண்டார்கள். முகத்தில் வந்து விழும் கிராப்பை அலட்சியமாக ஒதுக்கிக் கொண்டே நண்பன் மூர்த்தி பிரதாப்பை ஒப்புக்கொள்ளவில்லை.

''அது எப்படி பிரதர், நீ சொல்றது சரியாகும்? என்னதான் இருந்தாலும் பெத்தவங்களுக்கு நாம் செய்ய வேண்டியது நம்மோட கடமை. அட்லீஸ்ட், அவங்களுக்காகச் சிலவற்றை விட்டுக் கொடுத்தாவது..''

சீறினான் பிரதாப். ''நான்சென்ஸ்! விட்டுக் கொடுக்கிறதா? ஏன், எதுக்காக? அவங்க என்ன விட்டுக் கொடுத்தாங்க நமக்காக? ஏதோ அவங்களோட சுயநல இன்பத்துக்கு ஜனிச்சுட்டோம் நாம். அதுக்காக கடமையை ஒரு வகையில் சொல்லப் போனா — தண்டனையே அனுபவிக்கட்டுமே. யூஸ்லெஸான இந்தக் கடமைக்குப் போய் பெரிசா தியாகமெல்லாம் கலரப் பூசிக்கிட்டு....''

காப்பி டிரேயுடன் உள்ளே நுழைந்த கல்யாணி தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

எதை விட்டுக் கொடுத்தார்கள் அவர்கள்?

---

**யோசனை**

சப்பாத்திக்கு மாவு பிசையும்போது, அதில் நன்றாகப் பழுத்த ஒரு வாழைப் பழத்தையும் சேர்த்து பிசைந்து போடவும். மிக ருசியுடன் இருக்கும்.

வழக்கறிஞர் டி. ஆர். ரமேஷ்

# இதற்கு என்ன செய்வது?

'........' விருத்தாசலம்

**கேள்வி :**

என் வாழ்க்கையே பெரும் கேள்விக் குறியாகிவிட்டது. பத்து வருடங்களுக்கு முன்னால் நான் கல்லூரி மாணவியாக இருந்த போது ஒருவரை மனமாரக் காதலித்தேன். இருவரும் திருமணம் செய்து கொள்வோம் என்ற உறுதியிலும், கல்லூரியின் கடைசி நாள் பிரிவுத் துன்பத்தாலும் தவறிவிட்டோம். என் விதி, அடுத்த மாதம் ஸ்கூட்டர் விபத்தில் அவர் போய்விட்டார்.

பெற்றோர் பாசம் கொடுத்த மிரட்டலில் திருமணமும் செய்து கொண்டேன். மூத்த மகன் என் கணவருக்குப் பிறந்தவனல்ல. இந்தப் பத்து வயதில் அப்படியே என் காதலரை உரித்து வைத்திருக்கிறான். தன் ஒரே மகன்தான் இறந்துவிட்டார், தங்களின் பேரனாவது தங்களிடம் இருக்கட்டுமே என்று அவர்கள் தத்துக் கொடுத்துவிடும்படி வற்புறுத்துகிறார்கள். என் பிறந்த வீட்டுக்கும் காதலரின் பெற்றோருக்கும் உண்மை தெரியும். என் கணவருக்குத் தெரியாது.

என்னால் என் மகனைப் பிரிய முடியவில்லை. அவர்களோ சட்டப்படி நாங்கள் நடவடிக்கை எடுப்போம் என்கிறார்கள். தயவு செய்து எனக்கு ஒரு மார்க்கம் காட்டுவீர்களா?

**பதில் :**

இதில் நீங்கள் பயப்பட வேண்டிய அவசியமே இல்லை. குழந்தை யாருக்குப் பிறந்திருந்தாலும், அதன் முதல் கார்டியன் தாய் தான். பிறகுதான் மற்றவர்கள். குழந்தையின் தந்தையும் இறந்தாகி விட்டது. அதுவும் தவிர குழந்தையும் முறைப்படி பிறந்தது அல்ல. எனவே அவர்களுக்குத் தங்கள் பேரனைக் கேட்கச் சட்டப்படி எந்த உரிமையும் இடையாது.

ஆனால் வயதான அந்தப் பெற்றோர்களின் மேல் அனுதாபம் கொண்டு நீங்கள் தத்துக் கொடுக்கலாம். ஆனால் உங்களுடைய கணவருக்குப் பதில் சொல்லவேண்டியதாக வரும். எனவே குடும்பப் பிரச்னையான இந்தச் சிக்கலான முடிச்சை நிதானமாக அவிழ்க்கப் பாருங்கள்.

மற்றபடி சட்டத்தால் உங்களுக்கு ஆபத்து ஏற்படாது.

நித்யா பாலன் காரைக்குடி

**கேள்வி :**

என்னுடைய முதல் திருமணம் பத்து வருடங்களுக்கு முன் நடந்தது. திருமணம் முடிந்து இரண்டு மாதங்கள் கழித்து ராணுவத்திற்குச் சென்ற அவர் திரும்பவேயில்லை. அவர் இறந்துவிட்டார் என்றுதான் எங்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. நான் என் பெற்றோருக்கு ஒரே மகள். வாழ்க்கைப் பாதுகாப்பு வேண்டி இரண்டு வருடங்களுக்கு முன்புதான் மறுமணம் செய்து கொண்டேன்.

ஆனால் இப்போது என் கணவர் நாடு திரும்பி யிருக்கிறார். யுத்த களத்தில் காணமல் போன அவர் பல துன்பங்களுக்கு ஆளாகி வந்துள்ளாராம். என் உறவினர்கள் முதல் கணவர் உயிருடன் இருக்கும்போது மறுமணம் செல்லாது என்கிறார்கள். இரண்டு வருடங்களாகத்தான் என் வாழ்வில் அமைதி நிலவியது. மீண்டும் என்னைத் துன்பம் சூழ்ந்து கொண்டு விட்டது. இந்த நிலையில் நான் என்ன செய்யட்டும்?

**பதில் :**

பொதுவாகக் கணவனோ மனைவியோ விவாகரத்துப் பெறுவதற்குரிய பல காரணங்களில் ஒன்று, ஏழாண்டுகள் அவரைப் பற்றித் தகவல் தெரியாமல் போயிருக்கலாம். அப்படியிருந்தால் அவரிடமிருந்து விவாகரத்துப் பெறலாம் என்பதுதான். உங்கள் கணவரைப் பற்றி எட்டாண்டுகள் எந்தச் செய்தியும் கிடைக்கவில்லை.

தவிரவும் ராணுவத்தில் காணமல் போனவர்கள் இறந்தவர்களாகவே கருதப்படுவார்கள். எனவே உங்கள் முதல் திருமணத்தை நீங்கள் ரத்து செய்து கொள்ள



லாம். உங்கள் ஊர் நீதி மன்றத்தில் ஒரு வழக்கினைப் பதிவு செய்து முறையாக விவாகரத்து கேளுங்கள்.

உங்கள் கடிதத்திலிருந்து நீங்கள் இரண்டாவது கணவரையே நேசிக்கிறீர்கள் என்பது புரிகிறது. உங்களுடைய அமைதியான வாழ்வுக்கு எந்தவிதக் குந்தகமும் இல்லாமல் நீங்கள் வாழலாம்.

கமலா — மன்னார்குடி

## கேள்வி :

திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படும் என்பார்கள். என் திருமணம் நரகத்தில் தான் நடந்தது. திருமணமே ஒரே தகராறுடன்தான் நடந்தது. அன்று இரவும் சண்டைகளினூடே எங்கள் தாம்பத்தியமும் ஆரம்பமானது. அவராவது ஆறுதலாக இருப்பார் என்று நினைத்தேன். ஆனால் அவரும் ஓசியில் வரும் பணத்தில் சுகம் அனுபவிக்கலாம் என்ற கருத்துடையவர்தான். இருந்தும் மனைவியாகி விட்டோமே என்று மனத்தைத் தேற்றிக் கொண்டு அவருக்கு உடன்பட்டேன்.

ஆனால் மறுநாள் அவர்கள் ஊருக்குப் புறப்படும் சமயம் சண்டை உச்சம் பெற்றது. சாம்பார் சரியில்லை, சங்கிலியின் கனம் ஐந்து பவுன் இருக்காது என்று ஒவ்வொன்றிலும் பேசிக் கொண்டே போன கணவனைப் பார்க்கவே வெறுப்பாக இருந்தது. நான் அவருடன் போக மறுத்து விட்டேன்.

எனக்கு இன்னும் அவர்களின் மேல் கோபம் தணியவில்லை. என்னைச் செல்வமாக வளர்த்து 60,000 ரூபாய் செலவு செய்து திருமணம் செய்து வைத்த அந்தத் தாய் தந்தையரை மனம் குமுறவைத்த அவர்களைப் பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்று இருக்கிறேன். என் கணவனின் மேல் வழக்குத் தொடுத்து ஜீவனாம்சம் வாங்க வேண்டும். இது முடியுமா?

## பதில் :

உங்களுடைய மனக் குமுறல் எனக்குப் புரிகிறது. திருமணத்தில் சப்தபதி முடிந்தாலே திருமணம் நிறைவு அடைந்து விடுகிறது. அப்பொழுதே கணவனும் மனைவியும் பிரிந்து விட்டாலும் கணவனிடம் மனைவி ஜீவனாம்சம் கேட்க உரிமை உண்டு. அதே போல, அவர்கள் கணவன் மனைவியாக (அது ஒரு நாளாகவே இருந்தாலும்) வாழ்ந்து விட்டாலும், மனைவி கணவனிடம் சகல உரிமைகளையும் பெற்றவளாகிறாள். எனவே, கணவன் மனைவியிடம் உரிமைகளைக் கேட்கவோ, மனைவி கணவனிடம் உரிமைகளைக் கேட்கவோ முடியும்.

உங்களுடைய ஜீவனாம்ச வழக்கு வெற்றியடையும். எனினும் இது போன்ற படித்திருந்தும் பண்புகளை மறந்துவிடும் இளைஞர்கள் வாழ்க்கையில் திருந்துவதே நல்லது.

அம்புஜம்மாள் — சென்னை

## கேள்வி :

எங்கள் வீட்டினருகே உள்ள தேவாலயத்தில் காலையில் நான்கு மணி ஆனவுடன் பாட்டு வைத்து விடுகிறார்கள். லவுட் ஸ்பீக்கர் அலறும் அலறலில் குழந்தைகள் முதல் எல்லோரும் எழுந்துவிட வேண்டியதாக உள்ளது. மீண்டும் மீண்டும் போட்டதையே போட்டு மிகவும் வெறுப்பூட்டுகிறார்கள். இதுபோல மக்கள் வசிக்கும் இடத்தில் அதிகாலையில் அனைவரையும் தொந்தரவு செய்வது சட்டப்படி குற்றம்தானே?

## பதில் :

உங்களுக்கு எவ்வளவு துன்பமாக இருக்கும் என்பது புரிகிறது. ஆனால் இந்த விஷயத்தில் நீங்கள் தோல்வியே அடைவீர்கள்.

ஏனெனில் இந்தியா மதச் சார்பற்ற நாடாக இருப்பதால் எல்லாத் தெய்வங்களையும் வழிபட உரிமை கொடுத்திருக்கிறது. இது போன்ற பாடல்களை வைக்கவும் தனி லைசென்ஸ் இருக்கிறது. அந்த அனுமதி வாங்கி வைத்திருப்பவர்களை நீங்கள் ஒன்றும் செய்ய முடியாது.

அவர்களை உங்கள் ஏரியாவில் இருக்கும் அனைவரும் சேர்ந்து கேட்டுக் கொள்ளலாம். அவ்வளவே உங்களுடைய எல்லை.

---

## பிரயாணமா?

**கர்ப்பிணிகள் மூன்றும் மாதமும் ஒன்பதாம் மாதமும் பிரயாணத்தைத் தவிர்க்க வேண்டும். மீறி மூன்றும் மாதம் பயணம் செய்தால் கருச்சிதைவும், ஒன்பதாம் மாதம் பயணம் செய்தால் வெட்டை நோயும் ஏற்பட ஏதுவாகும்.**

— லலிதா காமேஸ்வரன் கூறக் கேட்டவர் —பாப்பாலக்ஷ்மண்



# ராசிபலன் ஜூலை 81

## மேஷம்



புதிய முயற்சிகளும் வேலைகளும் மேலும் மேலும் வந்து குவிந்தாலும், பழைய நண்பர்களை விட்டு விடாதீர்கள். இம்மாதத்தின் இரண்டாவது வாரத்தில் நீங்கள் நினைத்த பயணத்தை மேற்கொள்ளலாம். வெற்றி பெறும் வாய்ப்பு இருக்கிறது. இம்மாதம் 'பிஸி'யான மாதமாக இருப்பதால் பொழுது போக்கு அம்சங்கள் அதிகம் இருக்காது. பண வரவு திருப்திகரமாக இருக்கும்.

## ரிஷபம்



நீங்களே முன்னின்று முடிவுகளை எடுக்க வேண்டிய காலம் இது. இல்லையென்றால் உங்கள் எண்ணங்களையாவது வெளிப்படுத்தி விடுங்கள். இதுவரை இருந்த தயக்கங்களும் கால தாமதமும் நீங்கள் இப்போது எடுக்கப் போகும் முடிவின் மூலமாகத்தான் தீரும். உங்களுடைய பிரகாசமான எதிர்காலத்திற்கு இதுவே தருணமாக அமையும்.

## மிதுனம்



சிறுசிறு ஏமாற்றங்களும் கால தாமதமுமாக முதல் சில நாட்கள் இருந்தாலும் விரைவில் நிலைமை மாறிவிட வாய்ப்புக்கள் இருக்கிறது. எனவே முதலிலேயே மனம் சோர்வடைய வேண்டியதில்லை. பொழுது போக்கு அம்சங்கள் குறைவாகவும், செலவினங்கள் அதிகமாகவும்இம்மாதம் இருக்கும். குழந்தைகளினால் அலைச்சல் உண்டாகும்.

## கடகம்



நீங்கள் திட்டமிட்ட வேலைகள் அல்லாமல் நினைக்காத பணிகளே இம்மாதம் அதிகமாக வந்துகொண்டு இருக்கும். வெளியூர்ப் பயணங்கள் ஏற்படலாம். தீவிரமான முயற்சிகளுக்குப் பிறகே காரியங்கள் நடைபெறும். என்றாலும் வெற்றி வாய்ப்புக்கள் உங்களுக்கே அதிகமாக இருக்கிறது. மாதத்தின் முதல் பகுதியில் உங்களுடைய செலவினங்கள் இருந்தாலும், பிற்பகுதியில் நல்ல வரவு உண்டு. பொருளாதார நிலை திருப்திகரமாகவே இருக்கும்.

## சிம்மம்



எழுத்தாளர்களுக்கும், சொந்தமாகத் தொழில் புரிபவர்களுக்கும் இந்த மாதம் நல்ல பலனைத் தருவதாக இருக்கும். எதிர் பாராத விதமாக நல்ல செய்திகள் வர வாய்ப்புக்கள் உண்டு. பண வரவும் உண்டாகும். புகழ்ப் படிகளில் ஏறுவதற்குச் சந்தர்ப்பங்கள் அதிகமாகக் கிடைக்கும்.

## கன்னி



எதையுமே அதிகமாக எதிர்பார்க்கும் உங்களின் குணத்தினால் சிறிதே ஏமாற்றங்கள் விளையலாம். நல்ல பலன்களே கிடைத்து வரும். உங்களுடைய எண்ணப் போக்கை மாற்றிக் கொண்டீர்களானால் மேலும் வெற்றி வாய்ப்புக்கள் அதிகரிக்கும். நிதானமான போக்கும், தீர சிந்திக்கும் குணமும் புகழைத் தேடித்தரும். நல்ல பலன்கள் அரும்பத் தொடங்கியுள்ள மாதம் இது.



இம்மாதத்தின் முதல் பதினைந்து நாட்களில் உங்களுடைய செயல்களில் அதிகக் கட்டுப்பாடு இருக்கும். நடக்க வேண்டிய காரியங்களில் தேக்கம் ஏற்படலாம். உங்களுடைய எதிர் இனத்தவர்களுடன் மிகவும் விழிப்புடனேயே பேசுங்கள். எல்லோருக்கும் நல்லதனமாகவே பேசி அவர்களுடைய உதவிகளை யெல்லாம் பெற முயற்சி செய்யுங்கள். முதலில் சிறிதேரமாற்றங்கள் ஏற்பட்டாலும் விரைவில் சூழ்நிலை மாறிவிடும். வரவுக்கேற்ற செலவே ஏற்படும்.

**விருச்சிகம்**



உடல்நிலை அல்லது மனநிலை பாதிக்கப் படலாம். எனவே ஜாக்கிரதையாக இருங்கள். உங்களைச் சுற்றி இருப்பவர்களை விமரிசனம் செய்யவோ, வாக்குவாதத்தில் ஈடுபடவோ செய்யாதீர்கள். வீண் வம்பில் சென்று முடியும். தெய்வ பக்தி அதிகமாகும் காலம் இது. புனித யாத்திரைகளுக்கு முயற்சி செய்தாலும் வாய்ப்புக்கள் உண்டு. கணவரால் எதிர்பாராத மகிழ்ச்சி கிடைக்கும்.

**தனுசு**



முதல் சில நாட்களில் ஏதேனும் சரிவு ஏற்பட்டாலும் கவலைப்படாதீர்கள். எதிர்பாராமல் வந்து கிடைக்கப்போகும் செய்தியினால் நீங்கள் திட்டமிட்டபடி 'மளமள' வென்று வேலைகள் முடிந்துவிடும். பண வரவு வெகு திருப்தியாக இருக்கும். குழந்தைகளின் காரணமாக அலைச்சல் உண்டாகும். எனினும் மகிழ்ச்சியான மாதமாகவே இருக்கும். உறவுக்காரர்களின் சுப காரியங்கள் நடைபெறும்.



உங்களுடைய அன்றாடக் கடமைகளில் ஈடுபட்டிருந்தாலும் சமூகத்தொண்டுபோன்ற பொதுஜன காரியங்களில் ஈடுபட நேரலாம். உங்களுடைய வாழ்க்கையில் புதிய முயற்சிகளினால் புகழ் ஏற்படத் தொடங்கும். நல்லவர்களின் பார்வையும், ஆசியும் கிடைக்கும். திட்டமிட்டுச் செயலாற்றத் தொடங்கினீர்களானால் விரைவில் நல்ல எதிர் காலம் உண்டு.

**மீனம்**



மனோ சந்தோஷத்துடனும் அமைதியுடனும் இருக்க வேண்டிய நேரமிது. பகைவர்களின் தொந்தரவுகளும் எதிர்ப்புக்களும் இருந்தாலும், தெய்வ அனுகூலம் உங்களுக்கே இருப்பதால் வெற்றி உங்கள் பக்கமே வந்து சேரும். குடும்பத்தின் உறுப்பினர்களால் மகிழ்ச்சிகரமான செய்திகள் கிடைக்கும். பெரியோர்களின் ஆலோசனைப்படி நடந்தால் நல்ல பலன்கள் உண்டாகும்.

**மகரம்**



பொறுமையின்மையும்சலிப்பும் ஏற்பட்டாலும் பொறுமையாக இருங்கள். உங்களுடைய அனுபவங்களே வாழ்க்கையில் முன்னேறுவதற்கு வழிகாட்டியாக இருக்கும். நீங்கள் முன்பு திட்டமிட்டபடி காரியங்களைச் செய்யாதீர்கள். புதிய ஆலோசனைகளும், புதிய நண்பர்களும் சிறந்த வழிகாட்டிகளாக விளங்குவார்கள். பொறுப்பு மிகுந்த வேலைகளைச் செய்து வரும் உங்களுக்கு நல்ல எதிர்காலம் உண்டு.



ஊருக்குள் ஒரு உபயோகமான சங்கம்

# திங்கள் அறநிலைய சங்கம்

ஆண்கள் தங்கள் வேலை நிமித்தம், மற்றும் அலுவலக, வியாபார விஷயமாக வெளியே சென்று விடுகின்றனர். வீட்டில் வேலைகளை முடித்துப் பொழுது போகாமல் 'போர்' அடிக்கும் பெண்கள் என்ன செய்ய முடியும்? ஏன் எதாவது லேடீஸ் கிளப்புக்குப் போகலாமே என்று கூறுபவர்களும் உண்டு. 'மாதர் சங்கமா? சுத்த அரட்டைகள் சங்கம், வசதியானவர்களுக்குச் சமூக சேவை அப்படி இப்படி என்று ஒரு விளம்பரப் போர்வை' என்று குறை கூறுபவர்களும் உண்டு. அந்தத் தவறான எண்ணத்தை முற்றிலும் மாற்றியமைத்து ஒரு முன்னோடியாக அமைந்துள்ளது 'திங்கள் அறநிலைய சங்கம்.'

பெண்ணின் முகத்தைச் சந்திரனுக்கு ஒப்பிடுவார்கள். சந்திரனுக்குத் திங்கள் என்று ஒரு பெயர். அத்திங்களோ மாதம் ஒரு முறை தோன்றிப் பிறர் மனத்தை மகிழ்விக்கும். அம்மாதிரியே மாதம் ஒரு முறை உதவி என்று கையேந்தி வருபவர்களுக்கு ஆதரவு என்று கரம் நீட்டி உதவ இத்திங்கள் அறநிலைய சங்கம் செயல்பட்டு வருகிறது.

மயிலாப்பூர் எல்டாம்ஸ் சாலையில் அமைந்துள்ள இப்பெண்கள் சங்கத்தின் தலைவி திருமதி சாவித்திரி வைத்தி அவர்கள். குடும்பத் தலைவியான இவர் சமூக சேவையில் டிப்ளமாப் பெற்றவர். சமையல் மற்றும் வீட்டு அலங்காரம் ஆகியவற்றைக் குடும்பத் தலைவிகளுக்குப் பொழுது போக்காகச் சொல்லிக் கொடுக்க ஒரு சிறு சங்கத்தைச் சுமார் 20 பெண்களுடன் 1969ல் ஆரம்பித்து இன்று ஆலமரமாகத் தழைத்துள்ளது.

ஏழை மாணவ மாணவியருக்குப் பள்ளிக் கட்டணம், இலவச புத்தகம், விசேட நாட்களில் அறுசுவை விருந்து முதலியன தொடர்ந்து செயல் பட்டு வருகிறது. அத்துடன் புத்தக வங்கி ஒன்று நிறுவப்பட்டு சுமார் 100 மாணவ மாணவியருக்குப் புத்தகங்கள் இலவசமாக உதவி வருகின்றது.

உடல் நலம் காக்க இலவச மருத்துவ உதவி, ஊனமுற்றோருக்குச் சக்கர வண்டி, ஊன்றுகோல் போன்ற உப கரணங்களையும் அளிக்கின்றது. அத்துடன் நில்லாது ஏழை மணமக்களுக்கு இலவசமாகத் தாலி வாங்கிக் கொடுத்து மண விழாவைச் சிறப்பிக்கச் செய்கிறது.

இச்சங்கத்தின் நற்பணிகளில் இன்று கொடி கட்டிப் பறக்கச் செய்யும் சிறப்பு, வாய்ந்த நற்பணி பண வசதியின்றி உற்றார், உறவினரின்றி, உண்ணவும் உடுக்கவும் வழியின்றித் தவிக்கும் வயது முதிர்ந்த பெண்கள்தான். சுமார் 60க்கும் 80க்கும் இடைப்பட்டுள்ள முதியோர்கள் இச்சங்கம் நடத்தும் முதியோர் காப்பகத்தில் பாதுகாப்பு அளிக்கப்பட்டு வருகின்றனர்.

'தனி மனிதன் ஒருவனுக்கு உணவில்லை எனில் ஜகத்தினை அழித்திடுவோம்' என்றார் கவிஞர் பாரதி. ஒரு மனிதனுக்கே சராசரி உணவுக்கு வழியில்லா இன்றைய நிலைமையில் ஆதரவற்ற முதியோர்களைக் காப்பது என்

பது எத்தனை சிரமம்? அவர்களுக்குத் தாங்கள் ஓர் அநாதை என்ற உணர்வே வராத வண்ணம், உணவு, உடை மற்றும் அவர்களது மனத்திற்கேற்பப் பொழுது போக்கு, பக்தி வழிகள் அனைத்தும் முறையாக நடத்தப் பட்டு, அவர்கள் இறந்த பின் ஈமக் கிரியைகள் வரை சங்கம் ஏற்று நடத்துகின்றது.

பாலவாக்கம் கிராமத்தில் ஒரு ஏக்கர் நிலத்தில் கிராமியச் சூழ்நிலையிலும், இயற்கையான கடற்கரை ஓரத்திலும் அமையப்பெற்ற 2 லட்சம் மதிப்புள்ள முதியோர் காப்பகக் கட்டிடம் இவ்வற நிலையத்தின் சேவையின் சிகரமாக விளங்குகிறது. டெலிவிஷன், மின் விசிறிகள், கட்டில்கள், சக்கர வண்டிகள் முதலியவை முதியோருக்குக் கிடைக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இது மாதர் சங்கத்தால் ஆகக்கூடிய காரியமா என்று வியக்கவும் தோன்றுகிறது.

கணவன் சம்பளத்தில் பாத்திரத்துக்கென்றும் புடவைக்கென்றும் மிச்சம் பிடித்துத் தன் குடும்ப சுகத்தை மட்டும் தேடிக் கொள்ளாமல், தன்னால் இயன்ற சேமிப்பை இத்தகைய சங்கத்துக்கு நன்கொடையாகக் கொடுத்து, சமையலும், அழகுக் குறிப்பும், அலங்கார வகைகளையும் மட்டும்தான் தெரிந்துகொள்ள மாதர் சங்கத்துக்குப் போகிறார்கள் என்ற மடமையைத் தகர்த்தெறிந்து மாதர் சங்கமும் இப்படி பல சமூக சேவைகளைச் செய்ய முடியும் என்று நிரூபித்து வருகிறது. ஏ. வி. எம். அறக்கொடை, மற்றும் பரந்த உள்ளம் படைத்தவர்களின் நிதி உதவி பெற்றும் அங்கத்தினர்களது அயரா உழைப்பினாலும், முயற்சியினாலும் நாளும் இதன் சேவை உயர்ந்து வருகின்றது.

**- சபிதா தேவி**



இவர்கள்

## ஷோபா



● சென்னையில் பிறந்து டெலிபோன் அலுவலகத்தில் பணியாற்றி வந்த குமாரி ஷோபா தமது இருபது வயது முதல் நாடகங்களில் நடிக்க ஆரம்பித்தார். புகழ் பெற்ற இயக்குனர் திரு கே. பாலசந்தர் அவர்களின் ராகினி ரெக்ரியேஷன்ஸ் நாடகக் குழுவில் 1963ம் ஆண்டு சேர்ந்து இவர் நடித்த முதல் நாடகம் நாணல். மெழுகுவர்த்தி, நவக்கிரகம் போன்ற பாலசந்தர் அவர்களின் நாடகக் கதாநாயகி இவர்தான். இவரின் ரோல்கள் தான் திரைப்படங்களில் பிரபல கதாநாயகிகள் விஜயா, ஜெயந்தி, சௌகார் ஜானகி ஆகியோர் செய்துள்ளனர். 1968ல் இயக்குனர் கே. எஸ். நடராஜனின் "கலா நிலையம்" குழுவில் சேர்ந்து பத்து ஆண்டுகளாக நடித்து வருகிறார்.

ரேடியோ, மற்றும் டெலிவிஷன் நாடக நிகழ்ச்சிகளில் அகில இந்திய மட்டத்தில் புகழ் பெற்றுள்ளார். 1972ம் ஆண்டு அகமதாபாத்தில் நடைபெற்ற அகில இந்திய நாடகப் போட்டியில் "இரு கோடுகள்" நாடகத்தில் கலெக்டர் பாத்திரத்தில் நடித்த இவரைச்சிறந்த நடிகை என்று பாராட்டினர்.

இதுவரை 1400 நாடகங்களில் பதினைந்து ஆண்டுகளாக நடித்து வரும் இவரை 1979ம் ஆண்டு தமிழக அரசு சிறந்த நாடக நடிகை எனத் தேர்ந்தெடுத்து 'கலைமாமணி' விருது வழங்கிற்று. மெரீனாவின் ஊர் வம்பு, தனிக் குடித்தனம், கால்கட்டு, வாஷிங்டனில் திருமணம் மற்றும் சுஜாதாவின் ஒரு கொலை, ஒரு பிரயாணம், கடவுள் வந்திருந்தாரா, அடிமைகள் ஆகியவைகளிலும், பூரணம் விசுவநாதனின் குழுவிலும் நடித்து வருகிறார்.

தகவல்: சபிதா தேவி





என் கதையால் எனக்கு வந்த பிரச்னை ௩

# இது உங்கள் அனுபவமா?

**லக்ஷ்மி**

என்னுடைய படைப்புக்களில் ''என் பெயர் டி. ஜி. கார்த்திக்'' என்னும் சிறு நாவல் வெளிவந்தபோது அது வாசகர்கள் பலரால் மிகவும் பாராட்டப்பட்டது. ஒரு பிரச்னையையும் சிலர் எழுப்பினர்.

கதைக்கு நான் எடுத்துக்கொண்ட கருத்து அப்படியொன்றும் புதியதல்ல. காளிதாசரின் சகுந்தலை .இந்தக் காலத்துப் படித்த பெண்ணாக இருந்தால் துஷ்யந்தனின் அசட்டையை எப்படி ஏற்றுச் சமாளித்திருப்பாள் என்பதுதான் எனது புதிய கற்பனை.

என் கதாநாயகி டாக்டர் சகுந்தலா — காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டவன். கருவுற்றிருந்தபோது கணவனால் நிராகரிக்கப்படுகிறாள். தன் குழந்தையுடன் தென் ஆப்பிரிக்காவுக்குச் சென்று குடியேறி அங்கே மருத்துவராகப் பணியாற்றுகிறாள். சில ஆண்டுகளுக்குப் பின்னர் மகனுடன் திரும்பியபொழுது கணவனை யதேச்சையாகச் சந்திக்கிறாள்.

கதையை நான் துன்ப முடிவாக எழுதியிருந்தேன்.

தென் ஆப்பிரிக்காவில் நெடுங் காலம் தங்கியிருந்ததால் எனக்கு அந்தச் சூழ்நிலையைச் சிறப்பாக வருணிக்க முடிந்தது.

காளிதாசரின் சாகுந்தலம் எனக்குக் கருத்துக் கொடுத்து உதவியது. வாசக அன்பர்களின் பாராட்டுதலைக் கேட்டு மகிழ்ந்துவிட்டிருந்த என்னைச் சில எழுத்தாள நண்பர்கள் திடுக்கிடச் செய்தனர்.

''இது உங்களது வாழ்க்கை வரலாறு?''

ஒரு பத்திரிகை நிருபர் நமது பேட்டியிலும் இந்தக் கேள்வியைக் கேட்டார்.

பால் உணர்வு, கொலைகள் முதலியவற்றை மையக் கருத்துக்களாக வைத்து எழுதும் போதுகூட எழுத்தாளர்களுக்கு இப்படி ஒரு பிரச்னை எழுமா? அவை அனைத்தும் எழுத்தாளரின் வாழ்க்கை அனுபவங்களாக இருக்க வேண்டும் என்றுதான் வாசிப்பவர்கள் தவறாக ஊகிப்பார்களா? வாசகர்கள் ஊகித்தால்... நமது கதைகள் அவர்களை அப்படிப் பிரமிக்கச் செய்து விட்டிருக்கிறது என்று மனம் மகிழ்வோம்.

எழுத்தாள நண்பர்களும் பத்திரிகை நிருபர்களும் இவ்வாறு ஊகிக்கத் தொடங்கினால்?

இவர்களுக்கு இப்படிப்பட்ட கோணலான கற்பனையா என்றுதான் வியப்படைவோம்.

மரணம் என்பதை விரிவாக எழுதும் எழுத்தாளன் செத்துவிட்டுத்தான் திரும்பி வந்து அந்த அனுபவத்தை எழுதியிருக்கிறான் என்று நினைக்க முடியாதே... டி. ஜி. கார்த்திக் எனக்கு ஒரு பிரச்னைக் கதை.



1

"எதை வார்த்தைகளால் விளக்க முடியாதோ, ஆனால், வார்த்தைகள் எதனால் விலக்கப்பெறுமோ அதுவே பிரம்மம் என்று அறிந்துகொள். எதை பிரம்மம் என்று உபதேசிக்கிறார்களோ – அது பிரம்மம் இல்லை...

எதை ஒருவன் மனத்தால் உணருவதில்லையோ, ஆனால், மனம் எதனால் உணரப்பெறும் என்று கூறுகிறார்களோ அது பிரம்மம் இல்லை..."

—கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்தபடி பஞ்சாமி, தமது சிஷ்யர்களுக்குச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறார். சாப்பாட்டுக் கூடத்திலிருந்து தக்காளி ரசத்தின் வாசனை நாசியைத் துளைக்கிறது. சிஷ்யப் பசங்கள் பிரம்மத்தை அறிந்து கொள்வதை விடவும் பஞ்சாமி வீட்டில் இன்று என்ன சமையலாயிருக்கும் என்பதை அறிந்து கொள்வதிலேயே நாட்டம் மிகுந்தவர்களாய்...

"ஏண்டா அம்பி... ஜானு மாமி ராத்திரிக்கு வெந்தயக்குழம்பு வைத்திருப்பாளோ"

"இருக்காது. சாயந்திரம் தேங்காய்த் துவையல் அரைச்சிண்டிருந்தா. நான் பார்த்தேனே...."

சாப்பாட்டுக் கூடத்தில் வரிசையாய் இலை போட்டு – ஓடி ஓடி ஒண்டியாய்ப் பரிமாறிக் கொண்டிருந்தாள் ஜானு.

டில்லியிலிருந்து கோடை விடுமுறைக்காக சகோதரன் வீட்டுக்கு வந்திருந்த சகோ



தரிகள்; அவர்களது கணவன்மார்கள்; குழந்தைகள் — கல்லூரியில் படிக்கும் பெண் முதல் நாலாவது படிக்கும் சிறுவன் வரை — இது தவிர சென்னையிலிருந்து வந்திருக்கும் பஞ்சாமியின் தம்பி குடும்பம்....

''மன்னி, எங்காத்துக்காரருக்குப் பச்சைத் தண்ணி ஒத்துக்காது. சித்த வெதுவெதுன்னு வெந்நீர் கொண்டு வந்து தாங்கோ.''

''இதோம்மா.''

—ஜானு குடுகுடுவென சமையலறைக்கு ஓடுகிறாள். இதற்குள் இரண்டாவது நாத்தனாரின் கடைசிப் பையன், 'மாமி அப்படியே மாவடு கொண்டாங்கோ' என்று குரல் கொடுக்கிறான்.

பஞ்சாமியின் தாயார் பார்வதி—மாப்பிள்ளைக்கு எதிரில் வரக் கூச்சப்பட்டுக்கொண்டு சமையலறையின் கதவோரத்தில் சாய்ந்தபடி, மருமகள் எல்லாரையும் கவனித்துப் பரிமாறுகிறாளா எனமேற்பார்வை பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

''ஜானு, பெரிய மாப்பிள்ளைக்கு இன்னொரு அப்பளம் கொண்டு வந்து போடுடி... அவருக்கு நான் இட்ட அப்பளம்னா பிடிக்கும்...''

''ரமேஷ் குட்டிக்கு ரசம் சாதத்துக்குக் கொஞ்சம் நெய் விடு. நேத்து ராத்திரி குழந்தை இருமிண்டே யிருந்தது. ரயில்லே வந்தது உஷ்ணத்தைக் கிளப்பி விட்டிருக்கு''



''சுசீ அகத்துக்காரருக்கு என்ன வேணும்/ பாரு. இத்தனை வயசாகிறது இன்னும் ஒழுங்கா பரிமாறத் தெரியலியே. எல்லாம் நான் சொல்லிக் கொடுத்தாத்தான் உண்டு. தனக்கா ஒண்ணும் தெரியாது. பிரம்மம். பரப்பிரம்மம்....''

பார்வதி நாசூக்காய்த் தலையில் அடித்துக் கொள்கிறாள்.

''மாமா அவாளுக்குப் பிரம்மம்னு எதுன்னு சொல்லித் தந்துண்டிருக்கார்... பாட்டியானு ஜானு மாமிதான் பிரம்மம்னு சொல்றா. மாமி, ஓடிப்போய், நான்தான் பிரம்மம்னு மாமாகிட்ட சொல்லுங்கோ, போங்கோ...''

பனிரெண்டு வயசுப் பொடிசு ஒன்று அதிகப்பிரசங்கித்தனமாய் பேசப் கல்லூரி இரட்டைப்பின்னல் புரையேறி சிரிக்கிறது. கூடவே பெரியவர்களும் சிரிப்பில் பங்கேற்கிறார்கள்.

ஜானகியும் அசட்டுச் சிரிப்பொன்றை இரைக்கிறாள்.

என்ன செய்வது, சில சமயங்களில் மனசில் பலத்த அடிபட்டாலும் சிரித்து மழுப்பவேண்டிய சூழ்நிலை.

இந்த பந்தி முடிந்து, பஞ்சாமியும் அவரது தாய் பார்வதியும் சாப்பிட்டு முடித்த பின் ஜானு சாப்பிடுகையில் இரவு பத்து மணி.

வடித்த சாதத்தில் ஒருபிடி அளவுதான் மிச்சம். ரசத்தில் — அடிக் கரைசலாய் வெறும் கருவேப்பிலை ஈர்க்குச்சிகள்... துவையல் காலி!

ஜானகிக்கு அதெல்லாம் வேண்டுமென்கிற அவசியமும் இல்லை.

மிஞ்சிய சாதத்தில் நீர்த்த மோரை விட்டுக் கரைக்கிறாள். கருவேப்பிலையை எடுத்தெறிந்துவிட்டு வண்டல் ரசத்தைக் கரைத்த சாதத்தில் விட்டுக் கொள்கிறாள். 'கடகட' வெனக் குடித்து முடிக்கிறாள்.

இதோ—அவன் சமையலறையைத் தேய்த்து அலம்பிவிடும் சத்தம். வறட்டு வறட்டென்று அந்தத் துடைப்பத்தின் வறட்டொலியில்



ஒரு சோக கீதம்...'இதுதான் என் வாழ்க்கை 'இதுதான் என் வாழ்க்கை' – என்கிற ஓலம்; 'இதுக்குத்தான் நான் பிறந்தேன்' என்கிற அழுகை; 'இந்த தேகம் இன்னும் எத்தனை நாளைக்கு இருந்து தொலைக்கும்' என்கிற எரிச்சல்; சில சமயங்களில் 'ஐயோ பாழும் பிராணன் பட்டுன்னு போகாதா' என்கிற கதறல்.

அத்தனையும் இரவு நேர நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு – துடைப்பத்தின் வறட்டு அலறலாக ஒலிக்கும்.

''எத்தனை நேரம்தான் அந்தச் சமைய லறையைத் தேய்ச்சுண்டிருப்பா மன்னி. தினம் தேய்க்க அங்க என்ன அழுக்கு இருக்கு. துடைப்பம் தேயறதுதான் மிச்சம்...''

–கூடத்தில் படுத்திருந்த சசி தன் அம்மா விடம் சொல்கிறான்.

''நான் சொல்லிச் சொல்லி அலுத்திட் டேன். அவ கேட்டாத்தானே... இந்தாடா ரமேஷ், உங்க மாமி கிட்டப் போய், 'போதும் அலம்பினதுன்னு பாட்டி சொன்னான்னு சொல்லு போ. கூடத்துல அப்பா, அம்மா எல்லாரும் தூங்கணுமாம். துடைப்பச் சத்தம் நாராசமா இருக்காம்னு சொல்லிட்டு வா, போ.''

–பார்வதி பேரனை எழுப்பி அனுப்புகிறாள். அடுத்த நிமிடம் சத்தம் நிற்கிறது..

''ஏம்மா, அண்ணா இன்னமும் மன்னி கிட்ட மூஞ்சி மாதிரியேதான் இருக்கானா.. படுக்கையெல்லாம் இப்பவும் தனித் தனியே தானா?''

பெரியவன் மீனா – தாயின் காதருகில் ரகசியமாய்க் கேட்க – அம்மாவின் அந்தப் பக்கம் படுத்திருந்த சசி, அவள் என்ன சொல்கிறாள் என்பதைக் கேட்க ஆவலாய் நெருங்கி வந்து படுக்கிறாள்.



## காஸ்.. காஸ்.? காஸ்.!

எலக்ட்ரிக் லைட்டரை உபயோகிக்காமல் இருப்பது நல்லது. தீக்குச்சியை முதலில் பற்றவைத்துவிட்டு பர்னரைத் திறக்கிறோம். லைட்டரானால் பர்னரைத் திறந்து விட்டுத்தான் உபயோகப்படுத்த வேண்டும்.

சில சமயங்களில், முதல் தடவையே லைட்டர் எரியாது. திறந்த பர்னரில் வாயுக் கசிவு ஏற்படும். மிகவும் சிறந்தது தீப்பெட்டிதான்.



''பஞ்சாமியைப் பத்தி உனக்குத் தெரியாதா? அவன் வைராக்கியம் வச்சான்னா வச்சதுதான். அப்படியே உங்க அப்பா குணத்தைக் கொண்டு பிறந்தவனாச்சே. சாந்தி கல்யாண அறையிலேருந்து வெளியில வந்தவனோட கோபம் பதினஞ்சு வருஷமாகி யும் தணியவில்லே. நியாயமான கோபம் தானே. இவனை இளிச்சவாயன்னு நினைச் சுண்டு அவா ஏமாத்தப் பார்த்தா. நடக்கலே. இப்போ தண்டனையைப் பொண்ணு அனுப விக்கறா....''

''இப்படியே விட்டுட முடியுமாம்மா? அந்தக் காலத்துல வைரத் தோடு போடா மல் சாதாரண வெள்ளைத் தோட்டைப்- போட்டு ஏமாத்திட்டான்னு இவன் நினைச் சான். சரி. அதுக்காக இவ என்ன பாவத் தைப்பண்ணினா..இப்ப பாரு, என் பொண்ணு வளர்ந்து நிக்கறா. எங்களாலே வைரத் தோடு போட முடியாது. அதுக்காக உன் பேத்தி வாழாவெட்டியா நின்னா எப்படி இருக்கும்?''

''சீ, அசத்து. அந்த மாதிரியெல்லாம் பேச்சுக்குக்கூடச் சொல்லாதே. என் பேத்தி ஜாம் ஜாம்னு குடித்தனம் பண்ணுவா. இதுகூட அவளைச் சேர்த்து நினைக்கறதே பாவம். பாரேன். இந்த நிலைமையில இருக்கிறச்சேயே இதுக்கு என்ன திமிரும் பாரு. சில சமயம் நாம கூப்பிட்டாக்கூட என்னன்னு கேட்க மாட்டா. அழுங்குனு உட் கார்ந்திருப்பா. 'பார்த்தா பசு மாதிரி இருக் காளே தவிர நம்ப முடியாது. இத்தனை நேரம் தூங்கியிருப்பான்னு நினைக்கிறயா. கொல் லைத் தாழ்வாரத்துக்குப் போய்ப் பாரு. லைட் டைப்போட்டுண்டு பிறந்தகத்துக்கு லெட்டர் எழுதிண்டிருப்பா. அது என்னமாத்தான் ஒரு இன்லண்ட் லெட்டர்லே நுணுக்கி நுணுக்கி எழுதுவாளோ... அப்படி என்னதான் விஷ யம் இருக்குமோ....''

பார்வதி அலுத்துக் கொள்கிறாள். தன் மகனைப் பற்றிச் சொல்லும்போது குரலில் லேசாகப் பெருமை இழையோடுகிறது.

'இவன் படித்தவன். வேதமும் உப நிஷத்தும் இவன் நாவில் நர்த்தனமிடும். இவனிடம் அத்யயனம் செய்தவன் என்பதே சிஷ்யர்களுக்குப் பெருமை. அந்த அறிவும் சாமர்த்தியமும் யாருக்கும் அத்தனை சுல பத்தில் வராது. அதற்கென்ன அறிவு அதிக மிருந்தால் கர்வம் இருக்காதா? அந்தக் கர்வம் நியாயமானதுதான்...''

'இப்பேர்ப்பட்ட மனிதனை மாப்பிள்ளை யாய் அடையக் கொடுத்து வைச்சிருக்க வேண்டாமோ? இது தெரியாமல், ஞான ியைப் பெற்றவர் ஏமாற்றினால் கோபம் வராதா?'

'அந்தக் கோபத்தின் பலனை இப்போது இவள் அனுபவிக்கிறாள். அனுபவிக்கட்டும் நன்றாக உணரட்டும்.'

பார்வதி தன் மகனின் ரோஷத்தைச் சிலாகித்தாள். மனதுக்குள் பூரித்தாள்.

'பிள்ளைன்னு இவன்தான் பிள்ளை! ஒவ்வொருத்தன், கல்யாணம் ஆன அடுத்த நிமிஷமே பெண்டாட்டி முந்தானையைப் பிடிச்சுண்டு அலைவானே அது மாதிரி இல்லை என் பிள்ளை. என் வார்த்தைக்கு மதிப்புக் கொடுப்பவன். அம்மாவை மதிக்காதவாளை தூக்கி வாசல்லே எறிஞ்சுடுவான். முதல்லே அம்மா. அப்புறம்தான் மத்த மனுஷா எல்லாரும்: தேசுசும் அவனுக்கு அற்பம். கல்யாணமே வேண்டாம்னு சொன்னவனை நான்தான் வற்புறுத்தி மணையில உட்கார்த்தி வச்சேன். இவன் ஞானியாகப் போக வேண்டியவன். இல்லேன்னு — வீட்டுக்குள்ளேயே இவன் எதிர்த்தாற்போலவே தாலி கட்டின பெண்டாட்டி வளைய வர்றப்ப, மனசை அலைய விடாமக் கட்டி நிறுத்த முடியுமோ...'

இப்படி நினைக்கிறவள் ஜானகியின் நிலைமையைக் கொஞ்சமாவது உணர்ந்திருக்கலாம். ஆனால் அவளைப் பற்றி நினைக்கும் போதே — சம்பந்தி மனிதர் செய்த பொய்ப் புரட்டும், கல்யாணத்தன்று நடந்த அவமரியாதைகளும் நெஞ்சுக்குள் அலையாய் எழுந்து ஆர்ப்பரித்து நிஷ்டூரமாய் நினைக்க வைக்கிறதே...

பார்வதிக்கு இரண்டு பெண்; இரண்டு பிள்ளைகள். மூத்தவளுக்குப் பதினைந்து வயசில் கல்யாணம். பார்வதியின் கணவர் இருந்தார் அப்போது. எல்லாமே நிரக்க நடந்தது. மூன்று நாள் கல்யாணம். கச்சேரி, வாண வேடிக்கையெல்லாம்.

அடுத்தாற்போல் பஞ்சாமி. அப்பா செத்துப்போகும்போது பதினெட்டு வயது இளைஞன். வேத பாடசாலையில் படித்துக் கொண்டிருந்தார்... தங்கைக்குக்கல்யாணம் செய்வதற்காக அவர் சிரமப்பட வேண்டிய அவசியமில்லை. அப்பா சேர்த்து வைத்திருந்த சொத்தே ஏழு தலைமுறைக்குக் காணும். கமலாவின் கல்யாணத்தை விமரிசையாகச் செய்தார். தம்பியைப் பட்டினம் அனுப்பிப் படிக்க வைத்தார்.

இப்பேர்ப்பட்டவர்—'நமக்குத்தான் வேண்டிய சொத்து இருக்கிறதே. பெண்டாட்டி கொண்டுவந்தா ஆகப் போகிறது' — எனப் பெருந்தன்மையாய்ப் போயிருக்கலாம்.

ஜானகியின் பிறந்தவீடு — பெருங்காயம் வைத்த பாண்டம். ஜானகியின் பெற்றவரால் — சம்பந்தியம்மா தந்த லிஸ்டில் உள்ள அத்தனை நகைகளையும் செய்ய முடியவில்லை. முக்கியமாக மூன்று காரட்டில் வைரத்தோடு.

அதை அவரால் நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. கல்யாணச் செலவே ஏகத்துக்கு இழுத்துக் கொண்டு போய்விடும் போலிருந்தது.

2

"இது ஒரு பெரிய விஷயமா... பிள்ளையப் பெத்தவா அப்படித்தான் கேட்பா... தைக்காக அவா கேட்டதெல்லாத்தையும் பண்ணிப் போட்டிண்டிருக்க முடியுமா... கப்பு, நான் சொல்றேன் கேளு. இப்ப, ஜானுவுக்கு எத்தனை பவுன் நகை போட்டிருக்கே?..."

"பதினெட்டுப் பவுன். திருமாங்கல்யத்தையும் சேர்த்து."

"ரொம்பச் சரி. காதுக்கு வெறும் வெள்ளைக் கல் தோடு போடு. போறும். கல்யாணம் முடியறவரைக்கும் சமயத்துக்கு வேணும்னு அவ அத்தையோட வைரத் தோட்டைப் போட்டுக்கட்டும். அவ மாமியோட நெக்லஸையும், ரெட்டை வடத்தையும் வாங்கி மாட்டிக்கட்டும். அவா கேக்கற முப்பது பவுன் கணக்கை காமிச்சுடு. அப்புறமாப் பார்த்துப்பம்."

"அப்புறமானு எப்புறம்? நாலு பேர் முன்னாடி மானத்தை வாங்கறாப்பல ஏதாவது கேட்டுட்டா என்ன பண்றது?"

"எல்லாம் தாலி கட்டி முடிஞ்சாச்சுன்னு அசைக்க முடியாதுன்னேன். என்ன செய்வா? விஷயம் தெரிஞ்சவுடனே காச் மூச்சுனு நாலு கத்தல் கத்துவா... கத்திட்டுப் போகட்டுமே. மாப்பிள்ளை எப்படியும் இதைப் பெரிசு பண்ண மாட்டார். நம்ம ஜானு அவரைச் சரிக்கட்டிடுவா..."

ஜானுவின் அப்பாவுக்கு, குடும்பத்தின் பெரியமனிதராய் லட்சணமாய் அத்திம்பேர் ஒருவர் அறிவுரை வழங்கினார்.



சமையலுக்குத் தேவையான கறிகாய்கள் வாடி வதங்கியிருந்தால் அவற்றைச் சிறிது எலுமிச்சம் பழ ரசம் கலந்த குளிர்ந்த நீரில் ஒரு மணி நேரத்திற்கு ஊற வைக்க வேண்டும். அப்போது கறிகாய்கள் பழையபடி பசேலென்று ஆகிவிடும்.

- ப்ரியா பாலு



'ஆயிரம் பொய்யைச் சொல்லிக் கல்யாணத்தைப் பண்ணணும்பா...'

—இந்த ஒரு வார்த்தை வேறு இவருக்கு அனு சரணையாய்....

ஆனால், இவர்கள் நினைத்தாற் போல், விஷயம் அத்தனை சுலபமாய் 'முடிந்துவிட வில்லை. கல்யாணத்தை என்னதான் நன்றாக நடத்தியிருந்தாலும் பார்வதிக்குக் கழுத்து மட்டும் குறை.

'ஜானவாசக் காருக்கு ஜோடனைபோறாது. இப்படியா அலங்காரம் பண்ணுவா... நம்ம மீனு கல்யாணத்துக்கு அன்னப் பட்சி மாதிரி காரை அலங்காரம் பண்ணினோம். ஏன், சுசி கல்யாணத்துக்கு ஸ்பெஷலா தஞ்சா வூர்லேருந்து பூஜோடனைக்காக ஆளை வர வழைச்சிருந்தானே நம்ம பஞ்சாமி...'

''அதெல்லாம் அவா அவாளுக்கு ஆசை இருக்கணும். நாம சொல்லியா செய்வா?''

'நிச்சயதார்த்தத்துக்குப் பொண்ணுக்கு வாங்கியிருந்த புடவையைப் பார்த்தியோ... அழகா ஒருடிஸ்யூ எடுத்திருக்க மாட்டானோ? பழைய கலர். இந்த மாதிரி கலர்லே இதே பார்டர் போட்டு மூணும் வருஷம் தீபாவளிக்கு நான் சுசிக்கு வாங்கித் தந்தேன்.'

'காலம்பற டிபனுக்கு இட்லியும் சர்க்கரைப் பொங்கலும் போறவே யில்லை... நம்ம மன்னார்குடி மாமா, அவா பொண்ணெல்லாம் டிபன் சாப்பிட உட்கார்ந்தப்ப அரிசி உப்புமாவைக் கொண்டு வந்து வச்சா... ஸ்வீட்டுக்கு முதல் நாள் டிபனுக்குப் போட்ட பால் கேக்கையே போட்டா. மன்னார்குடி மாமா பேசறதுக்குக் கேக்கணுமா... 'என்ன பார்வதி... எம் பொண்ணெல்லாம் வேண்டாம்னு எங்கியோ போய் சம்பந்தம் பிடிச்சியே... அவா பூலோகத்திலேயே கிடைக்காத வஸ்துன்னு அரிசி உப்புமாவைக் கொண்டு வந்து வச்சு உபசாரம் பண்ணறா' அப்படின்னு சொல்லிச் சிரிக்கிறார். எனக்கு மானம் போறது.'

'முகூர்த்தம் ஆன கையோட ஒரு இரசந்தரத் தெரியாது...? ஸ்ரீராம நவமி உற்சவத்துக்கு நீட்டருப் போல பானகத்தைக் கரைச்சு வச்சுண்டு கொடுத்தா. போறும். நான் இருந்திருந்து இப்பத்தான் பிள்ளைக்கு கல்யாணம் பண்றேன். எனக்குன்னு எங்கே விருந்துதான் வந்து வாச்சதோ...'

—இப்படி அழுத்துச் சலித்து, வெறுத்துப் போனவள் — கல்யாணத்துக்கு இரவே — சாந்தி முகூர்த்த அறைக்குப் பெண்ணைக் கொண்டு விட வந்த வயதான சுமங்கலிகளிடம் பொரிந்து கொட்டிக் கொண்டிருந்த போது—

''காலம்பற பொண்ணோட தோடு டாலடிச்சுது. இப்ப என்னமோ மங்கிக் கிடக்கேடி. கவனிச்சியோ...''

பார்வதியின் அக்காக்காரி கிசுகிசுக்க,

''இந்தாடிம்மா, சித்தே நில்லு. காலம் பறப் போட்டிருந்த தோடுதானே இது... கழட்டிக் கொடு பார்க்கலாம்...''

ஜானகி தலையோடு கால் நடுங்கி விட்டாள்.

அத்தனை பேர் எதிரிலும் அவமானத்தினால் குன்றிப்போய் விட்டாள். தோட்டைக் கழற்றிக் கொடுக்கும்போதே — தன்னையும் மீறி உளறிவிட்டாள்.

''இது... சாதாரண ரங்கூன் வைரம்தான். காலம்பறப் போட்டிருந்தது எங்க அத்தையோட தோடு. தலைத் தீபாவளிக்கு வைரத் தோடு போட்டுடறதா அப்பா சொன்னார்.''

அவ்வளவுதான். அமர்க்களப்படுத்திவிட்டாள் பார்வதி. பெரிசாய் ஒப்பாரி வைத்து அழுதாள். கூடியிருந்த உறவினர் அனைவரும் அவளைச் சமாதானப்படுத்த ஆனமட்டும் முயன்றும் ஒன்றும் பிரயோசனப்படாமல், ஆளுக்கு ஒரு பக்கம் ஜானுவின் தகப்பனாரை வாய்க்கு வந்தபடி திட்டி வார்த்தைகளாலேயே நார் நாராகக் கிழிக்க—

''இது மட்டும்தான் ஏமாத்தினரா. இன்னும் ஏதாவது இருக்கா... நன்னு விசாரி.''

யாரோ ஒருவர் இன்னமும் கிளறி விட்டார்...

முப்பது பவுனுக்குப் பதினெட்டுப் பவுன் தான் போட்டிருப்பதும், காலையில் ஜானகி போட்டிருந்த நெக்லஸ்ஸும், இரட்டை வடச் சங்கிலியும் இரவல் என்பதும் தெரிய வந்ததும், கோபம் விசுவரூபமெடுக்கிறது.

சாந்திமுகூர்த்த அறையில் ஜானுவுக்காகக் காத்திருந்த பஞ்சாமி ஓடிவர — பெண் வீட்டைச் சேர்ந்தவர்களுடன் ஜானுவின் தந்தை கப்பு பதறிக் கொண்டு ஓடிவர...

''தயவு செய்து பெரிய மனசு பண்ணி நடந்ததை மன்னிச்சுடுங்கோ... குழந்தையை ஆசீர்வாதம் பண்ணி அறைக்குள்ளே அனுப்புங்கோ... நல்ல நாளும் அதுவுமா அவ கண் கலங்கறதைப் பார்க்க முடியலே...''

கப்பு பார்வதியின் காலில் விழாத குறையாகச் சொன்னார். பஞ்சாமியின் இரு கைகளையும் பிடித்துக் கொண்டு புலம்பினார்.

ஒரு கணம் ஜானகியின் கண்ணீரை விட— இந்த நகைகள் ஒரு பெரிய விஷயமா என்று கூடத் தோன்றியது.

''அப்போ, நானும் ஏழைமையுமா பிள்ளையப் பெத்தவ மாத்திரம் பதை பதைக்க நிக்கலாமோ... டேய் பஞ்சாமி, நம்மை ஏமாத்தி இப்படி நாலு மனுஷா முன்னாடி அவமானம் பண்ணியிருக்கா... பேசாம நிக்கறயே. பளிச்சுன்னு சொல்லேன், நான் உங்கபொண்ணை ஏறிட்டுப் பார்ப்பேனுன்னு''

''ஐய்யய்யோ, இப்படி யெல்லாம் சொல்லாதீங்கோம்மா... தலை தீபாவளிக்கு நிச்சயமா....''

கப்பு, குழைந்து கொண்டிருக்கும்போதே இரவல் நகையில் கல்யாணத்தை நடத்த யோசனை சொன்ன அத்திம்பேர் முன்னால் வந்தார்.

உங்கள் வீட்டு ஜன்னல் கதவுகள் மழையின் காரணமாகத் திறக்க முடியாமல் பிடித்துக் கொண்டால் உப்புத்தூளுடன் கோலமாவைக் கலந்து ஜன்னல் விளிம்பில் தூவுங்கள். மழைக் காலத்திலும் எளிதாகத் திறக்கலாம். —ப்ரியா பாலு



''ஏம்மா, நீங்களும் இரண்டு பொண்களைப் பெத்தவா தானே... இப்படி ஒரேயடியாக் கழுத்திலே கத்திய வச்சா எப்படி? அவன் சம்சாரி. இப்பத்தான் முதல் பொண்ணுக்குக் கல்யாணம் பண்ணி யிருக்கான். இன்னும் மூணு பொண்ணு இருக்கா. பெரிய மனசோட எல்லாத்தையும் ஒதுக்கிட்டுப் போறதை விட்டுட்டுச் சண்டைக்கு துவஜம் கட்டிண்டு நிக்கறேளே...''

இப்படிச் சொன்னவுடனே பார்வதிக்கு ரோஷம் பொங்கியது.

''பாருடா... என்னைச் சண்டைக்கு அலையறவன்னு சொல்றா... நானும் இத்தனை வருஷமா எத்தனையோ பேர்கிட்ட பழகியிருக்கேன். இவா தான் எனக்குச் சண்டைக்காரின்னு பட்டம் கொடுக்கிறா. கிளம்புடா. இனிமே ஒரு க்ஷணம்கூட இங்கே தங்கக் கூடாது....''

''எதுக்கு வீண் வார்த்தை.... உங்க பொண்ணை நகையோட எங்க வீட்டுக்கு அனுப்புங்கோ போதும். எங்க அம்மா அழறதை என்னால தாங்க முடியாது. அவ, இப்பத்தான் எங்க அப்பா போன துக்கத்திலேருந்து மீண்டு எழுந்தா — கல்யாணக் காரியத்துக்காக மனசைத் தேத்திண்டு வளைய வர ஆரம்பிச்சா... இப்ப நீங்க செஞ்ச அவமரியாதையால அவ இன்னமும் துக்கத்திலே உடைஞ்சு போயிடுவா... எனக்கு ஏன்தான் கல்யாணத்துக்குச் சம்மதிச்சமோன்னு இருக்கு...''

''என்ன மாப்பிள்ளை, நீங்களே இப்படிச் சொன்னா எப்படி... படிச்சவர்... விஷயம் புரிஞ்சவர். நகைக்காகப் பெண்ணை ஒதுக்கி வைக்கிறது அநாகரிகமான செய்கை.''

''நீங்க மாத்திரம் ரொம்ப நாகரிகமாக நடந்துண்டேளா... இரவல் நகையை வாங்கிப் போட்டு... ச்சீ... த்தூ... மானம் போறது.''

பார்வதி சீறினாள். அத்தனை தான். அத்திம்பேருக்கு எக்கச்சக்கமாய்க் கோபம் வந்து விட்டது.

''சரிதான் கம்மா வார்த்தையை ஓட விடாதீங்கோ. ஆமா. இரவல் நகையை வாங்கிப் போட்டுத்தான் கல்யாணத்தை நடத்தினோம். உங்களை மாதிரி நெஞ்சிலே ஈரமில்லாத மனுஷா இருக்கிறவரைக்கும் பொண்ணைப் பெத்தவா இப்படி ஏதாவது இல்லு மூல்லு பண்ணித்தான் பொண்களைக் கரையேத்த முடியும்.

''இப்ப தாலி கழுத்தில ஏறியாச்சு. அவளை நீங்க அழைச்சுண்டு போனாலும் சரி. இங்கேயே விட்டுட்டுப் போனாலும் சரி... என்ன ஆறதோ ரெண்டுல ஒண்ணு பார்க்காம விடப் போறதில்லே. ஆக மொத்தம், எங்க பொண்ணை வாழாவெட்டியா, வீட்டோட் வச்சுக்கிற உத்தேசம் எங்களுக்கில்லே... இப்ப நீங்க இவளை அழைச்சுண்டு போனா தீபாவளி சமயத்துல நீங்க கேட்ட நகையோட வந்து தலை தீபாவளிக்கு எங்க கப்பு

கூப்பிடுவான். இல்லே. விட்டுட்டுத்தான் போவேன்னு தாராளமா விட்டுட்டுப் போங்கோ.

''தீபாவளி இன்னும் ஆறு மாசம் இருக்கு. குழந்தைக்கு இன்னும் ஆறு மாசம் கழிச்சுக் கல்யாணம் ஆனதா நினைச்சுண்டு போறோம். நகையைப் போட்டுப் பொண்ணைக் கொண்டு விடறோம். அப்ப சாந்தி முகூர்த்தத்தை வெச்சுண்டாப் போறும்னு மாப்பிள்ளை நினைச்சார்னு அதுபடியே செய்வோம்...''

''பேஷா செய்யுங்கோ. நான் ஒன்றும் சாந்தி முகூர்த்தத்துக்காக அலையறவன் இல்லே. இப்பேர்ப்பட்ட குடும்பத்துப் பொண்ணை நிமிர்ந்து பாக்கறது கூட என் கௌரவத்துக்கு இழுக்கு... அம்மா, ஊருக்கு கிளம்பு. அவ அப்பா, நகையோட பெண்ணை அழைச்சுண்டு வந்து மன்னிப்புக் கேட்ட துக்கு அப்புறம்தான் மத்ததெல்லாம்... நாளைக்கு கட்டுச்சாதக் கூடை வைக்கிற வரைக்கும் காத்திண்டு இருக்கவேண்டாம்.''

பஞ்சாமி தாயிடம் இப்படிச் சொல்லி விட்டு சரிகை வேட்டியை மடித்துக் கட்டிய படி பெட்டி படுக்கைகளை எடுத்து வந்து சத்திரத்தின் வாசலில் வைத்துவிட்டான்.

இதற்குப் பின் அடுத்த ஆறு மாதங்கள் கிணற்றில் கல்லைப் போட்டாற் போல அமர்க்களமே இல்லாமல் கரைய...

தீபாவளிக்கு நாலு நாள் முன்பு, கப்பு தன் மகளுடன் பஞ்சாமி வீட்டுக்குள் நுழைந்தார்.

அப்போதும் இதே போல ஊஞ்சலில் உட்கார்ந்து நாலைந்து மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார் பஞ்சாமி.

தட்சிணாமூர்த்தி போல...ஒருகாலை மடக்கி ஒரு காலைத் தொங்கப் போட்டுக் கொண்டு கம்பீரமாய் வித்தையின் தேஜஸ் முகத்தில் துலங்க....

'அம்மாடி.... இது என்ன முகம்... இது என்ன தேஜஸ்... இவர் முன்னால் கூனிக் குறுகி நிக்கறப் போல மனசுக்குள்ள ஒரு பயம் ஓடறதே... இத்தனை படிச்சவரை அப்பா ஏமாத்தினது தப்பில்லையோ! இதோ, இப்பவும் நாங்க செஞ்ச தப்புக்கு மன்னிப்பு கேட்கத்தான் வந்திருக்கோமே தவிர, வைரத் தோட்டையும் நகையையும் எடுத்துண்டு வர முடியலையே... இவர் கிட்டே சொன்ன சொல்லை அப்பாவாலே காப்பாத்த முடியலையே... இந்த அப்பாவை யாரு இத்தனை பெரிய இடத்துல சம்பந்தம் பண்ணச் சொன்னு... பதினெட்டு பவுன் நகையும், வெறும் வெள்ளைக் கல் தோடும் எதேஷ்டம்னு சொல்ற ஒரு சாதாரண, பரம ஏழைக்கு என்னைப் பண்ணிக் கொடுத் திருக்கக் கூடாதோ...'

ஜானகி அப்பாவின் பின்னால் உடம்பை மறைத்துக் கொண்டு பெட்டியும் கையுமாகக் கூடத்தில் வந்து நின்றாள்.



**யோசனை**

உங்கள் குழந்தை பால் பாயிண்ட் பேனாவைக் கீழே போட்டுவிட்டதா? ரீஃபில் எழுதாமல் போய்விடும். நன்ருகக் கொதிக்கும் வெந்நீரில் இரவு முழுவதும் ரீஃபில்லைப் போட்டு வையுங்கள். மறுநாள் நன்ருக எழுதும்.

---

5

“....தேனத்யக்தேன புஞ்ஜீதா மாக்ருத: கஸ்யஸ்வித் தனம்..'' அதாவது இந்த லோகத்தில் தோன்றி மறைவதாயுள்ளது எதுவோ — அத்தனையும் ஈசுவரனால் வியாபிக்கப்பட்டதாய் காண வேண்டும். அவனன்றி உலகில்லை என்று தன்னுடைய தியாக மனப்பான்மையால் உன்னை ரக்ஷித்துக்கொள்... உயிரை ரக்ஷிப்பதற்கு அவசியமான பொருளை மட்டும் ஈசுவரன் கொடுத்ததை ஏற்றுக் கொண்டு வாழ்வாயாக... எவருடைய பொருளுக்கும் பேராசைப்படாதே''

வாசற்புறம் நிழலாட நிமிர்ந்து பார்த்த பஞ்சாமி ஒரு கணம் திணறி, அடுத்த நிமிடம் சமாளித்துக் கொண்டார்.

''வாங்கோ... அம்மா அவா வந்திருக்கா பாரு....''

உட்பக்கம் பார்த்துக் குரல் கொடுத்தார்.

பார்வதி வந்தவுடன் சொல்லி வைத்தாற் போல ஜானகி சடக்கென விழுந்து நமஸ்கரித்தாள்.

''உம்.... உம்....''

பார்வதி வாய்க்குள் முனகிக்கொண்டாள். ஜானு பஞ்சாமியின் பாதங்களில் விழுந்து வணங்கியபோது அவர் கூடத்து ஈசானிய மூலையில் இரண்டு பல்லிகள் ஒன்றையொன்று துரத்தி விளையாடுவதையே பார்த்துக்கொண்டு நின்றார்.

''ஒரே வெய்யில்... பஸ் ஸ்டாண்டிலேருந்து வீட்டுக்கு வரறதுக்கு குதிரை வண்டிக் காரன் அஞ்சு ரூபா பிடுங்கிண்டுட்டான்... தீ...ர்... அம்மா ஜானு, ஒரு தாம்பாளம் வாங்கி அந்தப் பையிலே இருக்கிறதை

யெல்லாம் எடுத்து வச்சு, சுவாமி முன்னாடி கொண்டு வச்சு நமஸ்காரம் பண்ணு...''

பார்வதி விருட்டென உள்ளே போய், பெரிய வெள்ளித் தாம்பாளத்தைக் கொண்டு வந்து வைத்தாள்.

பருப்புத் தேங்காய், மற்றும் பட்சணத் தூக்கையும் எடுத்து வைக்க — சுப்பு தனது கைப் பையிலிருந்து நோட்டுக் கற்றையை எடுத்துத் தட்டில் வைத்தார்.

''என்னது இது....''

''பணம். இதுலே மூவாயிரம் ரூபா இருக்கு. இதை வச்சுண்டு பெரிய மனசு பண்ணி ஜானுவை ஏத்துக்கணும். கல்யாணத்தும்போது வித்ததை விட இப்ப தங்கம் விலை ஏகமா ஏறிடுத்து. நீங்களும் நியூஸ் பேப்பர்லே பார்த்திருப்பேள்... இப்ப போய் பவுன் வாங்கறது அத்தனை சுலபமான காரியமில்லே... மேலும் இப்ப என்னால அத்தனை பணம் புரட்ட முடியலே... மாப்பிள்ளை இதை அப்படியே பாங்குலே போட்டு வைக்கட்டும். மேல் கொண்டு என்னால முடிஞ்சப்ப சிறுகச் சிறுக பணம் அனுப்பறேன். வைரத் தோடோ, நகையோ, குழந்தைக்கு வேண்டியதை நீங்களே செஞ்சு போட்டுக்கோங்கோ...''

''எங்களுக்கு இதைத் தவிர வேறு வேலை இல்லேன்னு நினைச்சுண்டீரா... பேசாமப் பொண்ணையும் அழைச்சுண்டு போய் ஒரு வழியா நீங்களே தோட்டையும் மிச்ச நகைகளையும் போட்டு, கொண்டுவந்து விடுங்கோ. கல்யாணத்தும்போது சொன்ன அதே வார்த்தைதான். எப்போ எங்களை ஏமாத்தணும்னு நினைச்சு அப்படி ஒரு காரியம் செஞ்சு கல்யாணத்துலே அவமானப்



### யோசனை

சாம்பலும் தண்ணீரும் கலந்து கண்ணாடிப் பாத்திரங்களைத் துலக்கிப் பாருங்கள். பளபள வென்று மின்னும்.

படுத்தினேளோ — அப்புறம் மறு பேச்சுக்கு இடமே இல்லே... 'நான், இவளை பேசாம வேற கல்யாணம் பண்ணிண்டு, எதுக்கு வீணா இவாளுக்காகக் காத்திண்டிருக்கேன்னு சொல்லிண்டுதான் இருக்கேன். அவன்தான் 'போறும்டியம்மா, இந்த சம்சார சாகரமே வேண்டாம்னு' சொல்லிண்டிருக்கான்.''

பார்வதி படபடவென்று பொரிந்தாள்.

''அதுவரைக்கும் குழந்தை வாழாவெட்டியா என்கிட்டே இருக்கணுமாம்மா... இது ரொம்பக் கொடுமை. என் பொண்டாட்டி இவளைப் பார்த்துப் பார்த்து உருகிப் போறு... தயவு செஞ்சு பெரிய மனசு பண்ணுங்கோ....''

சுப்பு நெடுஞ்சாண்கிடையாக, பார்வதியின் காலடியில் விழுந்தே விட்டார்.

அப்பொழுதுதான் பஞ்சாமி வாய்விட்டு, அம்மாவைக் கலந்து ஆலோசிக்காமல் ஒரே தடவையாகச் சொன்னார்:

''உங்க பொண்ணை இங்கே விட்டிருந்தாலும், உங்களோட வச்சுண்டிருந்தாலும் எல்லாம் ஒண்ணுதான். இவ கழுத்துல தாலி கட்டின ஒரே பாவத்துக்காக — இவளை காலம் முழுக்கச்சோறுபோட்டு காப்பாத்தவேண்டிய கடமையில இருக்கேன். சும்மா சோறு போட வேண்டாம். அம்மா, உனக்கு ஒத்தாசையா சமையக்கட்டுக் காரியத்தை யெல்லாம் செய்யட்டும். அப்பாவோட திதிக்கு நான் பெண்டாட்டி இல்லாமச் செய்யற பித்ரு காரியம் எதுவும் பிரயோஜனப்படாது. அதனாலே என் கர்மாவைச் செய்ய இவ என்னோட இருக்கட்டும். மத்தபடி அவளுக்கும் எனக்கும் எந்த உறவும் கிடையாது. இவளைப் பெத்தவர் எப்போ நீ கேட்ட சீதனத்தை செஞ்சு போடறாரோ அதுக்கு அப்புறம்தான் எல்லாம்... அது அடுத்த மாசமேயானாலும் சரி, அம்பது வருஷம் கழிச்சானாலும் சரி.''

திகைத்துப்போய் நின்றுவிட்டார் சுப்பு.

''அப்படி விட உங்களுக்கு இஷ்டமில்லேன்னா தாராளமா உங்களோட அழைச்சுண்டு போங்கோ. நாங்க தடுக்கலே.''

பஞ்சாமி ஊஞ்சலில் வைத்திருந்த தடித்த புத்தகத்தைத் தூக்கிக் கொண்டு வாசலுக்கு நகர...

''மாப்பிள்ளை இப்படிச் சொல்லிட்டுப் போறாரே... அம்மா, நீங்களாவது கொஞ்சம் எடுத்துச் சொல்ல மாட்டேளா...''

—சுப்பு, பார்வதியிடம் அழாத குறையாய் வினவ,

''நான் என்னத்தைச் சொல்றது? அவன் தீர்மானிச்சான்னா தீர்மானிச்சதுதான்... இந்த மட்டும் உங்க பொண்ணை அவன் வீட்டுலே சேர்த்துண்டதே பெரிய விஷயம். உங்களுக்கு இஷ்டம்னா அவளை விட்டுட்டுப் போங்கோ. இல்லேன்னா கூட்டிண்டு போங்கோ. சும்மா இதையே பின்னிப் பின்னிப் பேசிண்டிருக்க என்னால முடியாது. உள்ளே ஏகப்பட்ட வேலையிருக்கு. சாப்பிட்டு

எழுந்தவ இன்னும் எச்சில்கூட இடலை. பத்துப் பாத்திரம் ஒழிச்சுத் தேய்க்கப் போடலை....''

ஜானகி மாமியாரைப் பார்த்துச் சின்னதாய்ச் சிரித்தாள்.

''நீங்க உட்காருங்கோம்மா. நான் எச்சில் இட்டு, பத்துப் பாத்திரத்தை ஒழிச்சுப் போட்டுட்டு வரேன்.''

அவள், பெட்டியை ஒரு பக்கமாக வைத்துவிட்டு, சமையலறைப் பக்கம் விரைய—

''அப்ப நான் வரட்டுமாம்மா...''

தந்தையின் குரல் தடுத்து நிறுத்தியது. ஒரு கணம் நின்று தலையை அசைத்தாள் ஜானகி.

''அந்தத் தாம்பாளத்திலே வச்சிருக்கிற பணத்தை எடுத்துண்டு போங்கோ.''

கட்டளையிட்டாள் பார்வதி.

''அப்ப தலை தீபாவளிக்கு நீங்களும் மாப்பிள்ளையும், ஜானகியும் ஊருக்கு வருவேள் இல்லையா...''

''இதப் பாருங்கோ... சும்மா திருப்பித் திருப்பிச் சொல்ல எனக்குப் பிடிக்கலை. நீங்க எப்ப வைரத் தோட்டையும் மீதி நகைகளையும் கொண்டு வந்து போடறேளோ அப்பத்தான் உங்க மாப்பிள்ளையா, உங்க வீட்டுப் படி ஏறுவான். இல்லைன்னா இல்லை தான்...''

பேச்சிழந்து நின்றார் சுப்பு.

'சீக்கிரமா இவா கேட்ட நகைகளோட வாங்கோ அப்பா....'

ஜானகி பார்வையாலேயே விடை கொடுத்தாள்.

வாசல் திண்ணையில் உட்கார்ந்திருந்த பஞ்சாமியின் முன்பு ஒரு நிமிடம் தயங்கி நின்றார் சுப்பு.

''அப்ப நான் போயிட்டு வரேன்.''

''உம்...''

''குழந்தையை இங்கேயேதான் விட்டுட்டுப் போறேன். அவ கண் கலங்காம... கண் கலங்காம....''

இதற்கு மேல் பேச முடியாமல் துக்கம் தொண்டையில் முள்ளாய்க் குத்தியது. மேல் துண்டால் முகத்தை அழுந்தத் துடைத்துக்கொண்டு நிமிர்ந்து மருமகனைப் பார்த்தவர் அந்த முகத்தின் பாறை இறுக்கத்தையும், துளிக்கூடக் கனிவு காட்டாத விழிகளையும் பார்த்தவர் — 'இதற்கு மேல் இவனிடம் பேசுவது முட்டாள்தனம்' என்று தோன்றியதாலோ என்னவோ பேசாமல் படி இறங்கி நடந்தார்.

இதுதான் ஜானகி — இந்த வீட்டுக்குள் அடி எடுத்து வைத்த கதை.

'என்னதான் மாப்பிள்ளை கெடுபிடியாகப் பேசினாலும் — இளம் வயசு. ஜானகியைப் பார்த்துண்டு சும்மா இருக்க முடியுமா... அதெல்லாம் அப்படித்தான் கோபமும் ரோஷமுமாப் பேசுவார். நாளாக ஆக எல்லாம் சரியாப் போயிடும்.'



**யோசனை**

முட்டைகளை வேக வைப்பதற்கு முன்னால் அதன் நுனியில் ஒரு மெல்லிய ஊசியால் குத்தி விடுங்கள். வேகும்போது அந்தச் சிறிய துவாரம் வழியாகக் காற்றுப் போகுமாதலால், ஓடு விரிசல் படாது.

---

சுப்பு இப்படித்தான் நினைத்தார். ஏன் பார்வதி கூட மனசுக்குள் மகனைப் பற்றி மேற்கண்ட மாதிரிதான் நினைத்திருந்தாள்.

வருடங்கள் ஓட ஓட இந்த வீட்டில் ஜானகி என்கிற பெயரில் வளைய வருகிறவளுக்கும் தனக்கும் கணவன் மனைவி என்கிற பந்தம் இருப்பதையே பஞ்சாமி மறந்து விட்டாரோ என்பது போல அவர் நடந்து கொள்ள...

மகனின் வைராக்கியத்தைக் கண்டு பார்வதி பிரமித்துப் போனாள்.

## 4

அப்பா எப்படியாவது வாக்களித்தபடி, நகைகளோடு வருவார் என எதிர்பார்த்து எதிர்பார்த்தே — எத்தனை நாட்களை, கொல்லைப்புறத் தாழ்வாரத்திலேயே கழித்துவிட்டாள் இந்த ஜானகி.

தபால்காரர் வீசிவிட்டுப் போகும் கார்டில் சுப்புவின் சாய்ந்த கையெழுத்தில்—அவளின் தேக சௌக்கியத்தைப் பற்றிய விசாரிப்பு இருக்கும்; மாப்பிள்ளை சௌக்கியமா என்கிற அக்கறை மிகுந்த கேள்வி இருக்கும்; உன் மாமியாரிடம் எங்கள் பணிவான நமஸ்காரத்தைச் சொல்' என்கிற அடக்கம் இருக்கும். மற்றபடி ஊரில் மாடு கன்று போட்ட விஷயமும், ஜானகியைப் பெற்றவளுக்கு வயிற்றில் ஆபரேஷன் செய்தாக வேண்டும் என டாக்டர் சொன்ன விவரமும் அவளின் கடைக்குட்டித் தங்கை புஷ்பவதியான விஷயமும், அவள் அண்ணாவுக்கு மூன்றாவதும் பெண்ணாகப் பிறந்த விவரமும் தான் இருக்குமே தவிர — தான் வருவதைப்

பற்றியோ, வைரத் தோட்டைப் பற்றியோ, மற்ற நகைகளைப் பற்றியோ பேச்சு மூச்சிருக்காது.

ஒவ்வொரு தடவையும் தபால் வந்தவுடன் ஜானகி விழுந்தடித்துக் கொண்டு ஓடிச் சென்று ஆவலுடன் வாங்கிப் படித்துப் பார்ப்பாள்.

''என்ன எழுதியிருக்கார் உங்க அப்பா?'' பார்வதி குத்தலாய்க் கேட்பாள்.

என்னத்தைச் சொல்வாள்? தடுமாற்றத்தை மறைக்க, படித்து முடித்த கடிதத்தையே இன்னும் நாலு தடவை படிப்பாள் அவள்.

''அம்மாவுக்குக் கர்ப்பப் பையிலே கட்டியாம். தஞ்சாவூருக்கு அழைச்சுண்டு போய் ஆபரேஷன் பண்ணணும்னு எழுதியிருக்கார்.''

''உம்... அப்புறம்?''

''அப்புறம் இந்தத் தடவை மழை சரியில்லாததால் மகசூல் அத்தனை திருப்திகரமாக இல்லேன்னு....''

''ஆமா, என்னிக்குத்தான் வாழ்ந்தது?''

'சுருக்'கெனச் சொல்லிவிட்டு எழுந்து உள்ளே போவாள் அவள்.

பஞ்சாமி....

இன்றுவரையில் அவளிடம் ஒரு வார்த்தை கூடப் பேசியதில்லை. ஏன், நிமிர்ந்து பார்த்ததுகூட இல்லை.

ஆரம்ப காலத்தில் ஜானகி உற்சாகமாகத்தான் இந்த வீட்டின் அத்தனை காரியங்களையும் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்தாள்.

அப்போது — 'என்ன இருந்தாலும் நான் இந்த வீட்டு மருமகள். அதை யாராலும் மறுக்க முடியாது' — என்கிற தன்னம்பிக்கை இருந்தது. 'என்றாவது ஒரு நாள் கணவரின் கனிந்த பார்வை தன்மீது விழும்' என்கிற சபலம் இருந்தது.

இப்போது இது எதுவுமே இல்லாமல் வெறும் யந்திரமாய், இந்த வீட்டின் சமையற்காரியாய், வேலைக்காரியாய் வருடா வருடம் பஞ்சாமியின் அப்பாவின் திதியன்று மாத்திரம் கணவருடன் சேர்ந்து நிற்கும் தகுதி பெற்றவளாய்... அவ்வப்போது பார்வதியின் வசைமொழிகளைச் சுமக்கும் சுமைதாங்கியாய்...

சுப்புவுக்குப் பெண்ணை வாழ வைக்க வேண்டும் என்கிற எண்ணம் இல்லாமலில்லை.

குடும்பஸ்தர். ஜானகிக்காக முதலில் தீவிரமாகத்தான் பணம் சேர்த்தார். ஆனால் துரதிர்ஷ்ட வசமாகச் சேர்த்தாற்போல் மூவாயிரம் ரூபாய் சேர்த்தால் அதைவிட இரட்டிப்பு பங்கு செலவு காத்திருப்பது வழக்கமாகி விட்டதே!

முதலில் பெண்டாட்டியின் வைத்தியச் செலவு. அதற்கடுத்தாற்போல இரண்டாவது மகளுக்குக் கல்யாணத்துக்காக ஒவ்வொரு சாமானாய்ச் சேர்க்க வேண்டிய அவசியம்.

ஜானகியின் அண்ணா ரகுவினால் பண உதவி எதுவும் செய்ய முடியாது. அவனுக்கே மூன்று பெண்கள். தன் கடைசித் தங்கையும், தனது மூத்த மகளும் ஒரே வயசில் இருப்பதால் இரண்டு பேருக்கும் சேர்த்துக் கவலைப்பட வேண்டிய நிர்ப்பந்தம் வேறு.

தங்கைக்குத் திருமணம் பேசி முடித்த கையோடு ரகு தந்தையோடு ஜானகி வீட்டுக்கு ஒரு முறை வந்திருக்கிறான்.

''கல்யாணத்துக்கு எல்லாரும் அவசியம் வரணும்...''

''நாங்க யாரும் வர முடியாது. உங்க பொண்ணைவேணாஅழைச்சிண்டு போங்கோ.''

''ஜானு....''

''நானும் வரலே. அவ கல்யாணத்துக்கு முன்கூட்டியே என் ஆசிர்வாதத்தைத் தெரிவிச்சுடறேன். போய்ச் சொல்லிடுங்கோ. அவளாவது சந்தோஷமா வாழட்டும்.''

ஜானகி அண்ணாவையும் அப்பாவையும் நிமிர்ந்து பார்க்காமல் — வெட்ட வெளியை வெறித்துப் பார்த்துக் கொண்டு சொன்னாள். கண்களில் ஏமாற்றம், ஒரு குழந்தையை மிட்டாயைக் காண்பித்து ஏமாற்றுவது போல் தந்தை ஏமாற்றி விட்டாரே என்கிற கோபம், தன்னைப் பற்றிக் கவலையே படாமல் அடுத்தவள் கல்யாணத்துக்கு அழைக்க வந்திருக்கிறார்களே என்கிற எரிச்சல்.... விழி முனையில் தீச்சுடராய்த் துள்ளிக் குதித்தது.

''ஜானு... உன் விஷயத்தை ஒரு ஒழுங்கு பண்ணாம அப்பா அடுத்தவ கல்யாணத்தை இழுத்து விட்டுண்டிருக்கக் கூடாதுதான். என்ன பண்றது... நல்ல வரன் வரப்ப முடிக்காமலும் இருக்க முடியலே.. நீ வேணா பாரு. அடுத்த வருஷம் அப்பாவும் நானும் தலையை அடகு வைச்சாவது உனக்குச் செய்ய வேண்டியதைச் செஞ்சுடறோம்.''

---

## யோசனை

ஊறுகாயைப் பாட்டிலில் போடுவதற்கு முன்னால் பாட்டில் மூடியை மெல்லிய பாலிதீன் காகிதத்தால் சுற்றிக் கொள்ளுங்கள். இல்லையென்றால் ஊறுகாயில் இருக்கும் உப்பு மூடியைத் துருப்பிடிக்கச் செய்யும்! அந்தத் துருவால் ஊறுகாயும் விரைவில் கெட்டுப் போகும்.



ரகு நம்பிக்கையுடன் சொல்லி, ஜானுவின் கண்ணீரைத் துடைத்து விட்டு அப்பாவுடன் கிளம்பினான். ஆனால் – சொன்னபடி செய்ய முடிந்ததோ.....

இரண்டாவது மகளின் கல்யாணத்தை முடித்த ஒரே மாதத்தில் சுப்பு எதிர்பாராத விதமாக ரத்த அழுத்தம் மிக மோசமாகி இறந்துவிட, குடும்பப் பொறுப்பு முழுவதும் ரகுவின் தலையில் விழுந்ததும், திண்டாடி விட்டான் அவன்.

எதைக் கவனிப்பான்.... அப்பாவின் சாவுக்குப் பிறகும் எஞ்சிநின்ற வைத்தியச் செலவையா... வேண்டாம் என விடவும் முடியாமல் டாம்பீகமாகச் செலவழிக்கவும் முடியாமல் அவனை அலைபாய வைத்த வைதீகச் செலவையா... இரண்டாவது தங்கையின் தலை தீபாவளி முதலிய வருடாந்தர பண்டிகைச் செலவையா! அதற்குப் பின் துளிக்கூட இடைவெளி இல்லாமல் தொடர்ந்து வந்த அவளின் வளைகாப்பு, பிரசவச் செலவையா... இத்தனை பெரிய குடும்பத்துக்கும் நித்திய பிரச்னையான சாப்பாட்டுச் செலவையா....

இத்தனைக்கும் நடுவில் ஜானகியை மறக்காமல் ஒவ்வொரு விசேஷத்துக்கும் அழைப்பு விடுத்து, தீபாவளி, பொங்கல் சமயங்களில் இருபதோ இருபத்தைந்தோ அவன் அனுப்புவதே பெரிய காரியம்.

'ஜானுவுக்கு ஒரு வழி செய்யணும்...'

'பாவம், அவ அங்கே என்ன பாடு படறாளோ....'

இப்படி எப்பொழுதாவது அவன் நினைப்பு வரும். வாய் விட்டு அரற்றுவான். அவளோடு சேர்ந்து குடும்பமே தலைக்குத் தலை பிரலாபிக்கும்... அத்தோடு சரி.

ஜானகி துக்கம் தாளாதபோது, ஐயோ இப்படி வாழ்நாள் முழுக்க வீணாகிறதே என்கிற பதைபதைப்புத் தோன்றுகிற போது கொல்லைப்புறத்தாழ்வாரத்தின் சின்ன மண்ணெண்ணெய் விளக்கின் துணையில் கார்டு ஒன்றில் தன் மனசில் உள்ள ஆற்றாமை முழுவதையும் கொட்டித் தீர்ப்பாள்.

'அண்ணாவுக்கு ஜானகி அநேக கோடி நமஸ்காரம். இப்பவும் வெகு நாட்களாக உன்னிடமிருந்து கடிதமே இல்லையே, ஏன், என்னை எல்லோரும் மறந்து போய்விட்டீர்களா? எனக்கு இங்கே சாப்பாடு துணிக்குக் குறைவில்லை. உன் மாப்பிள்ளை எனக்கு புதுத் துணி வாங்கித் தராவிட்டாலும் நாத்தனார்கள் ஊருக்கு வந்து விட்டுப் போகும் போது – அவர்கள் கட்டி அரைப் பழசாய் போன புடவைகளைக் கொடுத்து விட்டுப் போகிறார்கள். இந்த வீட்டில் நான் செய்கிற வேலைக்கு இரண்டு வேளை சோறு கிடைத்து விடுகிறது. இது இரண்டும் இருந்தால் போதுமென்று நீ நினைக்கிறாயா அண்ணா....?'

நான் தப்பாக ஏதாவது எழுதியிருந்தால் மன்னித்துக்கொள். கலாவும் குழந்தையும் சௌக்கியமா? எப்பொழுது கொண்டு போய் புக்ககத்தில் விடப் போகிறீர்கள்? அம்மா உடம்பு சாதாரணமாய் இருக்கிறாளா? மன்னியை நான் மிகவும் கேட்டதாய்ச் சொல்லவும். வேணும் ஆசீர்வாதம். இப்படிக்கு அன்புள்ள ஜானகி...'

இதற்கு மேல் கூடப் பிறந்தவனுக்கு எதை எழுத முடியும்? அவனுக்குத் தெரியாததா?

எப்பொழுது இவள் நகைகளோடு வந்து, என்று இவள் சந்தோஷமாய் வாழ்வது...

இதோ –

இன்றும், கூடத்தில் தன் மாமியார், அவள் பெண்களிடம் சொல்வது அத்தனையையும் காதில் வாங்கிக் கொண்டே ஜானகி தபால் கார்டில் முத்து முத்தாய்த் தன் மனப் பாரத்தை இறக்கிக் கொண்டுதானிருக்கிறாள்.

இத்தனை வருஷங்களுக்குப் பிறகும் அவள் தன் பிறந்தகத்திலிருந்து உதவியை எதிர்பார்ப்பது முட்டாள்தனம்தான் என்றாலும் இப்படி ஒரு கடிதத்தை எழுதிப் போட்டு விட்டுத் தற்காலிகமாகத் தன் வேதனையை மறக்கப் பழகிவிட்டாள் அவள்.

''இவ அண்ணா பொண்ணுக்குக் கூடக் கல்யாணம்னு பத்திரிகை வந்ததே, உனக்கு வந்ததா கசி....''

ஜானகியின் பெரிய நாத்தனார் மீனு, தன் தங்கையிடம் கேட்கிறாள்.

''உம், வந்தது. ஒரு கிரீட்டிங்ஸ் டெலிகிராம் அடிச்சோம்....''

''அதெல்லாம் ஒரு கல்யாணம் பாக்கி விடாமப் பத்திரிகை அனுப்பிடுவான் அண்ணாக்காரன். ஆனா, நேரே வந்து, தங்கையை



**யோசனை**

காபி டிகாஷன் மிஞ்சிவிட்டால் கீழே கொட்டி விடாதீர்கள். அதில் சிறிது சர்க்கரையைப் போட்டு மூடிவைத்து விடுங்கள். மறுநாள் புதிதாகப் போட்ட டிகாக்ஷன் போலச் சுவையாக இருக்கும்.

பார்த்துப் பத்து வருஷமாகிறது. எப்படி வருவான்? எந்த மூஞ்சியை வச்சுண்டு வருவான்? ஏன், வரிசையா தங்கைக்கும், பொண்களுக்கும் கல்யாணம் பண்ணி யிருக்காளே கையில் பசையில்லாமலேயா நடத்தியிருப்பான்...., அப்போ—இவருக்குச் செய்ய வேண்டியதை மட்டும் செய்யாம விட்டிருக்கான்னு என்ன அர்த்தம்? வேணும்னுதானே திமிரா இருக்கான். இருந்துட்டுப் போகட்டுமே.... யாருக்கென்ன நஷ்டம்? இவன் தங்கைதான் வாழாவெட்டியா நிக்கறு.''

பார்வதியின் குரல் இருட்டையும் மீறிக் கொண்டு உஷ்ணமாய்ச் சீறிவர — ஜானு, கடிதத்தைத் தலையணைக்கடியில் வைத்துவிட்டு 'சடக்'கெனப் படுக்கிறாள்.

விழிகள் — எதிர்த்தாற்போல் இருக்கும் சிறிய முட்டை விளக்கின் ஒற்றைச் சுடரை இமைக்காமல் பார்த்துக் கொண்டிருக்கிறது.

'அண்ணாவாலே இனிமே ஒரு குந்துமணி தங்கம் கூட வாங்க முடியாது. அவனைச் சொல்லிப் பிரயோஜனமில்லே. காலம் அப்படி.... அதுக்காக இன்னும் எத்தனை நாட்கள் இப்படியே காத்துண்டிருக்கிறது? பேசாமச் செத்துட்டாத்தான் என்ன... நான் இருந்துதான் என்ன சுகத்தைக் கண்டேன்....'

'இந்த முடிவுக்கு வர இத்தனை நாளா... இதை முன்னாடியே செஞ்சிருக்கலாமே...'

'சபலம்தான். நான் செத்துப் போனமான அடுத்த நிமிஷமே அண்ணா இங்கே வந்து, 'ஜானு, உன் கலி தீர்ந்ததுடி. இந்தா அவாகேட்ட நகை'ன்னு சொன்னா — கட்டையை விட்டு வெளியே வந்த பிராணனைத் திருப்பியும் தேகத்திலே நுழைக்க முடியாதேங்கற நப்பாசைதான்.'

◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆

## யோசனை

நெய் காய்ச்சுவதற்கு வெண்ணெயுடன் சிறிது சுத்தமான எண்ணெயைக் கலந்து விடுங்கள். நெய் கருகாமல் இருப்பதுடன் வாசனையுடன் நீண்ட நாள் இருக்கும்.



'இவர்தானாகட்டும். என்கிட்ட அன்பாப் பேச வேண்டாம். தொட்டு அணைக்க வேண்டாம். ஒரு பார்வை.... ஒரே ஒரு பார்வை... என்னை நிமிர்ந்து பார்த்தா என்ன... அது கூடவா தப்பு! நல்ல மனுஷர்! போன மாசம் இவர் அப்பா சிரார்த்தத்தின்போது தர்பை நுனியாலே இவர் தோளைத் தொட்டுண்டு நிக்கறப்போ இந்தப் பாழாப்போன மனசு என்னமா அழுதது... கையில இருந்த தர்ப்பையை உதறிட்டு அவரைக் கட்டிண்டு அழணும் போல நெஞ்சு அடிச்சண்டதே... திதிக்குச் சாப்பிட வந்த பெரியவாளை 'நன்னா சாப்பிடுங்கோ. திருப்தியா வேணுங்கிறதைக் கேட்டு வாங்கிக்கோங்கோ'ன்னு அவர் உபசாரம் பண்ணினப்போ—'அவாளை கவனிக்கத்தான் நான் இருக்கேனே... என்னைச் சித்த கவனியுங்களேன். என்னை இப்படித் தவிதவிக்க விட்டுட்டு நீங்க என்னதான் பித்ரு உபசாரம் பண்ணி என்ன பலன்'னு கேட்கணும்னு நாக்கு துடிச்சுதே....'

'இவருக்கென்ன, சதா சர்வ காலமும் நாலு குழந்தைகளுக்குப் பாடம் சொல்லித் தர்றதிலேயும், அம்மாவுக்கு வேண்டிய சிசுருஷைகளைச் செய்யறதுலேயும் அக்கா, தங்கை குழந்தைகளைச் சீராட்டறதிலேயும் காலத்தை ஓட்டிடறார். நான்தான் திண்டாடறேன். மனசை அடக்கி நல்ல விஷயங்கள்லே செலுத்தணும்னு பார்த்தாலும் முடியலையே... செக்கு மாடு மாதிரி ஐம்புலனும் இவரையே சுத்திச் சுத்தி வரதே...'

'போறும் சுத்தினது. சுத்தினதுலே கால் தேய்ஞ்சு, மனசு ஓய்ஞ்சு போனதுதான் மிச்சம். செக்கு மாடு சக்தியெல்லாம் போய் அடிமாடா ஆயிடுத்து. இனிமேல் இருப்பதே அநாவசியம்...'

அவள் மௌனமாய் அழுகிறாள்.

சாவது என்று தீர்மானித்து விட்டாளே தவிர நினைத்ததைச் செயல்படுத்த மனசு அத்தனை சீக்கிரத்தில் இடம் கொடுக்கவில்லை.

பார்க்கப் போனால் ஜானகிக்குப் பிள்ளையில்லை, பெண்ணில்லை. பிறந்த வீட்டு மனிதர்களின் மீது பற்று அற்றுப் போய் வெகு காலமாகிறது. பின் யாருக்காகத் தன் முடிவைத் தள்ளிப் போடுகிறாளாம்....

இதோ—எதிர்த்தாற்போல ஊஞ்சலில் உட்கார்ந்து, தன் மாணவர்களிடம் பிரமத்தைப் பற்றியும், கர்மாவைப் பற்றியும், வேதத்தைப் பற்றியும், சந்நியாசத்தைப் பற்றியும் இன்னும் ஜானகிக்குப் புரியவே புரியாத பெரிய விஷயங்களையெல்லாம் கடகடவெனச் சொல்லிக்கொண்டிருக்கிறாரே இந்தப் பஞ்சாமி...

தெரிந்தோ தெரியாமலோ இந்த மனிதரைச் சுற்றிப் பாசக் கயிற்றால் தன்னைச் சேர்த்துப் பிணைத்துக் கொண்டிருக்கிறாளே ஜானகி.....

''எந்த உயிர்களையும் துவேஷிக்கக்கூடாது. அவற்றிடம் சிநேகமாக இருக்க வேண்டும்,

இரக்கம் காட்ட வேணும். பகவத் கீதையில அத்வேஷ்டா ஸர்வ பூதா நாம்....''

பஞ்சாமியின் குரல் சற்று கரகரப்பானது. எடுப்பாய், கூடம் முழுவதும் ரீங்கரிக்கக் கூடியது. சுலோகங்களைச் சொல்லும்போது அதனூடே சங்கீதம் கலந்தாற்போன்றதொரு ரம்யம்...

இந்தக் குரலில் சொக்கிப் போய் உட்கார்ந்திருக்கிறாள் ஜானகி!

'ஆஹா...இந்தக் குரலுக்குடையவர் எனக்குச் சொந்தமானவர். இதுவேதான் எத்தனை பெருமை.....

இப்படி நினைத்து நினைத்து மயங்கிப்போய் உட்கார்ந்திருக்கிறாளே....

இருவருக்கும் இடையே பேச்சு வார்த்தை இல்லையென்றாலும் இவரின் விருப்பு வெறுப்பு முழுக்க இவளுக்கு அத்துபடியாயிற்றே.

'இவருக்குப் பிஞ்சு கொத்தவரங்காய் போட்டு பருப்புசிலி பண்ணினாப் பிடிக்கும். தினம் சாப்பிடறதைவிட ஒரு பிடி சாதம் கூடவே இறங்கும்.'

'அவர் சாப்பிட உட்காரறப்போ சர்வ ஜாக்கிரதையாப் பரிமாறணும். பாத்திரத்திலே கரண்டி மோதினாக்கூட – விருட்டுனு நல்ல பாம்பு மாதிரி தலையைத் தூக்கி எரிச்சலோடு சுத்தும் முத்தும் பார்ப்பார்.'

'ஊஞ்சல் மேலே அவரோட புத்தகங்கள் தான் கிடக்கலாம். யாராவது தெரியாத்தனமா பத்திரிகை எதையாவது வச்சுட்டா தூக்கி முத்தத்துல எறிஞ்சுடுவார்.'

'அவர் முன்னாடி துடைப்பமும் கையுமா யார் நின்னாலும் பிடிக்காது.'

'ராத்திரி வேளையில படுக்கப் போறதுக்கு முன்னாடி பாலுலே ரெண்டு வால் மிளகு தட்டிப் போட்டுக் கொடுக்கணும். அதுவும் அவர் கையிலே கொடுக்கக் கூடாது. ஊஞ்சல்ல வச்சுடணும்.'

இப்படி ஒன்று விடாமல் பார்த்துப்பார்த்து மௌனமாய் பஞ்சாமியின் தேவைகளைப் பூர்த்தி செய்வதே குறியாய் இதுதான் வரை வாழ்ந்தவளுக்குச் சட்டென இந்தச் சக்கரச் சுழற்சியிலிருந்து விடுபட முடியலே.

'இது என்ன அவஸ்தை?'

எதிர்த்தாப்போல பட்சணத்தை வைத்து விட்டுத் தொடக் கூடாதுன்னு குழந்தையை கையைக் கட்டி வைச்சாப்பல....'

'நான் வாசலுக்கு வந்தா இவர் கூடத்துக்கும் நான் கூடத்துக்கு வந்தா இவர் தன்னோட ரூமுக்கும் கண்ணாமூச்சி விளையாடிண்டு.... சே!'

'என்ன உங்களைத்தானே... நான் வேணா பிராணனை விட்டுடவா... நீங்க வேற உங்க அம்மா கேட்கிற சீரோட வர்றவளைக் கட்டிக்குங்கோ.... நிஜமா, நெஞ்சைத் தொட்டுச் சொல்லுங்கோ. நான் இருக்கிறதுல உங்களுக்கு இஷ்டமே இல்லையா...'

அவள் சமையலறையில் பம்பரமாய்ச் சுழன்று கொண்டிருந்தபோதும் நினைப்பெல்லாம் இதுதான்.



**யோசனை**

கறிகாய்கள் சீக்கிரமாக வேகவேண்டுமானால், சிறிது தேங்காயெண்ணெயைச் சேருங்கள். வாசனையாகவும் இருக்கும்.

---

'எப்படிச் சாகறது... கிணத்துல விழுந்தா? தூக்குப் போட்டுண்டா... செத்த பிறகு என் தேகத்தையாவது இவர் ஸ்பரிசிப்பாரோ? அப்படித் தொடுவார்னு கடவுளே இப்பவே. என்னைக் கொண்டு போய்விடேன்...'

வீடு முழுக்க உறவினர் கும்பலும் சத்தமும் சிரிப்புமாய் இருக்கும்போது இவள் மட்டும் இதையே நினைத்தபடி....

''இன்னிக்கு வைத்தீஸ்வரன் கோவில்லே குழந்தைக்கு முடியிறக்கப் போறோம். ஏம்மா, நீயும் ஜானகியும் வாங்களேன். பஞ்சாமி தான் என்னவோ வேலை இருக்குன்னு தட்டிக் கழிக்கிறான்.''

பெரியவள் மீண்டும் கேட்கிறாள்.

''நீங்க போயிட்டு வாங்கோ. எனக்குத் தள்ளலை. இவளை அனுப்பிட்டா அப்புறம் ஆத்துக் காரியங்களை யார் கவனிக்கிறது?''

பார்வதி மறுக்கிறாள்.

ஜானகி இது எதிலுமே பட்டுக்கொள்ளாமல் தன் வேலைகளில் மூழ்கிப் போகிறாள்.

''அப்போ மத்தியானமா ஜானகியை விட்டு ஸ்டோர் ரூம் பரண்லே இருந்து பெரிய தாம்பாளம் ரெண்டு எடுத்து வைக்கச் சொல்லும்மா. பாலிஷ் போட்டு உன் பேத்திக்கு வச்சுடலாம்னு பார்க்கறேன். இந்தக் காலத்திலே பித்தளைப் பாத்திரம் யார் வாங்குவா...சும்மா சாஸ்திரத்துக்குத்தான்''

''அதுக்கென்ன எடுத்து வைக்கச் சொல்றேன்.''

பார்வதி மகளிடம் தலையைப் பலமாய் ஆட்டுகிறாள்.

அன்று நடுப் பகல்.–

பஞ்சாமி ஊஞ்சலில் அரைத் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தபோது–

''பரண் மேலே ஏறி ரெண்டு பித்தளை தாம்பாளத்தை எடு. தட புடன்னு சத்தப் படுத்தாம, பதவிசா எடுக்கணும். சத்தம்

கேட்டு பஞ்சாமி முழிக்கக்கப் போறான்... ஸ்டோர் ரூம் கதவை வேறு சாத்திக்கோ'

பார்வதி ஜானகியிடம் கட்டளை இடுகிறாள்.

சமையலறையின் சுவர் மூலையில் சாய்ந்தபடி நோட்டுப் புத்தகத்தை விரித்து, ஸ்ரீராம ஜெயம் எழுதிக் கொண்டிருந்த ஜானகி, பென்சிலைக் கீழே வைத்துவிட்டு ஸ்டோர் ரூம் பக்கம் போகிறாள்.

உயரமான பரண். ஏணி வைத்தால் ஒழிய எட்டாது.

அண்ணாந்து பார்த்தவளின் கண்களில் பரணுக்குப் பக்கத்தில் விட்டத்திலிருந்து தொங்கிக் கொண்டிருந்த ஒன்றரை முழம் கயிற்றைப் பார்த்ததும் — வந்த வேலை மறந்து போகிறது.

ஸ்டோர் ரூம் பெரிசு. அந்தக் காலத்து வீடாதலால் நல்ல உயரம் வேறு.

எப்பொழுதோ கட்டிய கயிறு. குழந்தைக்குத் தூளிக்காகவோ, இல்லை உறி கயிறோ எதுவோ... இப்பொழுது தன் வாழ்க்கையை முடித்துக் கொள்ள இதுவே போதும் என்கிற நிலை அவளுக்கு.

உள்ளூர பயந்தான், நடுக்கம்தான்.

'தூக்குல தொங்கியும் முழுப் பிராணன் போகாம மத்தவா வந்து காப்பாத்திட்டா அவமானம் இல்லையோ....'

'இந்த மாதிரி துர் மரணம் அடைஞ்சா ஆவியா ஆவோம்னு எப்பவோ சினேகிதி ஒருத்தி சொல்லியிருக்காளே.... செத்தும் நிம்மதி இல்லாமப் போயா அலையணுமா'

'கயிறு கழுத்தை இறுக்கறச்சே, நம்மையும் மீறி சத்தம் போட்டுடுவோமோ... நாக்கு வெளியே தொங்கி... மூஞ்சி எப்படி இருந்தா யாருக்கு என்ன....'

அவள் துணிந்து விட்டாள்.

ஏணியைக் கொண்டு வந்து பரணில்சாய்த்துக்கொண்டு விறுவிறுவென ஏறுகிறாள். பரணின் விளிம்பில் கால் வைத்தபடி — ஒரு பழைய குடை கொண்டு — விட்டத்தில் இரும்பு வளையத்தில் தொங்கிக் கொண்டிருக்கும் கயிற்றைத் தம் பக்கம் இழுக்க முயல்கிறாள். அத்தனை கலவரத்தில் கயிறு கைக்கு அகப்படவில்லை. தனது நிலைமையை நினைத்துத் தனக்குத் தானே ஏற்பட்ட சுயபரிதாபத்தில் — கண்கள் வெள்ளமெனப் பெருகி — பார்வையை மறைக்க — பரணில் உட்கார்ந்தபடி கொஞ்ச நேரம் வாய் விட்டு அழுது தன்னை ஆற்றிக் கொள்கிறாள்.

'ஐயோ, நேரமாச்சே.... இன்னுமா தாம்பாளத்தை எடுக்கலேன்னு கேட்டுண்டே இவர் அம்மா வந்துடப் போறாளே'—

அவள், முந்தானையால் முகத்தை அழுந்தத் துடைத்துக் கொண்டு, மீண்டும் குடையை வீசி, கயிற்றைத் தன் பக்கமாக இழுக்க— இம்முறை சுலபமாய்க் கயிறு அவள் கைக்கு வர....

வேகமாய்க் கயிற்றை இழுத்தவள், தன்னை மீறி, பரணின் விளிம்பில் காலை வைக்க — இதுநேரம் வரையிலும் காற்று இல்லாத இடத்தில் உட்கார்ந்திருந்ததாலும் தன்னை மீறிய பயத்தினாலும் வியர்வையால் நனைந்து பிசுபிசுத்திருந்த பாதம் வழுக்கி விட—

தடாலென நிலைகுலைந்து கீழே விழுகிறாள்:

ஊஞ்சலில் படுத்திருந்த பஞ்சாமி, சத்தம் கேட்டதும், திடுக்கிட்டு எழுகிறார்.

''அம்மா, என்ன சத்தம்?''

''தெரியலையே, இவளைப் பரண் மேலே ஏறி ரெண்டு தாம்பாளம் எடுக்....''

அவ்வளவுதான். பஞ்சாமி தன்னை மறந்து ஸ்டோர் பக்கம் ஓடுகிறார்.

''ஜானகி.... என்னம்மா ஆச்சு.... அடிபலமா.. ஐயய்யோ.. ரத்தம் கொட்டறதே''

''நான் அப்பவே சொன்னேனே... இவளுக்குத் துளிகூட ஜாக்கிரதை போறாது... பரண் மேலே அத்தனை இடம் இருக்கறப்ப நுனியிலே போய்க் காலை வைப்பாளோ...''

பார்வதி பொரிந்து தள்ள—

''அம்மா, சித்தே சும்மா இரேன். அவளே எக்கச்சக்கமா அடிபட்டுண்டு கிடக்கா. இப்பப் போய்த்தான் இதையெல்லாம் சொல்றதா... பரண் மேலே பொம்மனாட்டியை ஏறச் சொல்லணுமா? எங்கிட்டச் சொன்னா, ஏறி எடுத்துத் தந்துட்டுப் போறேன் சரி, வழியைவிடு. இவளைத் தூக்கிக் கூடத்துல போடலாம்...''

பஞ்சாமி தாயை ஒரே போடாகப் போட்டு அடக்குகிறார்.

கீழே விழுந்ததில் பின் மண்டை பிளந்து ரத்தம் கொட்ட, கால் வேறு அசைக்க முடியாமல் எலும்பு முறிவால் உயிர் போகிற மாதிரி வலிக்க.....

''ஐயோ நகர முடியலையே...''

ஜானகி அழுகிறாள்.

## யோசனை

கறிகாய்களை வேகவைக்கும் போது, முதலில் தண்ணீரை கொதிக்க வையுங்கள். பிறகே காய்களைப் போடவேண்டும். அதிகமாக வேகவைத்து விடாதீர்கள். இதனால் காய்களில் உள்ள சத்து குறைந்து விடும்.



''நீ நகர வேண்டாம். சிரமப்படாதே. இரு. உன்னை அப்படியே தூக்கிண்டு போயிடறேன்.''

பஞ்சாமி ஒரு குழந்தையைத் தூக்குவது போல — பெரிய நிலமாலையைக் கையிரண்டிலும் பக்தியுடன் ஏந்துவது போல — ஜானகியைத் தூக்கிக் கொண்டு வந்து கூடத்தில் படுக்க வைக்க...

அவள் தன் நிலை மறந்து, வலி மறந்து— பஞ்சாமி தன்னை ஸ்பரிசித்ததால் ஏற்பட்ட சுகானுபவத்தில் பொல பொலவெனக் கண்ணீரைப் பெருக்க....

''வலி ஜாஸ்தியா இருக்கா..., கொஞ்சம் பொறுத்துக்கோ... இதோ போய் டாக்டரை அழைச்சுண்டு வரேன்...''

பஞ்சாமி துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு கிளம்புகிறார்.

அவள், அவரையே பார்த்தபடி படுத்திருக்கிறாள்.

'கடவுளே! இது என்ன, இவர் மனசில எனக்காகக் கருணை இருக்கா... ஒரேயடியா வறண்ட பாலைவனம்னு நெனைச்சேனே.... ஈரம் இருக்கும்னு இப்பத்தானே புரியறது.'

'இவர் இப்ப என்னைத் தொட்டுத் தூக்கினது மனுஷாபிமானத்தால செஞ்ச செயலாக்கூட இருக்கலாம். எனக்குப் பதிலா யார் இது மாதிரி விழுந்திருந்தாலும் இவர் இந்த உதவியைச் செய்வாரா இருக்கும்... அதனால என்ன... ஒரு சாதாரண மனுஷி கிட்ட காட்டற அதே பரிவும் பச்சாதாபமும் இவருக்கு என் மேலேயும் இருக்கும்னு தெரிஞ்சுடுத்தே.'

'டாக்டரை அழைச்சுண்டு வந்ததுக்கு அப்புறம், என் காயம் ஆறினதுக்கு அப்புறம் இவர் பழையபடி என்னைத் திரும்பிப் பார்க்காமலேயே இருக்கலாம். இருந்துட்டுப் போகட்டும். இந்த ஒரு க்ஷண நேரத்துக்கு இவர் என்கிட்ட காண்பிச்ச பரிவும், என் தேகத்தைத் தொட்டுத் தூக்கினதும் ஆறுதல பேசினதும் என் ஆயுசு முழுக்கப் போதுமே... இந்த சந்தோஷத்துலேயே நான் வாழ்நாள் முழுக்கத் தனியா கொல்லைத் தாழ்வாரத்திலேயே இருந்துடுவேன். இந்த உடம்புல தெம்பு இருக்கிறவரைக்கும் இவர் குடும்பத்துக்கு மாடா உழைப்பேன்....'

பக்கத்தில் நின்றபடி கோபத்தில் உறுத்துப் பார்க்கும் பார்வதியைப் பார்த்து மெல்லிசாகப் புன்னகைக்கிறாள் ஜானகி.

''உன்னால பரண் மேலே ஏற முடியலைன்னு முதல்லேயே சொல்லித் தொலைச்சிருக்க வேண்டியதுதானே... கீழே விழுந்து அடியையும் பட்டுண்டு மாமியார் பொல்லாதவன்னு எனக்குப் பட்டம் கட்டப் பார்க்கறியா....''

அவள் எரிச்சலுடன் கேட்கிறாள்.

ஜானுவின் புன்னகை மேலும் விகசித்தது.

''என்ன சிரிப்பு... அலையக்குலைய விழுந்து ஆம்படையானைக் கைக்குள்ள போட்டுண்ட சிரிப்பா....''



**யோசனை**

வேர்களில் கிடைக்கும் காய்களைத் மூடிய பாத்திரத்திலும், கீரைகளைத் திறந்த பாத்திரத்திலும் வேக வைக்கவேண்டும்.

---

இதற்கு மாத்திரம் ஜானகி மெல்ல வாய் திறந்து பதிலளிக்கிறாள்.

''இல்லேம்மா... நான் அகமுடையானைக் கைக்குள்ளே போட்டுண்டதா நினைச்சுச் சிரிக்கலே. என் அகமுடையானுக்கும் மனசுன்னு ஒண்ணு இருக்கு...அந்த மனசுக்குள்ள ஏதோ என் மேலயும் கொஞ்சம் பரிவு பச்சாதாபம் இருக்குங்கறதைப் புரிஞ்சுண்ட சிரிப்பு இது... இனிமே நீங்க என்ன சொன்னாலும் சொல்லாட்டாலும் என் ஆயுசு உள்ளவரை சிரிச்சுண்டுதான் இருப்பேன். ஜானகியோட சகாப்தம் முடியறவரைக்கும் இந்த ஒரு சம்பவம் போறும்...''

அவள் புறங்கழுத்தில் பிசுபிசுத்த ரத்தத்தைத் துடைத்து விட்டுக் கொண்டு புன்னகை மாறாமல் தலையணையில் முகத்தை அழுத்திக் கொள்கிறாள்.

'கடவுளே...கடவுளே... எனக்குச் சீக்கிரம் உடம்பு குணமாயிடணும். பழையபடி எழுந்து நடமாடணும். இந்தக் குடும்பத்துக்காக மறுபடியும் நான் ஓடி ஓடி உழைக்கணும். என் கணவருக்கு வேண்டிய எல்லா சிசுருஷைகளையும் செய்யணும். இவருக்கும் இந்தக் குடும்பத்துக்கும் நான் நிறையக் கடமைப்பட்டிருக்கேன். சந்திரனோட வெளிச்சத்தை மட்டும் ஆகாரமா உட்கொண்டு உட்கொண்டு உயிர் வாழற சாதகப் பறவை மாதிரிதான் நானும் இவரோட இந்த சின்ன பரிவுக்காகவும், பார்வைக்காகவும் இத்தனை நாள்வரைக்கும் ஏங்கித் தவமிருந்தேன். எனக்கு நிறையவே... நான் எதிர்பார்த்ததுக்கு மேலே கிடைச்சுடுத்து. இது போதும். என் ஜீவன் இருக்கிற வரைக்கும் இது போதும்...''

ஜானு முதன் முறையாகத் தான் வாழ வேண்டும் என்று பிரார்த்திக்கத் தொடங்குகிறாள்.

"நான் ஒரு குடும்பப்பெண்
எனவே நான் உடுத்தும் உடைகள் குடும்பப் பாங்காக இருக்க வேண்டும்."



MF-18 TAM

உங்கள் அந்தஸ்தே தனி
அதற்கேற்ற துணி

மஃபத்லால்
ஃபேப்ரிக்ஸ்



மஃபத்லால் இண்டஸ்ட்ரீஸ் ... மஃபத்லால் ஃபைன்

Regd. No. TN MS (S) 231

# FOR TOTAL RELIABILITY IN HIGH TENSILE FASTENERS: 'TVS'





Yes, for years, the name 'TVS' has been synonymous with total reliability in quality high tensile bolts, screws and nuts.

Precision engineered, cold forged and heat treated–the standard and special fasteners are manufactured to meet specific requirements.

What's more, Sundram Fasteners plans production to suit delivery commitments which will optimize your procurement efficiency. The result: a big saving in inventory costs.

Cars, trucks, buses, three-wheelers, scooters, motorcycles, tractors, industrial engines, tillers, diesel locomotives and earth-moving equipment are fitted with TVS fasteners as OE. They are also used in other non-automotive engineering applications.

'TVS' high tensile fasteners conform to Indian, ISO, American, British and DIN standards. Fasteners are also made to customers' specifications.

Available in diameters from 6 mm (¼") to 24 mm (1"), and in lengths from 12 mm (½") to 200 mm (8").

Sundram Fasteners—a single source for all your standard and critical special fasteners needs.

**Where fastening is critical 'TVS' the first choice**




Manufactured by:
**Sundram Fasteners Limited**
PADI, MADRAS 600 050

PHONE: 632701 GRAMS: SUNLOC
TELEX: 041-7549 FASN IN

SAA/SFL/3115